The [illegible] Research Institute Series [illegible]

# SHAKESPEARE'S

# MERCHANT OF VENICE

## IN TAMIL

*S. V. Kallapiran Pillai, B.A.*

# வெனிஸ் வர்த்தகன்



இது

எஸ். வி. கள்ளப்பிரான் பிள்ளை, பி. ஏ.,

இயற்றியது.



சென்னை:

மினெர்வா அச்சுக்கூடத்திற்

பதிப்பித்தது.

1904.

DEDICATED

TO

MY DEAR FATHER,

VAIGUNTHANATHAN KAVIRAYAR.

ஸ்ரீ

தந்தையர்கள் தநயருக்குத் தாமுதவ வேண்டுவதாம்
தகவில் செல்வம்
தந்தெனக்குத் தரணியிலொப் புயர்வில்சீர் வண்மைமிகு
நலமே நல்கிச்
சந்ததமும் அரிமலர்ப்பா தம்பணிந்து பின்னரதை
யடைந்து சென்ற
எந்தைதிரு வைகுந்த நாதனுக்கு நாணிதனைச்
சமர்ப்பித் தேனே.

# PREFACE.

IN these days of varied activity in different departments of knowledge, the Tamil Literature has had its share in no inconsiderable measure. In every language, the Grammar follows the Literature as a rule. Though the Tamil Grammar classifies the Literature into three divisions, namely, *Poetry proper, Music* and *Drama*, not a single work of the last class is extant in the whole range of Tamil Literature. There are, however, clear indications that such works originally existed in it, inasmuch as the commentators like Nachinárkkiniyar, Adiyárkkunallár and others quote from such works as *Kûtta Nûl, Mathivânar Nâtaka Tamil,* but these subsequently disappeared. At any rate, for a very long time Drama was wanting and its want was felt only by a small minority of Tamilians who were well acquainted with Tamil and Sanskrit, as in the latter they found the brilliant works of Kalidas, the Shakespeare of India. But as English education spread and the Tamil students came in contact with Shakespeare's dramas and saw the works of Shakespeare and Kalidas prescribed by the University for the degree examinations and read side by side in the College Classes, the want of similar works in the Tamil Literature was felt all the more keenly. It is always true that

never does time fail to supply an article when there is a demand for it. In 1891, the late lamented Professor P. Sundram Pillai, M.A., an accomplished Tamil Scholar and Philosopher, published his "Manonmaniam" an original drama in Tamil. This was the first work of its kind. Though this work was meant for the study and not for the stage, it was purely after the model of Shakespeare. After him, some took to writing dramas in original, some to translating the interesting and instructive dramas of Shakespeare and Kalidas, and some others to making adaptations from them. I have translated "The Merchant of Venice" one of the popular comedies of Shakespeare and my sole object in so doing is to place before the Tamil-knowing public and especially before the Tamil Pandits, a drama by Shakespeare as it is, and thereby to induce the Pandit class to enrich the Tamil Literature with new writings on this line. As the Pandits have generally more attraction for poetry than for prose, the poetical portion of the English Drama has been translated into poetry in *Agaval* metre which more or less approaches the English blank verse, and the prose portion into prose. Written, as it has been, in haste amidst diverse distractions, the work may, no doubt, be found to be capable of much improvement. But it is nevertheless published in the hope that it will not only invite more scholarly attempt in the same direction, but will give the Tamil public an

idea of what an English Drama is, how plots are developed, how different characters are represented and made to give general truths and morals in an attractive manner and how nature and natural scenes are truly depicted as they are. If this my object is gained even in the least, I shall feel more than compensated for my labour in this field. While translating this work, it was my aim throughout to make the rendering easy and intelligible and to bring out as accurately as possible the precise meaning of the original without at the same time falling into classical obscurity. I trust that even an average Tamil student will find no difficulty in following this work with ease and interest, not to speak of the Pandit class who will have nothing to complain of the style though the ideas here and there may be foreign to them.

My thanks are due to Mr. K. Kuppuswami Mudaliyar, B. A. of the Educational Department of the Secretariat, and to Mr. V. M. Satakoparamanuja Chariyar, Tamil Pandit of the C. S. M. College, Madras, for the help rendered to me in seeing this work pass through the Press and for many valuable suggestions they have made during the progress of this work.

CONJEEVERAM, }
*20th February,* 1904. }

S. V. K.

# முகவுரை.

பற்பல கலைகளும் விருத்தியாகின்ற இக்காலத்தில் தமிழும் விருத்தியடையாதிருக்கவில்லை. ஒவ்வொரு பாஷையிலும் இலக்கியம் தோன்றியபின்பேஇலக்கணமுண்டாகுதலுண்மை. தமிழ்நூலுடையார் இலக்கியத்தை இயல், இசை, நாடகம் எனப்பிரித்துளார். ஆகவே முற்காலத்தில் இம் முத்தமிழ் நூல்களுமிருந்தன வென்பதில் சிறிதும் ஐயமில்லை. நச்சினார்க்கினியர், அடியார்க்குநல்லார் முதலிய ஆசிரியர்களின் உரையாலும் இது வெளியாகும். ஆயினும் தற்காலத்தில் பழயனவாகிய நாடகத் தமிழ்நூல்கள் ஒன்றுமில்லை. அவை ஒழிந்ததற்குக்காரணமும் புலப்படவில்லை. இவ்வாறு நாடக நூல்களில்லாதிருந்தமை தமிழுக்கு ஒரு பெருங்குறைவாக நெடுங்காலமிருந்தது. இக்குறை தமிழோடு சமஸ்கிருதத்திலும் வல்லோருக்கே பெரும்பான்மை தெரிந்திருந்தது. பின்னர் ஆங்கிலபாஷை இத்தேசத்திற் பரவத்தொடங்க அப்பாஷையில் பயின்று அதிலுள்ள ஷேக்ஸ்பியரின் நாடகங்களைக் கற்றுணர்ந்தோருக்கும் இக்குறை புலனாயிற்று. குறைவு நிறையும் என்பது எக்காலத்தும் நிச்சயம். திருவனந்தபுரத்து மகாராஜா கல்லூரியில் தத்துவசாஸ்திர போதகாசிரியராயிருந்தவரும் ஆங்கிலத்தோடு தமிழிலும் வல்லவருமாகிய ம-rா-rா-ஸ்ரீ சுந்தரம் பிள்ளையவர்கள், 1891-ம் வருஷம் "மனோன்மணீயம்" என்னும் நாடகத்தையியற்றினர். அது ஷேக்ஸ்பியர், காளிதாசன் முதலியவர்களின் நாடகத்தைப்போன்றது. ஆயினும் அது அரங்கங்களில் நடிக்கத்தக்கதன்று. அதன்பின் அம்மாதிரியாக நவீன நாடகங்களியற்றவும், சமஸ்கிருத ஆங்கில நாடகங்களை மொழிபெயர்க்கவும், அவைகளை அநுசரித்துப் பிறவற்றை யெழுதவும் சிலர் தொடங்கினர். வடமொழியிற்

காளிதாசனுக்குச் சமமான ஆங்கிலநாடகக் கவியாகிய ஷேக்ஸ்பியர் செய்த நாடகங்களில் யாவரும் மெச்சும்நாடகமாகிய "வேனிஸ்வர்த்தகன்" என்பதை யானும் தமிழில் மொழிபெயர்த்தனன். ஆங்கில பாஷையிற் பழகாத தமிழ் வித்வான்கள் அப்பாஷையிலுள்ள நாடக மித்தன்மைய தென்றறிந்து தற்காலத்திற்குத் தக்கபடி நவீன நாடகங்களியற்றித் தமிழ்ப்பாஷையை விருத்திசெய்து தமிழருக்கு இன்பம் விழைத்து நல்லறிவூட்டல் மிக்க நலம் எனும் ஆசை தூண்ட இதனைச் செய்துளேன். தமிழ் வித்வான்கள் பொதுவாக வசன நூல்களைப் பெரிதும் கருதாராகலின் ஆங்கிலக்கவி பாட்டாக இயற்றியிருப்பதைப் பெரும்பான்மையும் அப்பாவினை ஒத்துவிளங்கும் அகவற்பாவிலும், அவர் வசனமாக வெழுதியிருப்பதை வசனத்திலும் எழுதியுள்ளேன். இந்நாடகத்தில் சிற்சில விடங்களில் காணப்படும் கருத்துக்கள் தமிழருக்கு நூதனமாயிருக்கும்.

எனது உத்தியோகத்திற்கிடையில் அவ்வக்காலங்களிற் கிடைத்த அவகாசத்தில் இதனை எழுதினேனாதலின், இதிலுள்ள பிழைகளையும் குறைகளையும் கற்றோரு மற்றோரும் பொறுத்துக்கொள்ளுவாராக.

இந்நூலினை அச்சிடும்போது உடனின்றுதவிய ம-ா-ா-ஸ்ரீ கல்குளம் - குப்புசாமி முதலியாரவர்கட்கும், ம-ா-ா-ஸ்ரீ வை. மு. சடகோபராமாநுஜா சாரியாரவர்கட்கும் வந்தனமளிக்கின்றேன்.

காஞ்சீபுரம்,
20—2—1904

ஸ்ரீ. வை. க.

# பொருளடக்கம்.

## ஷேக்ஸ்பியரின்

# சரித்திரச் சுருக்கம்.

---

"வெனிஸ் வர்த்தகன்" என்னும் நாடகமியற்றியவர் வில்லியம் ஷேக்ஸ்பியர் என்பவர். இவர் கி. பி. 1564-ம் வருடத்தில் இங்கிலாந்து தேசத்திலுள்ள வார்விக்ஷயர் என்னும் நாட்டில் ஆவன் நதிக்கரையிலிருக்கும் ஸ்ட்ராட்வோர்ட் என்னு மூரில் பிறந்தவர். மேரி ஆடேன், ஜான் ஷேக்ஸ்பியர் என்போர் முறையே இவர்தம் தாய்தந்தையர். அவர்கள் சாதாரண ஜீவனமுடையவர்கள். இவர் எழுவயதில் வித்தை கற்க ஆரம்பித்துப் பதினான்கு வயதில் பள்ளிவிட்டகன்றனர், அது முதல் இவர் ஒரு நியாயவாதியின் இலேககராக விருந்ததாகத் தோன்றுகிறது. 1582-ம் ஆண்டில் தன்னிலும் எழு வயது அதிகஞ் சென்ற ஆன்ஹாத்வே என்பவளை விவாகஞ் செய்து கொண்டார். 1587-ம் வருஷத்தில் "குவீன்ஸ் கம்பெனி" என்ற நாடகச் சபையார் ஸ்ட்ராட்வோர்டில் நடித்தனர். அச்சபையாருடன் இவரும் சேர்ந்து லண்டன் நகரஞ்சென்றூர். பிறகு நடித்தற்கு வேண்டும் நாடகங்கள் எழுதத்தொடங்கி, 37 நவீனநாடகங்களியற்றினர். அவைகளில் சில சந்தோஷமாய் முடிபவை. சில துக்கமாய் முடிபவை. சில சரித்திரக்கதைகளையுட்கொண்டவை. அவர் 1616-ம் வருஷம் தேகவியோகமானூர். அவர் சமஸ்கிருதத்தில் நாடகங்களியற்றியிருக்கிற காளிதாசனைப்போல் மிகச் சிறந்த நாடகக்கவி. அவருடைய நாடகங்களில் அருமை பெருமையுள்ள அநேக விஷயங்களடங்கி யிருக்கின்றன. இயற்கைப் பொருள்களின் வருணனைகளும், அக்காலத்து நடை உடை பாவனைகளும், மானிட சுபாவங்களும், நன்னீதிகளும், அந்நாடகங்களில்

நிறைந்துள்ளன. எந்த நாடகத்தை எவ்விடத்தில் வாசிக்கினும் ஆங்காங்கே ஆனந்தம் சனிப்பதுடன் நுட்பமான விஷயங்களும் தோன்றும். இவர் ஒரு வரகவியென்றே மதிக்கத்தக்கவர். ஆங்கிலேயபாஷையிலும் மற்றைய மேனுட்டுப் பாஷைகளிலும் இவருக்கு முன்னும் பின்னும் இருந்தவர்களிலும், இப்பொழுதிருப்பவரிலும் இவரே தலைமையான நாடகக்கவி. எனவே இவருக்கு ஒப்பாருமிக்காருமில்லை யென்பது தேற்றம். இவர் பண்கனிந்த சில பாடல்களும் இயற்றியுள்ளார்.



# கதையின் சுருக்கம்.



வெனிஸ் நகரத்தில் **அந்தோனியோ, பசானியோ** என்னுமிரண்டு நண்பர்களிருந்தனர். அவர்களில் **அந்தோனியோ** அதிகச் செல்வ முடையவராயும், அநேக கப்பல்கள் வைத்து வியாபாரஞ் செய்கிறவராயு மிருந்தனர். **பசானியோ** தமக்குள்ள திரவியமெல்லாம் போய் வறியராயிருந்தார். ஆயினும் பெல்மண்டு நகரத்தில் மிக்க ஐசுவரிய முடைய ஒரு பெண்ணைக் கலியாணஞ்செய்ய விச்சையுடையவராயிருந்ததால், **அந்தோனியோ** விடத்தில் 3000 பொன் கடன் கேட்டார். அவரிடத்தில் அக்காலத்தில் அவ்வளவு பொன் கையிலில்லை யாயினும், **ஷைலாக்** என்னும் ஒரு யூதனிடத்திலிருந்து கடன் வாங்கிக் கொடுக்கத் துணிந்தனர். அந்த யூதன் அதமாதமனானதால் அவனிடம்கடன்பெறப் **பசானியோ**வுக்குப் பிரியமில்லை. ஆயினும் சில நாட்களில் கப்பல்கள் வந்து சேருமென்கிற நம்பிக்கையிருந்ததால், **அந்தோனியோ** அந்தயூதனிடத்திற் கடன் வாங்க விசைந்தனர். அவனைக் கடன் கேட்க அவனும் வட்டியில்லாமல் ஜனங்களுக்குக் கடன் கொடுத்துத் தனக்கு வரும் இலாபத்தைக் கெடுத்துக்கொண்டிருந்த **அந்தோனியோ** தன் கைவசப்படுவதை யுன்னிக் கடன் கொடுக்கச் சம்மதித்தான். அகப்பட்டால் விடக்கூடாதென்கிற துர்ப்புத்தியால், குறித்த நாளில்தொகையைச் செலுத்தா விட்டால் **அந்தோனியோ**வின் ஹ்ருதயத்தில் ஓரிராத்தற்றசை யறுத்துக் கொள்வதே யந்தப் பணத்திற்கு ஈடென்று சாசன மெழுதி முடித்துக் கொண்டான்.

இப்பணத்தைப் பெற்றுக்கொண்டு **பசானியோ பெல்மண்டு** நகரத்திற்குச் சென்றார். அவ்விடத்தில் **போர்ஷியா** என்னும் ஒரு பெண்மணி யிருந்தாள். அவளுடைய தகப்பனார்

தெய்வ பக்தியிற்சிறந்தவராக விருந்ததால், பொன், வெள்ளி, ஈயம் இவைகளால் மூன்று பேழைகளை யமைத்து, ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பதுமையையும், அந்தப் பிரதிமைக்குத் தகுந்த வசனத்தையு மமைத்து, பொன், வெள்ளிப் பேழைகளில் கோரரூபப் பதுமைகளை வைத்தும், ஈயப் பேழையில் **போர்ஷியா**வின் பதுமையை வைத்தும் பேழைகளைப் பூட்டித் திறவுகோல்களை யவளிடத்தி லொப்புவித்து, அவளுடைய படமிருக்கிற பேழையைத் தெரிந்தெடுப்பவனை மணம் புரியும்படி, அவளுடைய அந்தியதசையில் அவளுக்கு ஆஞ்ஞாபித்துக் காலஞ்சென்றனர். அக்கட்டளையைச்சிரசாவகித்து, அவளும் தன்னை மணஞ் செய்யக்கருதி வருபவர்களைப் பேழையைத் தெரிந்தெடுக்கும்படி செய்துகொண்டு வந்தாள். அநேகர் வந்து தவறி விட்டனர். அவர்களி லொருவனாகிய **மோராக்கோ** தேசத்தரசன் பொற்பேழையைத் திறக்க அதில் தசையற்ற தலையிருந்தது. **ஆரகன்** தேசத்தரசன் வெள்ளிப் பேழையைத் திறந்தனன். அதில் வெருட்டி விழிக்கும் ஒரு மடத்தலை யிருந்தது. கடைசியில் **பசானியோ** ஈயப் பேழையைத் தெரிந்தெடுத்தனர். அதில் **போர்ஷியா**வின் பதுமை யிருந்தது. அவர் சரியான பேழையைத் தெரிந்தெடுத்துத் தன்னை மணந்துகொள்ள வேண்டுமென்ற அவாவுடையவளாக அவளிருந்தாள். கடவுளும் அவள் கருதியவாறு நடத்துவித்தனர்.

சரியான பேழையைத் தெரிந்தெடுத்ததாலுண்டான ஆனந்தத்தைப் பற்றி யிருவரும் மகிழ்ந்து பேசிக்கொண்டிருக்கையில் **வெனிஸ்** நகரத்திலிருந்து **சோலானியோ** என்பவன் ஒரு கடிதம் கொண்டு வந்து **பசானியோ**விடத்திற் கொடுத்தான். அதிலடங்கிய சங்கதி யவருக் கடங்காத்துயர்தர, **போர்ஷியா** அதற்குக் காரணம் வினவத் தமது நண்பராகிய **அந்தோனியோ** தமக்காக யூதனிடத்தில் 3000 பொன் கடன் வாங்கியதும், அக்கடனை மூன்றுமாதங்களில் தீர்க்காவிட்டால், தமதிருதயத்தி லோரிராத்தற்றசை யறுத்துக் கொடுக்க அவரைக்

கட்டுப் படுத்திக் கொண்டதும், அவருடைய கப்பல்கள் அது வரை வந்து சேராததால் அக்கடனிறுக்க அவர் சக்தியற்ற வராகவே **ஷைலாக்** அவர்மேல் வழக்குத்தொடர, அவர் கடன் செலுத்த மார்க்கமின்றித் தம் தசையைக் கொடுப்பதில் தாம் உயிரோடிருத்தல் சாத்தியமில்லாமலிருப்பதால் அவரிற ந்துபடுங்காலத்திற் **பசானியோ**வைக்கண்டுவிட்டுச் சாவதே தமக்களிருவருக்கு முள்ள கடன் தீருவதாக விருக்குமென்று அவர் எழுதியிருப்பதும் ஆகிய விஷயங்களைச் சொல்லித் துக் கமடைந்தனர். அம்மாது அவரைத் தேற்றி, 3000 பொன்னுக் குப் பன்மடங்கதிக மாகப் பொன்னளித்துக் கடனைத் தீர்த்து விடச்சொல்லி யவரை முன்ன ரனுப்பி, தான் தன் பந்துவும் நியாய விவாத நிபுணருமான **பேல்லாரியோ** என்பவருடைய வுடைகளைப் பெற்று, அவரிடத்திலிருந்து **வேனிஸ்** நகரதிபதி க்குக் கடிதமுங் கொண்டு ஒரு நியாயவாதியாகத் தான் அந் நியாய சபைக்குச் சென்றனள். அவ்விடத்தில் அவ்வதிபதியி ன் உத்தரவு பெற்று, இருதிறத்தினர் விவாதங்களையுங் கேட்டு **ஷைலாக்**கின் பத்திரப்படி யவன் பெறவேண்டுமென்று தீர்ப் புச்செய்தாள். அது அந்த யூதனுக்குப் பெருமகிழ்ச்சி தந்தது. ஆயினும்இச்சந்தோஷம்சிறிதுகாலத்திற்குள்மாறிவிட்டது. பத் திரத்தில் ஓரிராத்தற்றசைமாத்திரம் கொடுத்திருப்பதால் அத ற்குஇம்மி குறைவாகவாவது அதிகமாகவாவதுஅறுக்கக் கூடா தென்றும், இரத்தஞ்சிந்தக்கூடாதென்றும் தீர்ப்புச்செய்தாள். இவ்விதம்செய்வது முடியாதகாரியமென்றறிந்து முன்பு **பசானி யோ** கொடுப்பதாகச்சொன்னஅதிகப்பொன்னைத்தான்பெற்றுக் கொள்ளுவதாகவும்தசையையறுக்காமலிருப்பதாகவும்**ஷைலாக்** சொன்னபோது அதுஒப்புக்கொள்ளப்படவில்லை. பிறகு 3000 பொன்னையாவது தரவேண்டுமென்று கேட்டான். அதையும் கொடுக்கவில்லை. தன்னைச் சும்மா விட்டுவிடும்படி கேட்டான். அவ்விதமும் செய்யப்படவில்லை; ஏனெனில் வேற்றூரானொரு வன் உள்ளூரா னொருவனுடைய பிராணனுக் கழிவு தேடினல்

அவன் பொருளில் பாதி அந்நகராதிபதியைச் சேரவேண்டுமெ ன்றும், மிகுந்த பாதி அவன் எவனுடையவுயிருக்கழிவுதேடினு னோ அவனடைய வேண்டுவதென்றும், அவனுயிரோடிருத் தல் அந்நகராதிபதியின் கருணையைப் பொறுத்ததென்றும் அந் நகரின் சட்டம். அத்தண்டனைக்கு **ஷைலாக்** குட்பட்டவனு யினுன். அந்நகராதிபதி அவனுக்கு உயிர்ப் பிச்சையளித்தார். அவன் தாழ்மையுடன் நடந்தால் இராஜாங்கத்திற்குச் சேர வேண்டிய அவன் பொருளில் பாதியிற் சிறிது பாகத்தை யப ராதமாகப் பாவித்து மிகுதியை யவனுக்குக் கொடுப்பதாகவு முரைத்தனர். **ஷைலாக்** உடனே கிறிஸ்தவனுகி, யவனுக்குப் பின் அவனுடைய எல்லாச் சொத்துக்களையும் அவன் மகளும் மருமகனும் பெறுகிறதென்றொரு சாசனமெழுதி அவன் வை ப்பனேல், தமக்குச் சேரவேண்டிய பாகத்தைத் தாம் அவன் புத்திரிக்காக வைத்திருந்து கொடுத்து விடுவதாக **அந்தோனி யோ** சொன்னுர். இவைகளுக்கிசைந்து தன்னுயிர் தப்பிக் கொண்டு யூதன் வீடுபோய்ச் சேர்ந்தான். **அந்தோனியோ**வின் தப்பிப்போயிருந்த கப்பல்களெல்லாங்கரை சேர்ந்தன. அவர் சுகமடைந்தனர். **பசானியோ**வும் **பெல்மண்டு**க்குச் சென்று **போர்ஷியா**வுடன் சுகமாக வாழந்தனர். **போர்ஷியா**வின் தோழியாகிய **நெரிசா** என்பவள் **பசானியோ**வின்நண்பனு கிய **கிராஷியா**னேவை மணந்துசுகித்தாள். **ஷைலாக்**கின் பெண் **ஜெசிக்கா** என்பவள் **லாரேன்சோ** என்னும் ஒரு கிறி ஸ்தவனுடன் ஓடிப்போய் அவனை மணந்து வாழ்ந்தனள்.



## அவ்வக் களங்களிற் கூறியுள்ள

# விஷயச் சுருக்கம்.



அங்கம்.—I. களம்.—1. இடம். வெனிஸ் நகரம்.

**அந்தோனியோ** மனம் சஞ்சலப்படுகிறது. அதற்குக் காரணந்தெரியவில்லை. அவருடைய சிநேகிதர்களாகிய **சாலரினோவும் சோலானியோவும்** அவர் கப்பல்கள் பற்பல தேசங்களுக்குப் போயிருப்பதால் அவற்றைப் பற்றிய எண்ணமே பெரும்பான்மை அவரது மனக்கலக்கத்துக்குக் காரணமென்று சொல்லுகிறார்கள். அவை யில்லையென்று அவர் மறுத்துரைக்கின்றார். அப்பொழுது **பசானியோ, லாரென்சோ, கிராஷியானோ** இவர்கள் வருகிறார்கள். சிறிது சம்பாஷணைக்குப்பின் மற்றவர்கள் போய்விட **அந்தோனியோவும், பசானியோவும்** தனித்து நின்றனர். அப்பொழுது **பசானியோ** பெல்மண்டிலுள்ள **போர்ஷியாவைத்** தான் மணம்புரிதற்குரியன செய்வதற்காகத் தனக்கு 3,000 பொன் கடன் கேட்கிறார். **அந்தோனியோவிடத்தில்** அவ்வளவு தொகையில்லாததால் அந்நகரத்தில் எங்கேயாவது பணம் அகப்படுமா என்று பார்க்கச் சொல்லுகிறார்.

அங்கம்.—I. களம்—2. இடம். பெல்மண்டு நகரம்.

**போர்ஷியா** தனக்குத் தளர்ச்சி யுண்டாவதாகச் சொல்லுகிறாள். பேழைகளின் விஷயம கூறப்படுகிறது. அவள் வேலைக்காரி **போர்ஷியாவின்** வதுவைவேட்டு வந்திருக்கும் அறுவரையும் பற்றி அவளுடைய அபிப்பிராயத்தைக் கேட்க அவள் சொல்லுகிறாள், **பசானி**

யோ சரியான பேழையைத் தெரிந்தெடுக்க வேண்டுமென்ற அபிப்பிராயத்தைப் **போர்ஷியா** ஒரு விதமாகக் காட்டுகிறாள். **மோராக்கோ** தேசத்தரசன் வருகிறான்.

அங்கம்.—I. களம்.—3. இடம். வேனிஸ் நகரம்.

**பசானியோ** **ஷைலாக்கைக்** கடன் கேட்கிறார். **அந்தோனியோ** பிணையாக இருந்தால் கொடுப்பதாக அவரை ஒப்புக்கொள்ளுகிறான். அப்பொழுது **அந்தோனியோ** வருகிறார். தனக்கு அவர் பேரிலுள்ள வெறுப்பை ஷைலாக் தனக்குள்ளே பேசிக்கொள்ளுகிறான். தவணை கடந்தால் அவரிதயத்திலிருந்து ஓரிராத்தற்றசை யறுத்துக் கொடுப்பதாகச் சாசனம் எழுதி வாங்கிக் கொண்டு **ஷைலாக்** கடன் கொடுக்கிறான்.

அங்கம்.—II. களம்.—1. இடம். பேல்மண்டு நகரம்.

**மோராக்கோ** தேசத்தரசன் தன்னைப் புகழ்ந்து பேசுகிறான். விருந்திற்குப் பின் அவன் பேழைகளைத் தெரிந்தெடுக்கக்காலங் குறிக்கப்பட்டது.

அங்கம்.—II. களம்.—2. இடம். வேனிஸ் நகரம்.

விகடக் கூத்தனுகிய **லான்சிலட்காபோ** இதுவரை **ஷைலாக்** கிடத்தில் வேலைக்காரனாக விருந்து அவனை விட்டுப் **பசானியோ**விடத்தில் வேலை செய்ய நிச்சயிக்கிறான். அவன் போகும்பொழுது வழியில் தன் தகப்பன் **காபோ**வைப்பார்த்துப் பரிகாசமாகச் சிலது பேசுகிறான். இருவரும் பிறகு பசானியோவைக்கண்டு அவரிடத்தில் **லான்சிலட்காபோ** வேலைசெய்யக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். அவர் சம்மதிக்கிறார். பின்பு **கிராஷியானே** **பசானியோ** விடத்தில் தானும் **பேல்மண்டு**க்குவர உத்தரவு கேட்கிறார். அன்றிராத்திரி நண்பர்களுக்கெல்லாம் விருந்து செய்துவிட்டு உடனே **பேல்மண்டு**க்குப் புறப்படுவதாகப் பேசிக்கொள்ளுகிறார்கள்.

அங்கம்.—II. களம்.—3. இடம். வேனிஸ் நகரமே.

லான்சிலட் வேலையை விட்டுப் போய் விடுவதைக் குறித்து ஷைலாக்கின் குமாரத்தி ஜெசிக்கா என்பவள் விசனப்படுகிறாள். தான் ஆசைகொண்ட லாரேன்சோவுக்கு ஒரு கடிதம் அவனிடத்தில் கொடுத்தனுப்புகிறாள்.

அங்கம்.—II. களம்.—4. இடம். வேனிஸ் நகரமே.

கிராஷியானோவும் அவன் தோழரும், அன்றிரவு வேஷக்கூத்தாடத் தீர்மானிக்கிறார்கள். லான்சிலேட் கடிதத்தை லாரேன்சோ விடத்தில் கொடுக்கிறான். அக்கடிதத்தில் கண்டபடி தாம் செய்வதாக அவர் அவளுக்குச் சொல்லியனுப்புகிறார். ஜெசிக்கா தம்முடன் ஓடிப்போவதாக எழுதி யிருப்பதை அவர் தமது தோழருடன் சொல்லுகிறார்.

அங்கம்.—II. களம்.—5. இடம். வெனிஸ் நகரமே.

லான்சிலேட் ஷைலாக்கை விருந்திற்கு பசானியோ அழைத்ததாக அழைக்கிறான். ஷைலாக் தன் குமாரத்தியைத் தன் வீட்டைப் பத்திரமாகப் பார்க்கச் சொல்லிவிட்டு விருந்திற்குப் போகிறான்.

அங்கம்.—II. களம்.—6. இடம். வேனிஸ் நகரமே.

ஜெசிக்கா லாரேன்சோ வோடு ஓடிப்போகிறாள். காற்றுத் திரும்பி விட்டதால் பசானியோ உடனே புறப்பட்டுப் போகிறார். வேஷக் கூத்து நடக்கவில்லை.

அங்கம்.—II. களம்.—7. இடம். பெல்மண்டு நகரம்.

மொராக்கோ தேசத்தரசன் பொற்பேழையைத் தெரிந் தெடுக்கிறான். மூன்று பேழைகளின்மேல்

என்ன எழுதி யிருக்கிறது என்பதும், தெரிந்தெடுக்கப் போகிறவர்களுக்குள்ள நிபந்தனைகளும், வெற்றி தோல்வி எவ்விதம் தெரிவதென்பதும் வெளியாகின்றன. அவன் தவறிப்போகிறான்.

அங்கம்.—II. களம்.—8. இடம். வெனிஸ் நகரம்.

பசானியோவும் கிராஷியானோவும் கப்பல் ஏறிச் சென்று விட்டதாகவும், ஜெசிக்காவும் லாரேன்சோவும் ஓடிப்போய் விட்டதாகவும், அந்தோனியோவின் கப்பல்கள் நஷ்டமாகப்போய்விட்டன வாகவும், ஷைலாக் தன் மகளும் பணமும் தொலைந்து போனதைப் பற்றிப் பயித்தியம் பிடித்தவன்போல் பேசுகிறதையும் குறித்து சாலரினோவும் சோலானியோவும் பேசிக்கொள்ளுகிறார்கள்.

அங்கம்.—II. களம்.—9. இடம். பெல்மண்டு நகரம்.

ஆரகன் பிரபு வெள்ளிப்பேழையைத் தெரிந்தெடுக்கிறான். தவறிப்போகிறான்.

அங்கம்.—III. களம்.—1. இடம். வெனிஸ் நகரம்.

சாலரினோவும் சோலானியோவும் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ஷைலாக் வந்து தன் மகள் ஓடிப்போய் விட்ட சங்கதி அவர்களுக்குத் தெரியுமென்று சொல்லுகிறான். அவர்களிருவரும் அந்தோனியோ வீட்டிற்குச் செல்லுகிறார்கள். அப்பொழுது தியூபல் வந்து தான் தேடியும் ஜெசிக்காவைப் பார்க்கவில்லை யென்றும் அவள் பணத்தை வீண் செலவு செய்ததாகத் தெரிகிற தென்றும் அந்தோனியோவுக்கு நஷ்டம் வந்து விட்டதென்றும் ஷைலாக்கிடத்தில் சொல்லுகிறான்.

அங்கம்.—III களம்.—2. இடம். பெல்மண்டு நககரம்.

பசானியோ சரியான பேழையாகிய ஈயப் பேழையைத் தெரிந்தெடுத்து போர்ஷியாவைத் தன் மனைவியாக்கிக் கொள்ளுகிறார். அவள் அவருக்கு ஒரு மோதிரம்

கொடுக்கிறாள். அவர் அதை ஒரு காலத்திலும் பிரியாம விருப்பதாகச் சொல்லுகிறார். அக்காலத்தில் கிராஷியா னோ நேரிசாவைத் தன் மனைவியாகச் சம்மதம் பெற்றுக் கொள்ளுகிறார். அப்பொழுது சோலானியோ அவ்விடம் வந்து பசானியோ விடத்தில் அவருக்கு அந்தோனியோ அனுப்பின கடிதத்தைக் கொடுக்கிறார். அதில் ஷைலாக் அந்தோனியோவின் பேரில் வழக்குத் தொடர்ந்திருப்ப தைச் சொல்லி பசானியோவைப் புறப்பட்டு வரும்படி கூறியிருக்கிறது. போர்ஷியா கலியாணத்தை விரைவில் முடித்துக்கொண்டு வேண்டிய பணத்துடன் வேனிஸ் நகர் போகும்படி பசானியோவைப் பிரார்த்திக்கிறாள். பசானியோவுடன் வந்த ஜெசிக்காவையும்,லாரேன்சோ வையும் உபசரிக்கிறாள்.

அங்கம்.—III. களம்.—3. இடம். வேனிஸ் நகரம்.

அந்தோனியோ சிறைச்சாலையி லிருக்கிறார்.

அங்கம்.—III. களம்.—4. இடம். பேல்மண்டு நகரம்.

தங்கள் கணவர்கள் திரும்பிவரும் வரை தானும் நேரிசாவும் கன்னியா மாடங்களில் காலங் கழிக்க நினைத்திருப்பதாயும் அதுவரை தன் வீட்டு நிர்வாகங்களைப் பார்த்துக் கொள்ளும்படி லாரேன்சோ ஜெசிக்கா இருவருக்குஞ் சொல்லி போர்ஷியா தன் தோழியுடன் வேனிஸ் நகரத்திற்குப் புறப்படுகிறாள். படூஆ நகரத்திலுள்ள தன் பந்துவும் நியாயவாத நிபுணருமாகிய பேல்லாரியோ விடத்திலிருந்து உடைகளையும் ஒரு கடிதத்தையும் பெற்றுக்கொண்டு நியாய ஸ்தலத்திற்குப் போகத் தீர்மானிக்கிறாள்.

அங்கம்.—III. களம்.—5. இடம். பெல்மண்டு நகரமே.

அவர்கள் சென்றபின்பு, லான்சிலட் ஜேசிக்கா விடத்திலும் அவள்புருஷனிடத்திலும் பரிகசித்து விகடமாகப் பேசுகிறான். ஜேசிக்கா போர்ஷியாவைப்புகழ்ந்து கூறுகிறாள்.

அங்கம்.—IV. களம்.—1. இடம். வெனிஸ்நகரம்.

போர்ஷியா நியாயவாதியாகவும் நெரிசா இலேககனாகவும் சபைக்குச் செல்லுகிறார்கள். போர்ஷியா விவாதங்களைக் கேட்டுத் தீர்ப்புச் சொல்லுகிறாள். அந்நகராதிபதி அவளை விருந்திற் கழைக்கிறார். தனக்குள்ள அவகாசக் குறைவைச் சொல்லுகிறாள். அவளுக்கு வெகுமதி கொடுக்கும்படி அந்தப் பிரபு சொல்லுகிறார். அந்தோனியோ விடத்தில் கையுறை பெற்றுக்கொண்டு பசானியோவின் மோதிரத்தைப் போர்ஷியா கேட்கிறாள். அவர் அதைக் கொடுக்க இணங்கவில்லை. போர்ஷியாவும் நெரிசாவும் போய்விடுகிறார்கள்.

அங்கம்.—IV. களம்—2. இடம். வெனிஸ் நகரமே.

அந்தோனியோ கொடுக்கும்படி கேட்டுக்கொள்ள பசானியோ மோதிரத்தை யவளுக்குக் கொடுக்கும்படி கிராஷியானோவிடத்தில் அனுப்புகிறார். அவள் மோதிரத்தைப் பெற்றுக்கொண்டு நெரிசாவுக்கு ஷைலாக்கின் வீட்டைக் காட்டும்படி கிராஷியானோவைக் கேட்டுக்கொள்ளுகிறாள். [நெரிசா முன்னால் கிராஷியானோவுக்குக் கொடுத்திருந்த மோதிரத்தையிப்பொழுது பெற்றுக் கொண்டாள் என்று நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.]

அங்கம்.—V. களம்.—1. இடம். பெல்மண்டு நகரம்.

லாரேன்சோவும் ஜெசிக்காவும் சந்திரிகையைப் புகழ்ந்து பேசி வாத்தியம் முழக்கிக் கொண்டிருக்கும் பொழுது போர்ஷியாவும் நெரிசாவும் வந்து சேருகிறார்கள். உடனே பசானியோ கிராஷியானோ அந்தோனியோ இவர்கள் வந்து சேருகிறார்கள். சங்கதிகளைச் சுருக்கமாகப் பேசிக் கொள்ளுகிறார்கள். மோதிரங்களைக் குறித்து வேடிக்கையாகச் சண்டைபோட்டு, உண்மையைப் பிறகு அறிந்துகொள்ளுகிறார்கள். எல்லோரும சுகம் பெறுகிறார்கள்.



## நாடகப்பாத்திரங்கள்.



வேனிஸ் நகராதிபதி.

மொராக்கோ தேசத்தரசன் } போர்ஷியாவின் வதுவை
ஆரகன் பிரபு } நாடிச் சென்றோர்.

அந்தோனியோ—வேனிஸ் நகரவர்த்தகன்.

பசானியோ—அவன் சிநேகன். போர்ஷியாவதுவை நாடினோரில் ஒருவன்.

சோலானியோ.
சாலரினோ.
கிராஷியானோ.
சலீரியோ.
} அந்தோனியோ, பசானியோ இவர்களின் நண்பர்.

லாரேன்சோ—ஜெசிக்காவை விரும்பினவன்.

ஷைலாக்—ஒரு செல்வமுள்ள யூதன்.

தியூபல்—ஒரு யூதன். ஷைலாக்கின் சிநேகன்.

லான்சிலட் காபோ—ஷைலாக்கின் வேலைக்காரனுகிய ஒரு விகடக் கூத்தன்.

கிழட்டுக்காபோ—அவன் தகப்பன்.

லியானர்டோ—பசானியோவின் வேலைக்காரன்.

பால்த்தசார். } போர்ஷியாவின் வேலைக்காரர்கள்.
ஸ்டீவானோ. }

போர்ஷியா—ஐசுவரியமுள்ள ஒரு பெண்மணி. பேல்மண்டு தேசத்தவள்.

நேரிசா—அவள் வேலைக்காரி.

ஜெசிக்கா—ஷைலாக்கின் குமாரத்தி.

நகரவாசிகள், பிரபுக்கள், நியாயஸ்தல உத்தியோகஸ்தர், சிறைகாப்பாளன், வேலைக்காரர் முதலாயினோர்.

இடம்:—வேனிஸ், பேல்மண்டு நகரங்கள்.

# வெனிஸ் வர்த்தகன்.

## அங்கம்—க.

### முதற்களம்.

இடம் :—வெனிஸ் நகரத்தின் ஒரு வீதி.

[அந்தோனியோ, சாலரினோ, சோலானியோ வருதல்.]

அந்தோனியோ.—எனக்குள தாகிய இந்தச் சஞ்சலம்
உண்மை யாக உற்றவா றறிகிலேன்.
தமியேற் கிதுவே தளர்ச்சிதந் திடுமால்
உமக்கிது சோர்வினை உஞற்றுத லுரைத்தீர்.
என்னினு மெவ்வண மிஃதெனைத் தொடர்ந்தது,
எங்ஙனங் கண்டேன், எங்ஙன மடைந்தேன்,
எதனா லாயது, எதனிடம் பிறந்தது
என்ப தறிந்திலே னின்னு மியானே.
என்னை யறிதலே எனக்கரி தாம்வணம்
அறிவிலி யாக அமைத்ததிச் சஞ்சலம்.
சாலரினோ.—உம்மன முததியில் உழலா நின்றது.
விரிநீர்ப் பரப்பின் வியன்பெருங் காட்சியாய்

வாரிச் செல்வரா முமதுநா வாய்கள்
அற்ப வாணிக அம்பிக ளனைத்தும்
தம்மை வணங்கத் தாந்தருக் குற்றுங்
கதிசயம் பயக்கும் அழகிய பாயுடன்
மற்றவை யிகழ்வுறீஇ வல்லையிற் பறக்கும்.

சோலானியோ.—ஐயா, என்றன் அரும்பொரு ளனைத்தும்
வங்கந் தன்னி லுற்று வாரியில்
உளவே லென்மனம் உறையு மாங்கே
என்பது மெய்யே. எக்கா லத்து நான்
மாருதம் வீசும் மாதிரங் காண்பான்
புற்பறித் துயர்த்திப் பொருந்த நோக்குவன்.
துறைமுகப் பட்டினம் துறைப்பா லங்கள்
வங்கத் துறையிவை காணுறும் வண்ணம்
படத்தைப் பல்காற் பரிவுட னோக்குவன்.
உததியி லுய்த்தவென் னுடைப்பொரு டமக்கோர்
இடையூ றெய்துவித் திடவல தென்ன
அச்சம் பயக்கத் தக்க தனைத்தும்
இன்னலெற் கையம் இன்றி விளைக்கும்.

சாலரினே.—கொதிகுழம் பாறிக் குளிரவென் வாயால்
ஊது காற்றுப்பே ரூதை வாரியிற்
செயவல தீங்கைச் சிந்தையி லுறுத்தித்
தேகம் விதிர்ப்புறச் செய்வது திண்ணம்.
ஆடி தன்னில் அயிருறக் கொண்டு
கடிகையைக் காட்டுங் கவின்பெறு கன்னலைக்
காண்டொறுங் காண்டொறுங் கடனிலை நீரும்
புளினமு மெனதுகட் புலனுறத் தோன்றித்

தனநிறை நாவாய் தாழ்வுறீஇ மணலிற்
படிந்து பாய்மரம் படுவா னுகமெனும்
இடுகோட் டமுந்தி விடுவதைக் காண்பல்.
ஆலயஞ் சென்றுங் கணிதரு கருங்கற்
கூடகோ புரத்தைக் குறித்துநோக் குங்கால்
மெல்லிய கப்பலை மெல்லத் தொட்டிட்
டதிலுள சுகந்த மணத்தையும் வரன்றி
முந்நீ ரதனுண் முடுகுற வீசியும்
பட்டா டையினுற் பரவையைப் போர்த்தும்
சுருங்கச் சொல்லி லொருகணத் திருந்த
கணிப்பரும் பொருண்மறு கணத்திலை யாக அப்
பரவையிற் பயந்தரு பாறையை யுணர்த்தல்
ஒழியா தாகலின் அழிவு தரத்தகும்
இச்செய னேரிடில் இன்னல் புரிதரும்
என்னு மெண்ண மெற்குறு திருக்குமோ ?
அந்தோ னியோவுக் கவர்வா ணிபத்தில்
நினைவெலா மிருத்தலி னேர்ந்ததிச் சஞ்சலம்.
அப்படி யன்றெனச் செப்புத லொழிதிர்.

**அந்தோனியோ.**—அல்லவென் றுநானறைவதை நம்புதிர்
அதிட்ட வசத்தா லெனதரும் பொருளெலாம்
ஒருகலத் தாதல் ஓரிடத் தாதல்
இலை. அதுவல்லா லென்றன முழுவதூஉம்
இவ்வரு டத்தி னிலாபமட் டினிலிலை.—
அதனுல்,
சஞ்சலந் தருவது வாணிப மன்றுல்.

**சாலரினே.**—ஆயிற் காமமோ ?

அந்தோனியோ.— சிச்சீ யன்று.
சாலரினோ.—காமமு மன்றே? களிப்பிலீ ரதனாற்
கவல்கின் றீரெனக் கழறுதும். அதுபோல்
துக்க மெனக்குச் சற்றுமின் றுதலால்
நகைத்துக் குதித்து நற்பே ருவகை
உள்ளே னெனலும் உமக்கெளி தாமே.
இருமுக ஜானஸ் சாட்சியா, இயற்கை
அதிசயம் பயக்கும் அபூர்வ புருடரைத்
தனது படைப்பினிற் றந்திரா நின்றது.
ஒத்தூது வோர்க்கண் ணுற்றிடிற் றத்தைபோற்
சிரித்து நேத்திரஞ் சிறுகநோக் குவர்சிலர்.
விகட மிதுநகை விளைக்கத் தக்கதே
என நேஸ் தாரே இசைப்பா ரேனும்
சிறிதும் புன்னகை செய்வதே யில்லாக்
கடுத்த முகமுடைக் காளையர் சிலரே.
சோலானியோ.—கவுரவ முடையான் கனவான் இனத்தனு
நுவல் பசா னியோவும் கிராஷியா னோவும்
லாரேன் சோவு மிங்குப் போந்தனர்.
உமக்கு மங்கள முண்டா குக. யாம்
எம்மினு மினிய இஷ்ட ருடனுமை
விடுத்தகல் கின்றும்.
சாலரினோ.— எம்மினு மேலோர்
சார்ந்திடா விடினிச் சஞ்சல மதனைத்
தீர்த்துநீர் மகிழ்வுறச் செய்யுந் துணையும்
உம்மைவிட் டகலா துடனிருந் திருப்பேன்.

**அந்தோனியோ.**—உள்ளின னருமையா உமதுமேன்
மையையே.
உமது காரிய முந்த நீவிரிவ்
வமயங் கைக்கொண் டகல்கிறீர் போலும்.

[பசானியோ, லாரேன்சோ, கிராஷியானோ வருதல்.]

**சாலரினோ.**—கனமிகு செல்வரே, காலை வந்தனம்.

**பசானியோ.**—செல்வரே, வந்தனம். சேர்ந்துநா மெந்
நாட்
கோலா கலமாக் காலங் கழிப்பேம் ?
எப்போ தியம்புமின் ? ஏதில ராகநீர்
ஆய்வரு கின்றீர். போய்வர வேண்டுமோ ?

**சாலரினோ.**—உமக்கவ காசம் உளநாள் யாமும்
ஒழிவு காலமுண் டாக்குபு வருவேம்.

[சாலரினோ, சொலானியோ போதல்.]

**லாரேன்சோ.**—அந்தோனி யோவாம் அன்பரும் நீரும்
இருப்பதால் நாங்க ளிருவருஞ் செல்கிறோம்.
பசானியோப் பிரபுவே பகற்போ சனமாஞ்
சமயந் தன்னிற் சார்வுறு மிடத்தை
மனத்தினிற் பரிவா மறவா திருத்திரால்.

**பசானியோ.**—ஆயிடை யணுகற் கயரேன் சிறிதும்.

**கிராஷியானோ.**—அரிய அந்தோனியோ, சந்தோட
மாயிலீர்.
சனங்கள் மதிப்பைச் சாலவு மதித்தனிர்.
அத்தனை கவற்சி அதன்மேற் செலுத்தி
அதனை யடைபவர் அதனை யிழப்பர்.
வியப்புண் டாக்கும் மிக்க மாறுதல்

உம்மிடத் துளதா யிருத்த லுண்மையே.
**அந்தோனியோ.**—பாரினை யஃதுள படியே மதித்தேன்.
அம்புவி யென்னும் ஆடரங் கதனில்
நரரெனு மெவரும் நடம்புரி பவரே.
என்றன் கூத்ததில் இடருழந் திடுதலே.
**கிராஷியானோ.**—விளம்பிய கூத்தினான் விகடக்கூத்தனே.
நரைதிரை மூப்பாம் நாள்வந் தணுகினும்
களித்தா டுதலிலென் காலங் கழிக.
ஒன்றிய விசனத் தொவ்வோ ருயிர்ப்பினும்
இதயஞ் சிதைந்துசெந் நீரிழத் தலினும்
இன்மது மடுத்தென் னீரல்வெந் திடுக.
உதிர முட்டண மாயுள வொருவன்
சலவைக் கல்லாற் சமைத்தமு தாதைபோல்
இருத்தலேன் ? விழிப்பா யிருந்துந் துயிறலேன் ?
கடுகடுப் புடையனாய்க் காமா லைப்பிணி
படிப்படி யாகப் பற்றுவ தெவனோ ?
அந்தோ னியோநா னறைவது கேட்டிரால்.
உமையான் விரும்பி யுள்ளே னாகலின்
உம்பா லன்பா லுரைக்கின் றேனிதை.
“ ஆகாச வாணி யானே யாதலால்
நான்வாய் திறப்புழி நாய்குரை யற்க”
என்பவர் போல எவருந் தம்மை
மதியும் மௌனமும் மலிதரு விஞ்சையும்
உளரென மதித்தலை யுட்கொண் டவராய்ப்
பாலினிற் படரும் ஏடது போல்வும்
நீர்நிலை மூடிய பாசியை நேரவும்

முகத்திற் றெளிவை முகிழ்த்த லிலராய்
இருப்பரோர் சாரார். இவருட் சில்லோர்,
அந்தோணி யோவே அங்காந் திடுவரேல்
மூட ரிவரெனக் கேட்டோர் மொழிவர்.
அதனால் நரகவர் அடைவது நிச்சயம்.
ஆதலி னவர்நர கடையா வண்ணம்
மௌன மாக வதிகிறார். அதனால்
ஞானிய ரென்று ஞாலத் தோரால்
எண்ணப் படுவார். இஃதியா னறிவேன்.
மற்றொரு காலிதை வகுத்துக் கூறுவன்.
துக்கமாங் கெண்டையைத் தூண்டிலிட் டுலக
மதிப்பெனும் வராலைப் பிடித்திட மதியீர்.
வருதிர் லா ரேன்ஸோ, வாழ்க ! வாழ்க !
விருந்தாய பின்னர் விளம்புவல் விஞ்சிய
நயமொழி யெல்லாம்.

**லாரேன்ஸோ.—** நல்லது, நாங்கள்
போசன காலம் வரைபோய் வருதும்.
கிராஷியா னோவெனைக் கிஞ்சித் தேனும்
பேச விடாரப் பெற்றிமை யாலே
முன்னர் வகுத்து மொழிந்திடு மூக
விவேகரு ளொருவன்யா னாகுதல் வேண்டும்.

**கிராஷியானோ.—** இன்னு மென்னுட னிரண்டாண் டுளி
உந்நா வினிலுறு மொலியே கேளீர். [ரேல்

**அந்தோனியோ.—** போய்வர, இதனால் வாயாடுதலில்
வல்லே னாவேன்.

**கிராஷியானோ.—** வந்தன மையா,

மௌனமுப் பிட்டுலர் மாட்டுநா வுக்கே
சரத மாகத் தகுதியா மன்றே.

[கிராஷியானோ, லாரென்சோ போதல்.]

**அந்தோனியோ.**—அவர் பேசியதில் ஏதேனும் அருத்த முளதா ?

**பசானியோ.**—வேனிஸ்நகரத்தி லுள்ளோர் யாவரினும் கிராஷியானோ அருத்தமில்லாமல் அதிகமாகப் பேசுவார். அவருடைய சாதுரிய வசனங்களெல்லாம் இரண்டுமூட்டைப் பதரில் மறைத்து வைக்கப்பட்ட இரண்டு மணிகளையொக்கும். அவைகளைக் காண நாளெல்லாந் தேடவேண்டும். தேடிக்காணினும், பட்டபாட்டிற்குத்தக்க பயனிராது.

**அந்தோனியோ.**—புண்ணிய யாத்திரை விரதநீர் பூணக்
காரண மாகிய கன்னி யாருரைப்பீர்.
இற்றைக் குரைப்பலென் றெற்குவாக் களித்துவீர்.

**பசானியோ.**—அந்தோனியோ, என் னளவுக் கதிகமாம்
ஆடம் பரத்தா லங்கைப் பொருணனி
சிதைந்ததென் பதுநீர் தெரிந்த விடயமே.
அத்துணை யிடம்பவாழ் விப்பொழு தகற்றற்
கெத்துணை யெனினுமியா னிடரடை கின்றிலேன்.
இளமையில் வீண்செல வாலெனக் கெய்திய
கடனைநா ணயமாக் கழிப்பதென் கருத்தே.
அந்தோனியோ, உமக் கன்பிலும் பொருளிலும்
நனிகடன் பட்டவ னாகநா னுள்ளேன்.
உமக்கிங் கென்பா லுளதா மன்பால்

எனக்குள விருண மொழிக்கநா னெண்ணிய
சூழ்ச்சியு முபாயமுஞ் சொல்லுவன் றுணிந்தே.
அந்தோனியோ.—இவையெவை என்றனக் கியம்புதிர்
பசானியோ.
எஞ்ஞான் றுந்நீ ரிருப்பது போலவே
இவையுந் தகுதியு முளவா யிருப்பின்
என்கரு வூலம் யாக்கையென் னிதியெலாம்
உமதா பத்திற் குதவுத றிண்ணம்.
பசானியோ.—பாலனாப் பள்ளியிற் பயின்றிடு நாளில்
எய்தவோ ரம்பினை யிழப்பினஃ தெய்த
அதனிணை யம்பொன் றவ்வழி யதனுடை
விசையொடு குறிப்பா விடுவன் பன்முறை.[ளேன்.
இரண்டையுந் துணிந்தெறிந் திரண்டும் பெற்று
யானினி மொழிவதி லிலவஞ் சகம். என்
இளமைப் பழக்கம் எடுத்துரைக் கின்றேன்,
உம்பாற் பட்ட கடனனி யுளதே.
கடன்கொண் டனவெலாங் கருத்திலா இளமை
இடம்பந் தன்னா லிழந்தவன் யானரோ. [யில்
முன்னர்நீர் முடுகி யெய்த கணைவழி
இன்னுமோர் கணையன் பெய்தி யெய்திரேல்
இலக்கைக் குறித்தாங் கிருப்பே னாதலின்
இரண்டையும் பெறுவேன். இலையேற் பின்னைய
இருண மேனு மிறுத்துமுற் கடனைச்
செலுத்துங் காறுஞ் செய்ந்நன்றி மறவா
திருப்பே னென்பதி லையமொன் றின்றே.
அந்தோனியோ.—சாலவு நீரெனைச் சரியா அறிதிரால்.

ஆதலி னிங்ஙனென் னன்பினைப் பற்றிக்
கழிமொழி கழறிவீண் காலங் கழிக்கிறீர்.
என்பொரு ளனைத்தையும் வீணேயிறைத்தாங்
கிழைக்கும் பிழையினு மென்னா லியலும்
உதவிக் குலோப முறுமென் றயிர்த்தலில்
ஐயமில் பெரும்பிழை செய்தீர்மற் றன்றே.
யான்செயக் கடவதென் றெதைநீ ரெண்ணுதிர்
செப்பிடீர்; அதுசெயச் சித்தனா யுள்ளேன்.
ஆதலி னியம்புதிர்.

**பசானியோ.—** ஐசுவ ரியமுள
பெண்மணி யொருத்தி பெல்மண் டினிலுளாள்.
சுந்தர முடையாள், சுந்தர மதனிலும்
வியத்தகு நற்குண மேம்பா டுள்ளாள்
சின்னாண் முன்னவள் திருக்கணா லன்பைச்
சொல்லா துணர்த்துந் தூதுறப் பெற்றேன்.
நாரியி னாமம் போர்ஷியா. கேற்றோ
புத்திரி, புரூட்டசின் மனைவியாம் போர்ஷியா
தனக்கெட் டுணையுந் தாழ்ந்தவ ளல்லள்.
மாநிலத் தினிலவள் மாண்பறி யாரிலர்.
நாற்றிசை நின்றெழூஉம் நற்காற் றியாவும்
கடிமணம் வேட்டுறுங் கண்ணிய வான்களை
அவள்வயி னுய்க்கின் றன. அவ ளது சுருள்
பொன்னிறக் கூந்தல் பொன்மயிர்க் கற்றைபோற்
கன்னப் பொருத்திடைக் கவிழ்ந்தசை கின்றது.
அஃதவ ணகரமாம் பெல்மண் டதனைக்
கால்க்கோக் கரையாக் கருதிமற் றுங்கே

அளவில் லாவர ராயஜே சன்களைத்
தேடி வரச்செய் திடும். அந்தோனியோ,
அவர்களி லொருவனு னாதற்கு வேண்டுவ
அடையப் பெற்றிடி லையமி லதிட்டம்
எனக்குள தாம்வண மெய்துவன் சித்தி
எனுநன் முற்குறி யென்னுள்த் தெழுமால்.

**அந்தோனியோ.**—என்செல் வம்மெலா மிருங்கட லிடத்த,
அன்றியு மென்றன் அங்கையிற் பொருளிலை;
ஈடா வைத்திட் டெய்துதற் கியைந்த
சரக்கு மிலை. வேனிஸ் நகர்தனைச் சார்ந்தென்
நாணயஞ் செலத்தகு மளவுநீர் நாடுதிர்.
பெல்மண் டினிலே பேரெழிற் போர்ஷியா
இடமே குவதற் கிசையும் பொருளெலாம்
நண்ணுதற் பொருட்டென் னாணயந் தரவல
தெவ்வள வவ்வள வினையும் பெறுதிர்.
வல்லையி னேகி வான்பொரு ளுளவிடம்
நாடுதிர். நானும் நாடுவ லஃதே.
என்பெய ருக்குமென் னாணயத் தினுக்கும்
பெறலாம் பொருள்நீர் பெறத்தடை யிலையே.

[எல்லாரும் போதல்.]

---

## இரண்டாங்களம்.

இடம் :—பெல்மண்டு, போர்ஷியாவினுடைய மாளிகையின் ஓர் அறை.

[போர்ஷியாவும் நேரிசாவும் வருதல்.]

போர்ஷியா.—நெரிசா ! என்னுடைய சிற்றுடம்பானது இந்தப் பெரிய உலகவாழ்விலே உண்மையாக அலுத்துளது.

நேரிசா.—அன்புள்ள பெருமாட்டி ! உம் அதிட்டத்தின் அளவு அல்லலும் உளதேல் நீர் அலுப்படைய வேண்டியதுதான். ஆயினும் யான் கண்ணுற்றவரையில் உணவின்றிப் பட்டினியாக விருப்பவர்கள் போலவே மிதமிஞ்சிப் புசிக்கின்றவர்களும் பிணிக்கு ஆளாகின்றார்கள். ஆதலால் நடுத்தரமான நிலையிலிருப்பது அற்பசுகந் தருவதன்று. அபரிமித போசனம் வெகு சீக்கிரத்தில் நரையை உண்டாக்கும். மிதமான போசனம் ஆயுளை விருத்தி செய்யும்.

போர்ஷியா.—நல்ல நீதிகள் ! நன்கு உரைத்தனை.

நேரிசா.—இந்த நீதிகளைக் கைக்கொண் டொழுகின் மிக நன்றாயிருக்கும்.

போர்ஷியா.—நல்லவைகள் எவை எனத் தெரிந்துகொள்வது எவ்வளவு எளிதோ, அவ்வளவு அவைகளைச் செய்தலும் எளிதாயின் சிறு

கோயில்கள் பெருங்கோயில்களாயும் ஏழையர் குடில்கள் அரசருடைய அரண்மனைகளாயும் ஆகியிருக்கும். பிறருக்குப் போதிக்கிறபடி நடக்கிறவன் நல்ல குரு. என் போதனையின்படி நடக்கும் இருபது பெயர்களில் நான் ஒருத்தியா யிருப்பதைப் பார்க்கிலும் அவ்விருபது பெயருக்கும் போதனை செய்வது எனக்கு மிக எளிது. மனோவிகாரங்களை அறிவானது மாற்றும்பொருட்டு விதிகளை ஏற்படுத்தலாம். ஆனால் மனோ விகாரங்கள் அவ்வரையறைகளைக் கடந்து ஓடாநின்றன. வெறிகொண்ட இளமைப் பருவம் என்னும் முயலானது, நல்லறிவென்னும் முடவன் வீசிய வலையின் கண்களிலிருந்து குதித்து ஓடிவிடுகின்றது. ஆனால், இந்த நியாயங்கள் எனக்கு மணமகனை நானே தெரிந்துகொள்ளத்தகுந்த நியாயங்க ளல்ல. சுயம்வரம்? ஐயோ! எனக்கு இஷ்டமானவனை ஏற்றுக் கொள்ளவாவது இஷ்ட மில்லாதவனை மறுக்கவாவது எனக்குச் சுதந்தரமில்லையே! இவ்விதமாக, மாண்டுபோன பிதாவின் மரண சாசனத்தால் உயிரோடிருக்கிற பெண்ணின் ஆசை அடக்கப்பட் டிருக்கின்றதே! நேரிசா! நான் ஒருவனைத் தெரிந்து (கலியாணஞ் செய்து) கொள்ள வாவது வேறு ஒருவனை மறுக்கவாவது கூடாதவ

ளாக இருப்பது மிகுந்த கஷ்டமல்லவா ?

நேரிசா.—உம்பிதா எப்பொழுதும் புண்ணியவானாக இருந்தார். புண்ணியவான்களுக்கு, மரண காலத்தில் திருவருள் (வசத்தால் பௌடிய) ஞானம் உண்டாகிறதுண்டு. அவர்கருத்தைத் தழுவுகிறவனே உம்மைப் பெறும்பொருட்டாக அவர் ஆலோசனை பண்ணிப் பொன் வெள்ளி ஈயத்தினால் இந்த மூன்று பெட்டிகளைச் செய்து வைத்திருக்கிறாரன்றோ ? உள்ளபடி உம்மை விரும்புவோனன்றி ஏனையோர் அப்பெட்டிகளில் சரியானதைத் தெரிந்து அதிட்டாநுகூலச்சீட்டை எடுக்கமாட்டார்கள் என்பதிற் சந்தேகமில்லை. முன்னமே உம்மணம்வேட்டு வந்திருக்கின்ற இளவரசர்களிடத்தில் உமக்கு இருக்கும் பிரீதியின் தன்மையை யானறியச் சொல்லும்.

போர்ஷியா.—தயைசெய்து அவர்கள் பெயர்களைத் தனித்தனியாகச் சொல்லுவாய். நீசொல்லும் பொழுது அவர்களை நான் விவரித்துச்சொல்லுவேன். என்னுடைய விவரணத்திற்கேற்க என் அன்பை மதி.

நேரிசா.—முதலாவது நேபில்ஸ் தேசத்து இளவரசன்.

போர்ஷியா.—ஆ ! அவன் உண்மையாக ஒரு குதிரைக் குட்டியே. தன் குதிரையைப்பற்றிப் பேசுதலன்றி அவன் வேறொன்றுஞ் செய்கி

றதில்லை. தன் குதிரைக்குத் தானே இலாடம் தைக்கக்கூடும் என்பதைத் தன்னுடைய நற்பயிற்சிகளில் ஒன்றாக மதித்துள்ளான்.

நெரிசா.—பின்பு, பால்ட்டீன் பிரபு.

போர்ஷியா.—"என்னை ஏற்றுக்கொள்ளாயேல் வேறே எவனையாவது தெரிந்தெடு" (பார்ப்போம்) என்று மொழிபவனைப்போல் முகம் கடுத்தலைத்தவிர வேறொன்றுஞ் செய்கின்றிலன். விநோதமான கதைகளைக் கேட்குங்கால் அவன் புன்னகை செய்கிறதில்லை. இளமையிலேயே நற்பழக்கமின்றி இவ்வளவு துக்காக்கிராந்தனா யிருக்கிறவன் வயது செல்லச்செல்ல அழுமூஞ்சித்தத்துவசாஸ்திரியாவான் என்று அஞ்சுகிறேன். இவர்களில் ஒருவரை நான் கலியாணஞ் செய்து கொள்வதினும் வாயில் எலும்பையுடைய மண்டை யோட்டை மணமகனாகக் கொள்ளுவேன். இவ்விருவருள் எவர் கையிலும் அகப்படாமல் சுவாமி என்னைத் தப்புவிப்பாராக.

நெரிசா.—பிரெஞ்சு பிரபுவாகிய மான்ஷியர் லேபான் என்பவனைப்பற்றி என்ன சொல்லுகின்றீர்?

போர்ஷியா.—கடவுள் அவனை (மனிதனாக)ச் சிருஷ்டித்துவிட்டார். ஆதலால் அவன் மனிதனாகவே இருக்கட்டும். பிறரை இகழ்தல் உண்மையாகப் பாவம் என்று எனக்குத்தெரியும்.

ஆனால் ஆ ! என் ? நேபில்ஸ் தேசத்தானைப் பார்க்கிலும் நல்ல குதிரையை உடையவனாயும் பால்ட்டீன் பிரபுவைப்பார்க்கிலும் அதிகமாகக் கடுகடுக்கும் கெட்ட பழக்கமுள்ளவனாயும் இருக்கின்றான். அவன் ஒருமனிதனென்று அழைக்கிறதற்குரிய யோக்கியதை இல்லாதவனாயிருந்தாலும் எல்லா மனிதரிடத்துமுள்ள துர்க்குணங்களும் நிறையப்பெற்றவனாக இருக்கிறான். ஒரு சிறு குருவி பாடினால் உடனே குதித்துத் துள்ளுகின்றான். தன்னிழலோடு போரிடுவான். நான் அவனை மணந்தால் இருபது கணவரைக் கலியாணஞ் செய்ததுபோலாம். அவன் என்னை அசட்டை செய்தால் நான் அவனை மன்னிப்பேன். ஏனெனில் அவன் பித்தேறினாற்போல் என்னை நேசித்தால் அத்துணையாக நான் நேசமுறேன்.

நெரிசா.—இங்கிலாந்து தேசத்து வாலிப கனவானாகிய **வால்க்கன் பிரிட்ஜைப்** பற்றி யாது கூறுகின்றீர்?

போர்ஷியா.—அவன் பேசுகிறது எனக்குத் தெரிகிறதில்லை. நான் பேசுவதை அவன் அறிந்து கொள்ளுகிறதில்லை. ஆதலால் அவனோடு நான் பேசுகிறதில்லை என்று உனக்குத் தெரியும். அவனுக்கு லத்தீனாவது பிரேஞ்சாவது

இத்தலியனாவது தெரியாது. எனக்கு இங்கிலிஷில் தெரிந்தது மிகக் கொஞ்சமென்று நியாய ஸ்தலத்தில் வந்து நீ பிரமாணஞ்செய்வாய். அவன் ஒரு ரூப லாவண்ணிய முடையவனது (சித்திர) படமாக இருக்கின்றான். ஆனால் ஐயோ, பேச்சில்லாமல் கைக்கரணங் காட்டுகின்ற பதுமையுடன் யார் சம்பாஷிக்கக்கூடும்? அவன் எவ்வளவு தாறுமாறாக உடை உடுத்துக்கொண் டிருக்கின்றான்? தன் உட் சட்டையை இத்தலியிலும் வட்ட நிஜாரைப் பிரேஞ்சுதேசத்திலும் தொப்பியை ஜேர்மனியிலும் ஒழுக்கத்தை எல்லாவிடங்களிலும் அவன் வாங்கினான் என்று நான் நினைக்கின்றேன்,

நேரிசா.—அவனுக்கு அடுத்தவனான ஸ்காட்டிஷ் பிரபுவைப்பற்றி உம் அபிப்பிராயம் என்னை?

போர்ஷியா.—அண்டை அயலாருக்குள்ள அன்புள்ளவனாகவே இருக்கின்றான். இங்கிலிஷ் காரனிடத்திலிருந்து கன்னத்தில் ஓர் அறை வாங்கிக்கொண்டு தனக்குப் பலம் வரும்பொழுது திரும்பக் கொடுப்பதாக உறுதியாகச் சொன்னான். அவனுக்குப் பிரேஞ்சுக்காரன் பிணையாளியாகி அதன் கீழே இன்னும் ஓர் அறை கொடுக்கப் பெறுமாறு உறுதிசெய்திட்டான் என்று நினைக்கிறேன்.

நேரிசா.—சாக்சனிப் பிரபுவின் மருமானாகிய ஜேர்மன் இளைஞனை எவ்வாறு விரும்புகின்றனிர்?

**போர்ஷியா.**—அவன் காலையில் வெறியற்றவனாக இருக்கும்பொழுது மிகவும் கேவலமாயும், மாலையில் குடித்திருக்கும்பொழுது மிகக் கேவலமாயும், அதிக நன்றாய் (க்குடியாமல்) இருக்கும்பொழுது மனிதனைப் பார்க்கிலும் கொஞ்சங் குறைந்த கேவலமாயும், அதி கேவலமாயிருக்கும்பொழுது மிருகத்தைப் பார்க்கிலும் சற்று மேலானவனாயும் இருக்கின்றான். எனக்கு உறற்பாலதாகிய பெருங்கேடு உறினும் அவனைவிட்டு நீங்குவதற்குரிய உபாயந் தேடுவேன்.

**நேரிசா.**—அவனுந் தெரிந்தெடுப்பதாக வந்து சரியான பெட்டியைக் காட்டிவிடுவானேல் நீர் அவனைக் கலியாணஞ் செய்ய மறுக்கும்பட்சத்தில் உம் தந்தையின் எண்ணத்தை நிறைவேற்றாதவராகவேண்டுமல்லவா ?

**போர்ஷியா.**—ஆகையால், கேடு நேரிடாமல் அகற்றுவதற்கு, தப்பான பெட்டியின் மேல் ஒரு பெரிய கண்ணாடிப் புட்டி நிறைய ரேனிஸ் தேசத்துக் கொடிமுந்திரி இரசத்தைத் தயை செய்து வைத்துவிடு. உள்ளே பூதமும் வெளியே இந்த இரசமும் இருந்தால் இதைத்தான் தெரிந்தெடுப்பான் என்று எனக்குத்தெரியும். ஒரு குடியனுக்கு வாழ்க்கைப்படுவதைப் பார்க்கிலும், **நேரிசா**, நான் வேறே ஏதாவது செய்வேன்.

நேரிசா.—அம்மா ! இந்தப் பிரபுக்களில் எவரையாவது நீர் மணஞ்செய்ய நேரிடுமென்று பயப்படவேண்டாம். அவர்கள், தம் தீர்மானத்தை எனக்கு முன்னிட்டே தெரிவித்திருக்கிறார்கள். அதாவது, பெட்டிகளைத் தெரிந்தெடுப்பதற்காக உமது பிதாவினால் ஏற்படுத்தப்பட்டிருக்கிற நிபந்தனை யின்றி வேறெவ்விதமாகவாவது உம்மை விவாகஞ்செய்ய ஏது இருந்தாலொழிய உம்மை இன்னும் வருத்தப்படுத்தாமல் அவர்கள் வீடுகளுக்குத் திரும்புவதே.

போர்ஷியா.—சிபில்லா வயதுக்கு நான் இருப்பினும் என் தந்தையின் இஷ்டப் பிரகாரம் நான் அடையப் பெற்றாலொழிய டயானாவைப் போல் பரிசுத்த கன்னிகையாகவே நான் இறந்துபோவேன். இந்த ஒருமுட்டை நேசர்களும் இவ்வளவு புத்திசாலிகளாயிருப்பதைப் பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். இவர்களில் யார் பிரியினும் நான் விசனப்படத் தக்கவர் ஒருவருமில்லை. அவர்கள் சுகமாய்ப் புறப்பட்டுப் போகும்படி சுவாமி கிருபை செய்யவேண்டுமென்று நான் பிரார்த்திக்கின்றேன்.

நேரிசா.—உமது பிதாவின் காலத்தில் மாண்டிபிரேட் பிரபுவுடன் இங்கே வந்த பண்டிதனும் யுத்தவீரனுமாகிய ஒரு வேனிஸ் நகரத்தானது ஞாபகம் உமக்கில்லையோ ?

போர்ஷியா.—ஆம், ஆம். அப்படிவந்தவர், பசானியோ. அவரை அப்படித் தான் சொன்னார்கள் என்று நினைக்கின்றேன்.

நெரிசா.—அம்மா! மெய்தான். என் அஞ்ஞானக் கண்ணாற் காணப்பட்டவர்களி லெல்லாம் அவரே ஓரழகிய பெண்ணுக்கு மிகத்தகுந்தவர்.

போர்ஷியா.—அவர் ஞாபகம் எனக்கு நன்றாயிருக்கின்றது. உன்னுடைய புகழ்மொழிக்கு அருகர் என்றும் ஞாபகம் இருக்கின்றது.

[ஒரு வேலைக்காரன் வருதல்.]

என்ன? என்ன செய்தி?

வேலைக்காரன்.—தாயே! உம்மிடத்தில் விடை பெற்றேக ஏதிலர் நால்வரும் உம்மைத் தேடுகிறார்கள். ஐந்தாமவனாகிய மொராக்கோ இளவரசனிடத்திலிருந்து அவன் இன்றிரவு இங்கிருப்பதாகச் சொன்ன செய்தியுடனே ஒரு தூதன் வந்திருக்கிறான்.

போர்ஷியா.—மற்றைய நால்வருக்கும் விடை கொடுக்க விருப்ப மிருப்பது போலவே இந்த ஐந்தாமவனை உபசரிக்க முடியுமேல் அவன் வருவதைப்பற்றி நான் சந்தோஷமா யிருக்கவேண்டும். அவன் ஒரு மகாத்துமாவின் குணமும் பிசாசின் நிறமும் உடையவனா யிருப்பின் அவன் என்னைக் கலியாணஞ் செய்துகொள்வதைப் பார்க்கிலும் என் பாவஅறி

விப்பைக்கேட்டு என் பாவத்தைப் பரிகரிப்பவனாக இருக்கட்டும் என்று விரும்புகின்றேன். வருதி **நெரிசா.** ஏடா, முன்போ.

கடிவேட் டோர்செலக் கதவடைக் கும்மிடை
எனைநயந் தொருவன் வந் திடிக்கின் றுன்கடை.

[எல்லோரும் போதல்.]



## மூன்றுங்களம்.

இடம்:—வெனிஸ்நகரம், ஒரு பொதுவிடம்.

[பசானியோவும் ஷைலாக்கும் வருதல்.]

ஷைலாக்.—சரி. மூவாயிரம் ‘டக்கற்று’.

பசானியோ.—ஆம். ஐயா! மூன்றுமாதம் தவணை.

ஷைலாக்.—மூன்று மாதமோ? சரி.

பசானியோ.—நான் உமக்குச் சொல்லியபடி அந்தோனியோ அதற்குப் பிணையா யிருப்பார்.

ஷைலாக்.—அந்தோனியோ பிணையாயிருப்பார், சரி.

பசானியோ.—நீர் எனக்கு உதவி செய்யக்கூடுமோ? எனக்குச் சந்தோஷம் உண்டாக்குவீரா? உமது உத்தரம் நான் அறியலாமா?

ஷைலாக்.—மூவாயிரம்! டக்கற்று! மூன்றுமாதம் அந்தோனியோ பிணை!

பசானியோ.—அதற்கு உம்முடைய உத்தரம் என்ன?

ஷைலாக்.—அந்தோனியோ சரியானவர்.

பசானியோ.—அப்படி யல்லவென்று ஏதாவது கேள்விப்பட் டிருக்கிறீரோ?

ஷைலாக்.—ஆ. இல்லை, இல்லை, இல்லை, இல்லை. அவர் சரியானவரென்று நான் சொன்னதன் கருத்து அவர் பெறுமானவர் என்று நீர் அறிந்து கொள்ளவேண்டிய தென்பதே. ஆனாலும் அவருடைய பொருள்வருவா யெல்லாம் சந்தேகமாக இருக்கின்றன. அவ

ருடைய கப்பல்களில் ஒன்று புறப்பட்டு டிரிப்போலிக்குப் போயிருக்கின்றது. இன்னும் ஒன்று இண்டீசுக்குப் போயிருக்கின்றது. பரிவர்த்தன சாலையில் விசாரித்ததில், மூன்றுவது கப்பல் மெக்சிகோவிலும், நாலாவது கப்பல் இங்கிலாந்திலும், அவருடைய மற்றைப் பொருள்கள் மற்றும் அநேக இடங்களிலும் சிதறுண் டிருக்கின்றன வாகவும் எனக்குத் தெரிகின்றது. ஆனல் கப்பல்கள் பலகைகளாற் செய்யப்பட்டவைக ளன்றே? கப்பற்காரர்கள் மனிதர்களே யல்லரோ? தரை யெலிகளும் தண்ணீரெலிகளும் இருக்கின்றன. [அப்படியே] தரைக் கொள்ளைக் காரர்களும் கடற் கொள்ளைக் காரர்களும் இருக்கிறார்கள். சலத்தினுலும் காற்றினுலும் குன்றுகளினுலும் உண்டாகின்ற கெடுதியு முண்டு. ஆயினும் அவர் பெறுமானவர்தான். மூவாயிரம் டக்கற்று, அவரிடத்தில் நான் முறிபெற்றுக்கொள்ளலாம் என்று நினைக்கின்றேன்.

பசானியோ.—நீர் பெற்றுக்கொள்வதில் சந்தேகமில்லை.

ஷைலாக்.—நான் அப்படிச் செய்யக்கூடும் என்பதை உறுதிசெய்துகொள்ளவேண்டும். அந்தோனியோவினிடத்தில் நான் பேசலாமா?

பசானியோ.—எங்களுடன் புசிக்க உமக்குப் பிரியமிருந்தால் [புசிக்கச் சந்திக்கும் பொழுது பேசலாம்].

ஷைலாக்.--சரிதான். பன்றிக்கறி வாசனை யேற்றுக் கொள்ளவோ? உங்களுடைய நாசரத்துத் தீர்க்கதரிசி ஏவின பிசாசுகளுக்கு இருப்பிடமாகிய பன்றியைப் புசிக்கவோ? உங்களுடன் விற்பேன். உங்களுடன் பேசுவேன். உங்களுடன் நடப்பேன். இன்னும் இப்படிப் பட்டவைகள் எல்லாம்செய்வேன். ஆனால் உங்களோடு கூடப் புசிக்க மாட்டேன். உங்களோடுகூடக் குடிக்கமாட்டேன். உங்களோடுகூடச் சுவாமியை வணங்கமாட்டேன். பரிவர்த்தன சாலையில் என்ன விசேஷம்? இதோ வருகிறவர் யார்?

[அந்தோனியோ வருதல்.]

பசானியோ.—இதோ (வருகிறவர்) அந்தோனியோ.

ஷைலாக்.—(ஓர்புறம் ஒதுங்கிக்கொண்டு சொல்லுகிறான்.)

இச்சகத் தண்டற் காரனை யேய்ப்ப
அவனெவ் வாறு தோற்றுகின்றனன். அவன்
கிறிஸ்தவ னாதலால் வெறுத்தே னவனைநான்.
மிகுமட மையினால் வீணிலே காசை
வட்டியி லாமலே வழங்கி வெனிஸில்
எங்கட் கெய்தும் வட்டி யிராசியைத்
தணித்துள னாதலிற் சாலவும் பகைத்தேன்.

அவன் ஒரு முறைவசந் தகப்படு வானெனில்
அவன்மாட் டெனக்குள நெடும்பகை யனைத்தும்
தீரத் தெளியத் தீர்த்துக் கொள்வேன்.
எந்தூய்க் குலத்தை யிழித்துத் தூற்றி
என்னையு மென்னு ணயவா ணிகத்தையும்
அநீத வட்டி யென்றவ னியம்பிடும்
பாடு பட்டுநான் தேடும் பணத்தையும்
பழித்து வாணிகர் குழுத்தொறும் வாய்ப்பறை
அறைவன். அவனைநான் பொறுத்திடு வேனேல்
எனது குலத்திற் கென்றுஞ் சாபம்
உளதே யாகுக.

பசானியோ.— கேட்டிரோ ஷைலாக்.

ஷைலாக்.—இப்பொழு தென்பா லிருக்கும் பொருளெலாம்
எவ்வள வென்றுநா னெண்ணிப் பார்க்கிறேன்.
எனக்கு ஞாபக முளவரை யிக்கணம்
மூவா யிரம்டக் கற்று முழுவதூஉம்
என்வயி னில்லை. ஆயினு மென்கொல்.
என்குலச் செல்வத் தியூபலா மீபுரு
வேண்டிய வெறுக்கை கொடுப்பான். பொறும் பொறும்.
திங்க ளெத்தனை செல்லு மென்றனிர்.

(அந்தோனியோவைப் பார்த்து)

கடவுள் துணைசெய, கனமிகு மையா!
இப்போ தியாம் நுவன் றிட்டதும் பெயரே.

அந்தோனியோ.—வட்டிக் குக்கடன் வாங்கலு மீதலும்
இல்லை யாயினு மென்னண் பனுக்கு

விரைவி லவசியம் வேண்டி யிருத்தலால்
வழக்கத்தி னின்றும் வழுவுவல் ஷைலாக்.
யாம் வேண் டுவதெவ் வளவென் றறிவனோ.

ஷைலாக்.—மூவா யிரம் டக்கற்று

அந்தோனியோ.— மும்மதி.

ஷைலாக்.—அயர்ந்தேன். மூன்று மாதநீ ரறைந்தனிர்.
சரிசரி, நும்முறி நிபந்தனை நோக்குவம்.
என்றும்நீர் வட்டிக் கீதலும் வாங்கலும்
இலையெனப் புகன்றீ ரெனநா னெண்ணினேன்.

அந்தோனியோ.—அவ்வா றென்றும் யான்செய் திலனால்.

ஷைலாக்.—தன்றா யிழைத்த தந்திரச் செயலால்
எமாது புனித ஆபிரா மினுக்கு
மூன்றா ஞாதி யானயாக் கோபு—
ஆம் அவன் மூன்றாம் ஞாதியே யாகும்—
தனாது தந்தைக் கிளவலாம் லபனது
ஆடு மேய்த்திடு மந்நா ளதனில்—

அந்தோனியோ.—அவற்கென் ? வட்டி வாங்கின னாங்
கொலோ ?

ஷைலாக்.—பெற இலை வட்டி. பின்னீ ரியம்பிடும்
வண்ணம்நேர் வட்டி வாங்க விலையவன்.
இயாக்கோப் செய்ததை இயம்புவல் எண்ணுதிர்.
புள்ளியும் வரியும் பொருந்திய மறிகள்
யாக்கோ புக்கு மேய்ப்புக் கூலி
ஆகுக வென்றே யவனும் லபனும்
உடன்பா டுஞற்றிப் பின்பு சமர்த்தனும்
இடையன் சிற்சில இளவ ளார்களை

உரித்து நாற்ற முடைய இளம்பெண்
ஆடுக ளின்முன் னழுந்த வூன்றினன்.
அம்மறி கருப்ப மடைந்து பின்னர்க்
கருவு யிர்த்திடுங் காலக் குட்டிகள்
பன்னிறத் தனவாய்ப் பலபிறந் தன. அவை
யாக்கோ பினவா யாகி விட்டன.
ஊதியம் பெறற்கிஃ தோர்வழி யாயது,
அவற்குக் கடவு ளருளுமுண் டாயது.
மனிதன் திருட மதியா னாயின்
இலாப மீசன் கடாட்சமே யாகும்.

**அந்தோனியோ.**—ஐயா ! யாக்கோப் இயற்றிய வேலை
மனோரத வர்த்தக மன்றி யவனால்
எய்து வித்தற் கியலா ததுவாய்
நித்த னியம நிர் மாணமா யுளது.
வட்டி வாங்குதல் நலமென வகுப்பான்
இவ்வண மிசைத்தனை போலும். இலையேல்
உன்ற னிடத்துள செம்பொனும் வெண்பொனும்
ஆணொடு பெண்ணா டாமென வறைதியோ.

**ஷைலாக்.**—அஃதுநா னறையேன். ஆயினு மென்றனம்
அவைபோல் விருத்தி யாகிடப் புரிவன்.
கேளு மையா.

**அந்தோனியோ.**— கேளும் பசானியோ.
பேயுந் தன்பிடி வாத நாட்டச்
சத்திய வேதந் தனையெடுத் துரைக்கும்.
துராத்மா வொருவன் றாய சாட்சியம்
பகர்தல் நகைமுகப் பாதகன் போலவும்

அகத்து ளழுகிப் புறத்தில் அழகுடைப்
பழம்போ லவுமாம். பழுதாம் பொய்க்கும்
அந்தோ வெத்துணை வெளிப்பகட் டம்மா!
ஷைலாக்.—மூவா யிரம் டக் கற்று மும்மதி
பெருந்தொகை யாதலிற் பெறலாம் வட்டியை
எண்ணிப் பார்ப்பல்.
அந்தோனியோ.— சரி, ஷை லாக்கே,
பணமீந் தெமைக்கடன் பட்டிடச் செய்வையோ ?
ஷைலாக்.—அந்தோனி யோவே யடிக்கடி பன்முறை
எனது பணமும் வட்டியுஞ் சுட்டி
நாணயச் சாலையி னனியிகழ்ந் துளீர்நீர்.
எங்குல விருது பொறையே யாதலின்
எக்கா லமுமதை யென்றோள் விதிர்ப்புடன்
பொறுத்துளேன். என்னை நீர் பொய் மதக்கோள்
உடையாயென்று முயிருண் சுணங்கன்
என்றும் விளித்தே யென்னுடை யூத
மேலா டையின்மேல் மிச்சி லுமிழ்திரால்.
இத்தகைச் செயலெலா மெனதே யான
பணம்யான் வழங்கும் பான்மையி னாயின.
உமக்கிப் போதென் னுதவிவேண்டும் போன்ம்.
ஆதலி னென்வயி னடைந்தனிர், அடைந்து
“ ஷைலாக் கே நீ தருதி பணம்” என
உரையா நின்றனிர், உம்வாய்ப் புனலை
என்றன் முகத்தி லுமிழ்ந்தே யென்னையும்
உந்தம் வாயிலி னுற்றவே திலன்றன்
கள்ள நாயைக் கடையினின் றகற்றி
உதைப்பது போலென்னை உதைத்துளிர் நீரே.

நீர்பணம் வேட்டனீர். உமக்கு நானும்
நவில வேண்டுவ தெவன் ? ஞமலிக்கும்
பணமுள தோ ? பண மூவா யிரம் டக்
கற்றுக் கள்ளநாய் கடன்றரல் கூடுமோ ?
எனநா னியம்பிடி னேற்கா தாகுமோ ?
“ ஐயா, அடியேன் மீது நீரும்
உமிழ்ந்தீர் புதவா ரந்தனி லுமிழ்நீர்,
இன்ன நாளிலே யெனைநீர் உதைத்தீர்,
இன்னு மோர்முறை யெனைநீர் நாயென்
றிகழ்ந்தீ ரித்தகை மரியா தைக்கா
உமக்கித் துணைப்பண முதவுவல் யான்” என்
றடிபணி வுற்றியா னடிமையிற் றிறனுடன்
அதிவணக் கத்தோ டயலார் கேட்கொணு
வாய்ப்பேச் சுடனே வழங்கிட வேண்டுமோ ?

அந்தோனியோ.—நானுனை யின்னு நாயென விளிப்பேன்,
உமிழ்வே னுமிழ்நீ ருதைப்பேன் முன்போல்,
அளித்தற் கியைபுறிற் கடன்நின் அன்பர்க்
கியுமா றென்றனக் கீவதை யொழிதி நீ.
ஈனுந் தகைமை யில்லா வியல்புடை
உலோகந் தனக்கு வட்டியென் குட்டி
தனதுமித் திரன்றன் பாலெக் காலெந்
நேயன் பெற்றுளான் ? நீ யெனக் குப் பணம்
தருவையேல் சத்துரு தான்படுங் கடனைக்
குறித்த நாளிற் கொடாஅ தொழியிற்
றண்ணளி யின்றித் தண்டனை புரிபூஉ
வாங்கு மாபோல் வாங்குதி. இவ்வா
றன்றியீ யற்க.

ஷைலாக்.— ஏஏ பாரு நீர்.
கடுஞ்சினத் தவராய்க் கழறுதன் மதித்தீர்.
உமக்குநான் மித்திர னாகி யுமது
நேசமும் பெற்றுநீ ரெனையுட் படுத்திய
பங்க மறந்து பகரும் பொருளெலாம்
வட்டியே யின்றி வழங்கிட வேட்டேன்.
என்மொழி தன்னை யெள்ளிக் கேளீர்.
இதுநா னியற்ற வியைந்திடும் பட்சம்.

பசானியோ.—அங்ஙன முளதே லுதவியை யாமே.

ஷைலாக்.—இதைநா னியற்றுவல், என்னுட னேகியோர்
சாதன லிகிதன் தன்பாற் சாதனம்
எழுதி யிலச்சினை யிட்டீந் திடுவீர்.
நிபந்தனை யின்படி நியமித்த நாளில்
இடத்திற் றொகைதரத் தவறிற் றண்டனை
உம்முடம் பினில்யான் விரும்புறு முறுப்பில்
ஓரிராத் தல் தசை யறுத்தெடுத் துக்கொள்வ
தெனவிளை யாட்டா எழுதிநீ ரீகுக.

அந்தோனியோ.—உண்மையிற் றிருத்தியே. உரைத்தவா றேமுறி
வரைந்து தருவல். வரையிலாக் கருணை
யூதனுக் குளதென வுரைத்திடு வேனியான்.

பசானியோ.—எனக்கா வம்முறி யிலச்சினை யிடாதிர்
எனதின் மையிலே யான்வாழ்ந் திடுவேன்.

அந்தோனியோ.—அஞ்சன்மின் எனக் கணைய தண்டம்
வருவதே யன்று. வரைந்திடு மம்முறிக்
காலங் கழிதற் கொருமா சத்தின்முன்
இதுமுத லிருமதி யினில்முறிக் குள்ள

பணத்தின்மும் மும்மடி பணம்வரு மெற்கே.

ஷைலாக்.—ஆபிராம் பிதாவே ! ஆ ! இக் கிறிஸ்தவர்
தமது கடினமா நடத்தை தானே
அயலார் நினைப்பையு மையுறச் செய்வது.
குறித்தநாள் கழியி னபராதங் கொளீஇ
நான்பெறும் பேறென் னவில்வீர் தயையா,
ஒருநரன் றன்பா லோரிராத் தற்றசை
ஆடு மாடுவெள் ளாட்டின் றசைபோல்
எண்ணப் படுதலு மிலை. ஓ ரிலாபமும்
பயத்தலு மின்றால். பகர்வது கேண்மோ.
அவரன் பினையா னுதரித் துள்ளேன்.
ஆதலி னித்தயை புரிவா னடுத்தேன்.
அடைந்திட வேட்பின் அவ்வண மாகுக.
இலையேற் போமின். என்னன் புன்னி
இனியெனை யிகழா திருப்பீ ராக.

அந்தோனியோ.—ஆம் ஷைலாக்கே யம்முறி தருவேன்.

ஷைலாக்.—ஆயி னெல்லையி லடைதிரென் னுடனே.
சாதன லிகிதன் றன்னிடத் திந்த
விநோத பத்திரம் விரைவி லெழுதிடக்
கட்டளை கொடுப்பீர். யான்கடி தேகிப்
பணத்தைப் பையினி லிட்டுக் கவலையில்
காவற் சிறுவன் காத்திடு மென்மனை
சேமமா விருத்தல் தெரிந்து பின்னர்
உமைவந் தடைவேன்.

அந்தோனியோ.— உடனே செல்லுதி.

(ஷைலாக்போதல்.)

சாந்தமாம் யூதனே தயையுடை யோனாய்

ஆகின்றான். அவன் கிறிஸ்தவ னாகுவன்.

**பசானியோ.**—பாதகன் மனமும் பகருநன் மொழியும்
யான் நம் பேனே.

**அந்தோனியோ.**— எகுதும் வருதிர் நீர்.
தவணையாக் குறித்த தினஞ்சார் தற்கு
முப்பது நாட்கு முன்னரே யென்றன்
கப்பல்க ளெல்லாம் வருங்கரை தனக்கே.
இதிலோ ரச்சமு மில்லை யெனக்கே.

[எல்லோரும் போதல்.]

---

# அங்கம் - உ.

---

## முதற்களம்.

இடம்:—பெல்மண்டு; போர்ஷியாவினுடைய மாளிகையின் ஓர் அறை.

[எக்காளம் ஊத மொராக்கோ தேசத்து அரசனும் பரிசனங்களும் வருதல். போர்ஷியாவும் நேரிசாவும் ஏனையோரும் தொடர்ந்து செல்லுதல்.]

மொராக்கோ.—எனக்கணி போனு யென்னைப் புரந்திடும்
இலங்கொளி யாதவ னெனக்களித் திட்ட
காருடை யாகுமிக் கரிநிற மதனால்
என்னை வெறுத்திடேல். எலலியி னுருப்பம்
இம்மியும் பனியை யிளக்குதல் செய்யா
வடதே சத்துண் மலிபெரு வனப்புடை
ஒருவனும் யானு முனதன் பினுக்கா
யாக்கையி னிரத்த மெடுத்துக் காட்டுறின்
செந்நீர் மிகவுஞ் சிவந்த தவற்கோ
எற்கோ வெனவு முணர்த்துவா னெங்கள்
உடம்பினிற் குத்தி யுதிர மெடுத்து
நற்சான் றாக நன்கு விளக்குதும்.
வனிதாய் ! என்றன் வதன நோக்குபு
வெருவி யோடிய வீரர்கள் பலரே.
என்றே யத்தினி லியாவ ராலும்

கழிமதிப் புடைய காரிகை யார்பலர்
என்முகம் பார்த்திட் டெனவேட் டுள்ளார்
என்றுன் மீதுள வெனதுபே ரன்பாற்
சத்திய மாகச் சாற்றுகின் றேன்யான்.
சாந்த முடைய தையால்! நினது
மனங்கவர் வதற்கே யன்றி மற்றிங்
கென்னிற மாற்றற் கிச்சைகொள் ளேனே.

போர்ஷியா.—மங்கை யொருத்தி மணாளனை வரித்தலில்
நலமறி திறனுறு நாட்டஞ் சென்னெறி
முற்றும் யான்செல முடியாது ; அன்றியென்
விதியைச் சீட்டே விதித்தற் பாலதாய்
இருத்தலி னசையுற்றி யானே வரிக்கும்
என்றன துரிமையை யெற்கவீஇ தொழித்ததால்.
உமக்கியா னுரைத்துள வொண்ணெறி யாலெனைப்
பெறுபவ னுக்கே பெண்டி ராகத்
தனது மதியினா லெனது தந்தை
எனைத்தடை செய்யூ வேலியிட் டிலனேல்,
கனமிகு மரசே யிதுவரை யான்கண்
ணுற்றவர்க் கொப்ப நீருமென் னன்பிற்
கருக ராகவே யமைவுற் றிருப்பீர்

மோராக்கோ.—இதற்குமே வந்தன மியம்புவன் யானே
ஆதலி னென்ற னதிட்ட மறிவான்
பெட்டியைக் காட்டப் பிரார்த்திக் கின்றேன்.
சுலுத்தான் சோலைமானை மும்முறைக்
கொற்ற லந்தனில் வென்கொளும் பாரசீக
அரசையுஞ் சோபியா மவனையு மட்ட

இவ்வா ளாணையா வுனையா னெய்துவான்
வெருட்டி நோக்குந ரெவரையும் வெருட்டுவேன்;
இப்புவி தனிலே யிகலுளா ரெவரினும்
மிகுதிற லுடையனாய் வெல்லுவ னாங்கே;
குடாவடி பானுகர் குருளையைக் கவர்வேன்;
ஆகாரத்திற் கார்ப்புறு மெல்லையில்
அரிமடங் கலையு மமருக் கழைப்பேன்.
ஆனா லையோ! எர்க்குலீஸ் லிக்காஸ்
இவர்தமில் வல்லா னியாவ னென்று
அறிவான் சூதாட் டயர்வா ராயின்
மெலியவன் வென்றி மேவினு மேவுவன்.
ஆல்சிடீஸ் இவ்வா றவன்ற னாளாற்
றோல்வியெய் தினன். குருட் டதிட்டந் தூண்டிட
அருகன லாதோ னடையற் பாலதாம்
அதனைநா னடையா திழந்து துன்புறீஇ
இறப்பினு மிறப்பேன்

போர்ஷியா.— தேர்ந்திட முயல்கலிர்.
தேர்ந்திடிற் சித்தி பெற்றிலி ரேற்பின்
கடிமணம் வேட்டுக் கன்னிய ரெவரையும்
உசாவுத லொழிவே னென்ன முன்னரே
உறுதியா கச்சூ ளுரைத்திர். அவ் விரண்டில்
ஒன்றே தேர்ந்திடற் பாலது. அஃதோர்திர்;
ஆதலி னன் காராய்ந் தறிதிர்.

மொராக்கோ.—ஒழிவேன். வா. எனை விதியிட முய்த்தி.

போர்ஷியா.—தேவா லயந்தனக் கேமுற் செல்லுதிர்.
உணவின் பின்னா லும்முடைத் துணிவாஞ்

செயலைச் செய்திர்.

**மோராக்கோ.—** நல்ல வதிட்டம்
எய்துக வெனக்கே. மன்பதை தன்னுள்
உயர்வொப் பில்லா வருளுற் றேன். அலை
தத்தகைச் சாபம் பெற்றவ னாவேன்.

---

## இரண்டாங்களம்.

இடம்:—வெனிஸ் நகரம், ஒரு வீதி.

[லான்சிலட் கர்போ வருதல்.]

லான்சிலட்.—நிச்சயமாகவே என் எசமானுகிய யூதனுடைய வேலையை விட்டு நான் ஓடிப் போவதனுல் என் மனம் என்னை வருத்தப் படுத்தாது. பிசாசு முழங்கை யருகிலிருந்து கொண்டு 'காபோ! லான்சிலட் காபோ! நல்ல லான்சிலட்டே! நல்ல காபோ! நல்ல லான்சிலட் காபோ! உன் கால்களை உபயோகப் படுத்து. ஓட்டம் பிடிக்கத்தொடங்கு. ஓடிப்போ' என்று சொல்லி என்னை ஏவாநின்றது. மனச்சாட்சியோ, 'கூடாது. யோக்கியமான லான்சிலட்டே! கவனமாயிரு. உண்மையான காபோ! கவனமாயிரு. யோக்கியமான லான்சிலட் காபோ! ஓடாதே. ஓடுவதை இகழ்வாயாக' என்று சொல்லாநின்றது. நல்லது, மிக்கமனவலியுள்ள பிசாசு 'மூட்டைகட்டு' என்று கட்டளை இடுகின்றது. பிசாசு 'போபோ' என்று சொல்லுகின்றது. 'உனக்குப் புண்ணியமுண்டு. உன் மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு ஓடு' என்று பிசாசு சொல்லுகின்றது. என் மனச்

சாட்சி என் இதயத்தின் கழுத்தில் தொங்கிக்கொண்டு மிகுந்த விவேகத்துடன் 'எனது யோக்கியனான தோழனாகிய லான்சிலட்டே! நீ ஒரு யோக்கியனுடைய குமாரன். அதிலும் நீ ஒரு பதிவிரதையின் புத்திரன். லான்சிலட்டே ஓடாதே' என்று சொல்லுகின்றது. மனச்சாட்சி, போகாதே என்று சொல்லுகின்றது. பிசாசோ, போவென்று சொல்லுகின்றது; மனச்சாட்சியே! உன் ஆலோசனை நன்றாயிருக்கின்றது என்று நான் சொல்லுகிறேன். பிசாசே உன் அபிப்பிராயம் நன்றாயிருக்கின்றது என்று நான் சொல்லுகிறேன். என் மனச்சாட்சி விதிக்கிறபடி செய்வதானால் ஒருவகைப் பிசாசாக இருக்கிற (இப்படி என் எசமானனைப் பற்றி நான் சொல்வதற்காகக் கடவுள் என்னைப் பொறுப்பாராக) என் எசமானனாகிய யூதனை விட்டுப்போகாமல் நான் இருக்கவேண்டும். பிசாசுசொல்லும் வண்ணம் செய்வதானாற் பிசாசின் வடிவமாயிருக்கிற யூதனை விட்டு ஓடிப் போகவேண்டும். நிச்சயமாக யூதன் பேயின் அவதாரமே. உண்மையாகப் பேசும்போது என்மனச்சாட்சி என்னை அந்த யூதனைவிட்டுப் போகாம லிருக்கும்படி சொல்வதனால் அது கடினமான மனச்சாட்சியே. பிசாசுதான் மிகப்பட்சமான புத்தி சொல்லுகின்

றது. பிசாசே! நான் ஓடுவேன். உன் சொற்படி என் கால்கள் ஓடும். நான் ஓடுவேன்.

(கிழட்டுக்காபோ ஒருகூடையோடு வருதல்.)

காபோ.—ஐயா! இளைஞரே! யூதன் வீட்டிற்கு வழிஎது? தயைசெய்து சொல்லும்.

லான்சிலட்.—(தன்னுள்) தெய்வமே இவர் உண்மையாகவே என்னைப்பெற்ற பிதா. பார்வை குறையானது மாத்திரமா? கண்ணே பெரும்பாலும் தெரியாததனால் அவர் என்னைத் தெரிந்து கொள்ளவில்லை. நான் அவரோடே பரிகாசமாக வார்த்தையாடி ஒருகை பார்ப்பேன்.

காபோ.—ஐயா! வாலிப துரையே! யூதப்பிரபுவின் வீட்டிற்கு வழியாது? தயைசெய்து சொல்லும்.

லான்சிலட்.—இனித் திரும்பும்போது உம்முடைய வலக்கைப்பக்கம் திரும்பும். பின்பு திரும்பும்போது இடக்கைப்பக்கம் திரும்பும். சத்தியமாக அதற்குப்பின் திரும்புகையில் ஒரு கைப்பக்கமும் திரும்பாதேயும். ஆனால், யூதன் வீட்டிற்குச் சுற்றித்திரும்பும்.

காபோ.—சுவாமி சாட்சியாக அந்த வழியைக் கண்டு பிடிப்பது மகாகஷ்டம். அந்த யூதன் வீட்டிலிருக்கும் லான்சிலட் என்பவனொரு

வன் அவன் வீட்டில் இருக்கிறானா? இல்லையா? உம்மாலே சொல்லக்கூடுமோ?

லான்சிலட்.—வாலிப லான்சிலட் துரையைப்பற்றியா கேட்கிறீர்? (தனக்குள்) என்னை இப்பொழுது பாரும். கண்ணீர் வரும்படி செய்வேன். வாலிப லான்சிலட் துரையைப் பற்றியா கேட்கிறீர்?

காபோ.—ஐயா! துரை யல்லன். ஓர் ஏழையின் குமாரன். நானே சொல்லுகிறதாக இருந்தாலுங் கூட அவனுடைய தகப்பன் யோக்கியனான மகாதரித்திரன் என்று சொல்லுகிறேன். ஆனால் சுவாமிகிருபையால் சீவனத்துக்குப் போதுமானது இருக்கிறது.

லான்சிலட்.—சரி. அவன் தகப்பன் எப்படி இருந்தாலும் இருக்கட்டும். நாம் வாலிப லான்சிலட் துரையைப்பற்றிப் பேசுவோம்.

காபோ.—ஐயா! கனம்பொருந்திய தங்கள் இஷ்டனான லான்சிலட்—

லான்சிலட்.—ஆனதனாலே பெரியவரே; வாலிப லான்சிலட் துரையைப் பற்றியா கேட்கிறீர்? தயைசெய்து சொல்லும். உம்மைப் பிரார்த்திக்கிறேன்.

காபோ.—லான்சிலட்டைப்பற்றித்தான் எசமானே! தங்களுக்குப் பிரியம் இருந்தால் சொல்லுங்கள்.

லான்சிலட்.—ஆனதனுலே லான்சிலட் துரை ? ஐயா ! லான்சிலட் துரையைப்பற்றிப் பேசாதேயும். அவர் விதியின் படிக்கும் தலையெழுத்தின் படிக்கும் மூன்று சகோதரிகள் முதலாகச் சாஸ்திரங்களிற் சொல்லி இருக்கிறபடிக்கும் அந்த வாலிப துரை உண்மையாகக் காலஞ்சென்று விட்டார். அல்லது சாதாரணமாகச் சொல்லுகிறபடி மோட்சத்திற்குப்போய்விட்டார்.

காபோ.—கடவுள் காப்பாராக. இந்தவயதில் எனக்கு அந்தப்பையன் ஓர் ஊன்றுகோலாகவும் எனக்குச் சார்தூணுகவும் இருந்தான்.

லான்சிலட்.—நான் என்ன ஒரு வளைதடிபோலவும் குத்துக்கால்போலவும் ஓர் ஊன்று கோல்போலவும் ஒருமுட்டுக்கால் போலவுமாகவா தோற்றுகிறேன் ? அப்பா ! உமக்கு என்னைத்தெரிகிறதா ?

காபோ.—ஐயோ ! வாலிபதுரையே ! உம்மைத் தெரியவில்லை. ஆனல் என் பையன் உயிரோடு இருக்கிருனு ? இறந்துவிட்டானு ? தயைசெய்து சொல்லும். சுவாமி அவன் ஆத்துமாவைக் காப்பாற்றுவாராக.

லான்சிலட்.—பிதாவே ! உமக்கு என்னைத் தெரியவில்லையா ?

காபோ.—ஐயோ! ஐயா! எனக்குப் பார்வை குறைவு. உம்மைத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை.

லான்சிலட்.—இல்லை. உமக்குப் பார்வை குறைவில்லாமலிருந்தாற்கூட என்னைத் தெரிந்துகொள்வதில் நீர் தவறிப்போவீர். விவேகமுடைய தகப்பன் தான் தன் சொந்தப் பிள்ளையைத் தெரிந்துகொள்ளுகிறான். நல்லது கிழவரே! உம்முடைய குமாரன் சங்கதியை உமக்குச் சொல்லுகிறேன். என்னை ஆசிர்வதியும். உண்மை வெளியாகும். கொலை வெகுநாளைக்கு மறைந்திராது. ஒருவனுடைய குமாரன் மறைந்திருக்கலாம். ஆனால் கடைசியில் உண்மை வெளியாகும்.

காபோ.—ஐயா! தயவுசெய்து எழுந்திரும், நிச்சயமாக என் குமாரனாகிய லான்சிலட் நீரல்லீர்.

லான்சிலட்.—இதைப்பற்றி இனிமேற் பரிகாசம் வேண்டியதில்லை. என்னை ஆசிர்வதியும். உம்முடைய பையனாக இருந்து உம்முடைய குமாரனாக இருக்கிற உம்முடைய குழந்தையா யிருக்கப்போகிற லான்சிலட் நான்தான்.

காபோ.—நீர் என்னுடைய குமாரன் என்று நான் நினைக்கவில்லை.

லான்சிலட்.— அதைப்பற்றி என்ன நினைக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் யூதனுடைய ஆளாகிய லான்சிலட் நான்தான். உமது மனைவியாகிய மார்க்கேரி என்பவள் என் தாய் என்பது எனக்கு நிச்சயமே.

காபோ.— நிச்சயமாய் அவள் பெயர் மார்க்கேரி தான். நீ லான்சிலட்டாக இருந்தால் என் சதையிலும் இரத்தத்திலும் சேர்ந்தவன் என்று நான் சத்தியம் செய்வேன். கடவுளைப் பிரார்த்திப்போமாக. உனக்குத் தாடி எவ்வளவிருக்கிறது? என் வண்டிக் குதிரையாகிய டாபீனுக்கு வாலில் இருக்கிற உரோமத்தைப் பார்க்கிலும் உன் முகத்தில் அதிக உரோமம் இருக்கிறது.

லான்சிலட்.— அப்படியானால் டாபீனுடைய வால் பின்னோக்கி வளர்கிறது என்று தோன்றுகிறது. அதை நான் கடைசியிற் பார்த்த பொழுது என் முகத்திலிருக்கிற உரோமத்தைப் பார்க்கிலும் அதிக உரோமம் அதனுடைய வாலில் இருந்தது எனக்கு நிச்சயம்.

காபோ.—ஓ! சுவாமீ! நீ எவ்வளவு மாறிப்போய் விட்டாய்? நீயும் உன் எசமானும் சரியாய் ஒத்திருக்கிறீர்களா? அவனுக்கு வெகுமானம் கொண்டுவந்திருக்கிறேன். நீங்கள் இப்பொழுது எப்படி யிருக்கிறீர்கள்?

லான்சிலட்.—சரி சரி! என்னளவில் நான் ஓடிப் போய்விடுகிறதாகத் தீர்மானித் திருப்பதால் நான் கொஞ்சம் தூரம் ஓடிப்போகிற வரையில் சும்மா விருக்க மாட்டேன். என் எசமான் ஒரு சரியான யூதனே. அவனுக்கா வெகுமதி கொடுக்கிறது? அவனுக்குத் தூக்குக் கயிறு ஒன்று கொடும். அவனிடத்தில் வேலைக்கு இருந்து நான் பட்டினியாக இருக்கிறேன். என் விலாவெலும்பு எல்லாவற்றையும் உமது விரலாலே எண்ணலாம். அப்பா! நீர் வந்தது எனக்குச் சந்தோஷம். நிச்சயமாகவே எனக்கு அபூர்வமான புதிய உடுப்புகள் கொடுக்கின்ற பசானியோ துரையவர்களுக்குக் கொடுப்பதற்காக உம்முடைய வெகுமதியை என்னிடம் கொடும். அவருக்கு நான் வேலை செய்யாவிட்டால் சுவாமியால் உண்டாக்கப்பட்ட பூமியின் கோடிவரையிலும் ஓடிப்போவேன். இஃது என்ன நல்ல அதிருஷ்டம்! அவர் இதோ வருகிறார். பிதாவே! அவரிடத்திற் போம். இனிமேல் நான் யூதனுக்கு வேலைசெய்தால் நானும் யூதனே.

(லியோநார்டோவோடும் மற்றைப் பரிசனங்களோடும் பசானியோ வருதல்.)

பசானியோ.—நீ அப்படிச் செய்யலாம். எப்படியாவது அஞ்சுமணிக்கு மேற்படாமல் இரா

த்திரிபோசனம் ஆயத்தமாகும்படி துரிதம் பண்ண வேண்டும். இந்தக் கடிதங்கள் போய்ச் சேரவேண்டும். வேலைக்காரர்களின் உடுப்புக்களை உடனே அமைக்கும்படி செய். கிராஷியானோவை உடனே என் வீட்டுக்கு வரும்படி கேட்டுக்கொள்.

(ஒரு வேலைக்காரன் போதல்.)

**லான்சிலட்.**—பிதாவே ! அவரிடத்திற் போம்.

**காபோ.**—சுவாமி உம்மை ஆசீர்வதிப்பாராக.

**பசானியோ.**—அநேகவந்தனம். உமக்கு ஏதாவது என்னிடத்தில் ஆகவேண்டியிருக்கின்றதா ?

**காபோ.**—ஐயா ! இதோ என்மகன், ஓர் ஏழைப் பையன்.

**லான்சிலட்.**—ஐயா ! ஏழைப்பையன் அல்லேன். ஒரு செல்வனாகிய யூதனுடைய ஆள் ; ஐயா! அஃது என் தகப்பனார் சொல்லுகிறபடி.

**காபோ.**—ஐயா ! எல்லோரும் சொல்வது போல் அவனுக்கு வேலைசெய்வதில் அதிகப் பிரியம்.

**லான்சிலட்.**—சுருக்கம் என்னவென்றால் நிச்சயமாக நான் யூதனிடத்தில் வேலை செய்கிறேன். என் தகப்பனார் சொல்லுகிறபடி எனக்குப் பிரியம் இருக்கிறது.

காபோ.—இவனுடைய எசமானும் இவனும் பங்காளிகள் போல் இருக்கிறார்கள். (நான் இப்படிச் சொல்வதைத் தயைசெய்து பொறுப்பீராக.)

லான்சிலட்.—சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால் உண்மையாகவே அந்தயூதன் எனக்குக் கெடுதிசெய்து நான் நினைக்கிறபடி கிழவரான என் தகப்பனார் உம்மிடத்திற் சொல்வதுபோல்—

காபோ.—நான் இதோ ஒரு தட்டில் புறாக்கறி கொண்டுவந்திருக்கிறேன். அதை நான் தங்களுக்குத் தருவேன். என் பிரார்த்தனை யாவது:—

லான்சிலட்.—சுருக்கிச் சொன்னால் பிரார்த்தனையாவது, யோக்கியமான இந்தக் கிழவர் சொல்லுவதனால் நீர் அறிந்துகொள்ளப்போகிறபடி என்னைச் சேர்ந்ததன்று. நான் அதைச் சொன்னாலும் என் தகப்பன் கிழவனாக இருந்தாலும் எளியவன்.

பசானியோ.—இரண்டு பெயர்களுக்காகவும் ஒருவன்பேசுக. உங்களுக்கு வேண்டுவது என்னை?

லான்சிலட்.—ஐயா! உம்மிடத்தில் வேலைசெய்ய வேண்டும்.

காபோ.—ஐயா! அதுதான் சங்கதி.

பசானியோ.—உன்னை நன்றாயறிவேன். என்பால்

இச்சித்த வேலையை யிங்கே யின்றே.
உன்னெச மானன் ஷைலாக் குன்னைச்
சிலாகித் துரைத்துச் 'சிபாரிசு' செய்தான்.
தனிக ஷை லாக்கி னூழியந் தணந்து
வறியேற் காளா வதுமேம் பாடே.

லான்சிலட்.—என் எசமானாகிய ஷைலாக்கும் நீரும் முதுமொழியைச் சமமாகப்பங்கிட்டுக் கொண்டிருக்கிறீர்கள். ஐயா! உமக்குக்கடவுள் கிருபை இருக்கிறது, அவருக்குப் போதுமான செல்வம் இருக்கிறது.

பசானியோ.—நன்கு நவின்றனை. நீநின் மகனொடும்
போதி யப்பாவுன் னாதி யெசமா
னிடத்தில் விடைபெற் றென்னிட மெய்துதி.
அவன்போல் வாரினு மதியா டம்பர
ஆடையை யளித்தி யவற்குத், தவறேல்.

லான்சிலட்.—பிதாவே! வாரும் எனக்கு வேலை கிடையாது, கிடையாது. என் தலையில் எனக்கு நாக்கு இல்லை. நல்லது 'விவிலிய' புஸ்தகத்தை வைத்துச் சத்தியம் செய்யப் பிரியப்படும் இத்தலியிலுள்ள எந்த மனிதனாவது என் உள்ளங்கை இரேகைகளைப் பார்க்கிலும் நல்ல இரேகைகளை உடையவனாக விருந்தால் எனக்கு நல்ல அதிருஷ்டம் இருக்கும். போம் இதோ ஓர் அற்ப இரேகை இருக்கிறது. இங்கே சிலபெண்கள்

இருக்கிறார்கள். ஐயோ, பதினைந்து பெண் சாதிகள் தானே! அதிகக் குறைவு. ஒரு மனிதனுக்குப்பதினொரு விதவைகளும் ஒன்பதுகுமரிகளும் மிகக்குறைவானவையே. மூன்று தடவை மூழ்கித்தப்பவேண்டும். ஒரு பஞ்சணை ஓரத்திலிருந்து பிராணாபாயம் உண்டாகும். இவையெல்லாம் இலேசாகத் தப்பிக்கொள்ளத்தக்கவைகள். நல்லது அதிருஷ்டமானது ஒரு பெண்பிள்ளையானால் இந்தச் சங்கதியிலே அது நல்ல பெண்பிள்ளையே. பிதாவே! வாரும். இமைப்பொழுதிற்குள் யூதனிடத்திலிருந்து விடைபெற்றுக்கொண்டு வருவேன்.

(லான்சிலட்டும் கிழட்டுக் காபோவும் போதல்.)

**பசானியோ.**—நலமிகும் லியோனார்டோ ஆய்ந்திதை
நன்று முடிக்கென நாம்வேண் டுதுமால்.
இப்பொருள் களைக்கொடு கலன்களி லேற்றி
வல்லையின் வருதி இற்றை ஞான்றிரா
நனிமதிப் புடைய வெனது நண்பர்கள்
விருந்தாகின்றனர் விரைவா யேகுதி.

**லியோ.**—இயன்றன யாவு மியற்றுதல் தவிரேன்.

(கிராஷியானோ வருதல்.)

**கிராஷியானோ.**—என் எசமானன் எங்கே?

**லியோ.**—ஐயா! அதோ நடந்துபோகிறார்.

**கிராஷியானோ.**—ஐயா! பசானியோப் பிரபூ!

பசானியோ.—கிராஷியானோ !

கிராஷியானோ.—நான் உம்மிடத்திலே வேண்டிக்கொள்வது ஒன்று உளது.

பசானியோ.—அதை உமக்குத் தந்தேன்.

கிராஷியானோ.—மாட்டேன் என்று மறுக்கக்கூடாது, நான் உம்முடன் பெல்மண்டுக்குச் செல்ல வேண்டும்.

பசானியோ.—என்னுட னீரு மேகிட விசைந்தேன்.
கிராஷியானோ ! நான் கிளத்திடல் கேளுநீர்,
நாகரி கம்மிகு நடத்தை யிலீர்நீர்,
மிகுந்த வினயமு மிருது வசனமும்
இல்லீர். இத்தகைக் குணமெலா மெங்கள்
கண்களிற் களங்க மற்றவை யாகி
உமக்குத் தகுதியா யுள்ளன வாயினும்,
இதன்முன் னும்மைத் தெரியா விடங்களிற்
சிறிதுநா கரிக மிலீரெனத் தெரிக்கும்,
குதித்துத் துள்ளுங் குணத்தைச் சிறிது
மரியாதை யாந்தண் மாத்திரை யருந்தி
வருந்தி யடக்கமன் றாடு கிறேன்யான்.
இலையெனி னும்பால் வினய மின்மையால்
எனையு மவ்வயி னுமைப்போ லெண்ணுவர்,
என்னம் பிக்கையு மிழப்ப லதனால்.

கிராஷியானோ.—பசானியோ வேநான் பகர்வது கேட்பீர்
சாந்த வொழுக்கமுந் தாழ்ந்த வசனமும்
ஓரோர் காலத் தாணை யிடுதலும்

தோத்திரப் புத்தக முடையிற் றேற்றலும்
கம்பீ ரத்தனய்க் காணப்படுதலும்
அன்றியுந் தோத்திர மறையுங் காலையில்
இவ்விதந் 'தொப்பி'யா லென்கண் மறைத்தலும்
நெட்டுயிர்ப் பெறிந்தாங் கோமென நிகழ்த்தலும்
நாகரி கம்முள நடத்தை யுடைமையும்
ஒருவன் பாட்டியை யுவப்பித் தற்காக்
கட்டமாப் பயின்ற கடுமுகக் காட்சியும்
இத்தனை யும்முளே னெனத்தோன் றிலேனேல்
இனியெனை நம்பலென் றென்றுமற் றொழிப்பீர்.

**பசானியோ.**—நல்ல துமது நடக்கையைப் பார்ப்
போம்.

**கிராஷியானோ.**—ஆனா லின்றிர வத்தனை வேண்டா,
யானின் றிரவி லியற்றுவ தாலெனை
மதித்திட லகற்றுதிர்.

**பசானியோ.**— மற்றதிற் கேடிலை.
விநோத மதனையே வேட்டிடு நண்பர்
மேவுத லானீர் மிகவுல் லாசமா
யிருத்தலே வேண்டும். இஃதென் விருப்பம்.
சிறிது வேலையான் செயவேண்டும். செலீர்.

**கிராஷியானோ.**—நான்லா ரேன்சோ முதலிய நண்பர்
இடஞ்செல வேகுவல். என்னினு மிவ்விராப்
போசன காலம் பொருந்துவன் நும்பால்.

(எல்லாரும் போதல்.)

## மூன்றாங் களம்.

அதே இடம் (அதாவது வெனிஸ் நகரம்.)

ஷைலாக் வீட்டில் ஓர் அறை.

[ஜெசிக்காவும் லான்சிலட்டும் வருதல்.]

ஜெசிக்கா.—இத்துணை விரைவில் என்றந்தையை நீ
இகந்தே குதலெற் கின்ன லிழைக்கும்.
எமதில் நரக மெனினு முவகை
செயவல கூளியா நீ யிதிற் சிறிது
கவற லகற்றிக் களிப்புண் டாக்கினை.
உனக் கிதோவொரு 'டக்கற்று' போய்வா.
ஏ ! லான்சிலட்டே யிரவு லாரென்சோ
உன்புத் தெசமா னுழைவிருந் துண்ணற்
கேகுவன், அவனிட மிக்கடி தத்தை
ஏனைய ரறியா தீகுதி போய்வா.
உன்னுட னுரையா டுவதையென் றந்தை
தெரிந்திடச் சிறிதும் விரும்புத லில்லேன்.

லான்சிலட்.—போய் வருகிறேன். விடைதருக. சொல்லவேண்டியதை என்கண்ணீர் சொல்லுகின்றது. அதிவனப்புள்ளாய்! அந்நிய மதத்தினாய் ! அதிப்பிரியமான யூதையே! போய் வருகிறேன். இந்த மடமையான கண்ணீர்த் துளிகள் என் ஆண்மையைக் குறைக்கின்றன. போய்வருகிறேன்.

**ஜெசிக்கா.**—நல்ல லான்சிலட்டே நலமுடன்
போய்வா.

(லான்சிலட் போதல்.)

ஐயோ! என்னுடை யப்பன் புதல்வியா
யிருத்தலே வெள்குற லெத்துணைப் பாவம்.
அவனிரத் தத்தி னும் மகளாயினும்
அவனடக் கைக்குப் புத்திரி யல்லேன்.
சொல்லிய வண்ணம் லாரேன்சோவே
செய்விரே லிந்தத் தியக்கந் தீர்ந்து
கிறிஸ்தவ ளாகிப் பிரியங் கெழுமிய
உம்மனை யாட்டியா வுறுத லுண்மையே.

(போதல்.)

## நான்காங்களம்.

அதே இடம்: (வெனிஸ் நகரம்), ஒரு வீதி.

[கிராஷியானோ, லாரேன்சோ, சாலரினோ, சோலானியோ வருதல்.]

**லாரேன்சோ.**—இலையிலை, இராப்போசன காலத்தில்
எதில ரறியா தேகியென் மனையில்
வேடம் பூண்டோர் கடிகையின் மேவுதும்.

**கிராஷியானோ.**—நாமினும் யத்தன நன்காச் செய்திலம்

**சாலரினோ.**—இனுந்தீ வர்த்திக் காளேற் படவிலை.

**சோலானியோ.**—இரசமா வேற்படி னன்றி யிவ்வேடம்
நன்றல, தரியா தொழிதலே நன்றாம்
என்றுநா னெண்ணுவல்.

**லாரேன்சோ.**— ஈரிரு கடிகைதான்
இப்போழ்தானது, இன்னுமிரண்டு
மணியுள வேண்டிய வண்ணஞ் செய்யவே.

[லான்சிலட் ஒரு கடிதத்துடன் வருதல்.]

மித்திர லான்சிலட், விசேடமென் னுரைக்க.

**லான்சிலட்.**—நீர் தயைசெய்து இதை உடைத்துப்
பார்த்தால் அது விசேடத்தைச்சொல்லும்.

**லாரேன்சோ.**—அஃதியா ரெழுத்தென் றறிவே
[னியான்.—அதை
வரைந்த கையோ மலிவனப் புடைத்தே.
வரைந்துள கடிதத்து, வெள்வண் ணத்தினும்
அதிக வெண்மை யமைந்ததவ் வத்தமே.

கிராஷியானோ.—மெய்யாகக் காதல் விஷயமே.

லான்சிலட்.—ஐயா! போக உத்தரவு தானா?

லாரேன்சோ.—நீ எங்கே போகிறாய்?

லான்சிலட்.—ஐயா! என் புதிய எசமானாகிய கிறிஸ்தவனுடனே இராப் போசனம் பண்ண என் பழைய எசமானாகிய யூதனை அழைக்கப் போகிறேன்.

லாரேன்சோ.—ஏற்றுக்கொள் நீ இதனை. சாந்தையாம்
ஜேசிக்கா செப்பின செய்வது தவறேன்
என்றவ ளிடத்தி லியம்புதி தனித்தே.

[லான்சிலட் போதல்.]

வருமின் துரைகா ளிற்றைஞான் றிரவு
வேடம் பூண்டிட வேண்டுவ புரிதிரோ?
தீவர்த் திக்காள் சித்தமா வுளனால்.

சாலரினோ.—ஆம்யான் வல்லையி லதற்காவேகுவன்.

சோலானியோ.—ஏகுவனியானும்.

லாரேன்சோ.— எனையுங் கிராஷியா
னோவையுங் கிராஷியா னோவின்மாளிகையில்
சற்றுப் பொறுத்துச் சாருதி ரையா.

சாலரினோ.—நாமப்படிச் செய்கின்றது நலமே.

அந்த இடம் அதாவது வேனிஸ் நகரம்

ஷைலாக் வீட்டில் ஓர் அறை.

[சாலரினோ சோலானியோர் போதல்.]

கிராஷியானோ.—அழகிய ஜேசிக்கா வனுப்பிய கடிதமா?

லாரென்சோ.—உம்மிடத்தி யாவையு முரைப்ப தவசியம்
அவளைப் பிதாவி னகத்திருந் தெவ்வணம்
அகற்றலா மென்பதூஉ மெத்துணை யணியும்
பொன்னு மவளிடம் பொருந்திய வென்பதூஉம்
எச்சே வகனுடை யெடுத்து வைத்துளாள்
என்பதூஉ மெனக்குத் தெரிந்தன ளேந்திழை.
அவள்பிதா வோர்கா லமரர்நா டடையின்
அவனது சாந்த மகளா லேதான்.
அவள் விசுவாசி யலாத யூதன்
புதல்வியா யிருத்தற் பொருட்டே யன்றி
எக்கா லத்து மின்ன லவட்காங்
கெய்துவ தொழிக. ஏகுதி ரென்னுடன்.
ஏகுமெல் லையிலே யிதனைநீர் பாரீர்.
எழிற் ஜெசிக்கா வென் றீவர்த்தி யேந்துவள்.

[எல்லாரும் போதல்.]

---

## ஐந்தாங்களம்.

அதே இடம் (வெனிஸ் நகரம்), ஷைலாக்
வீட்டின் முன்னே.

[ஷைலாக்கும் லான்சிலட்டும் வருதல்.]

ஷைலாக்.—பழைய ஷைலாக்கு பசானியோ இவர்க
டமக்குள தார தம்மிய முணர்வாய்.
உனது நேத்திரமே யுண்மை யுணர்த்திடும்.
என்ன ! ஜெசிக்கா ! என்னிடமே போல்
அவனிட மீதா ணருந்துவ தொழிவாய்.
என்ன ஜெசிக்கா ! என்னிடமே போல்
துயிறலுங் குறட்டை வாங்கலுந் துகிலினைக்
கிழித்தலுந் தவிர்தி. கேட்டிலை ஜெசிக்கா.

லான்சிலட்.—ஜெசிக்கா.

ஷைலாக்.—உனையாரழைத்திட உத்தரவளித்தது?
கூப்பிடும்படி நான் கூறிடவிலையே.

லான்சிலட்.—ஏவினலொழிய நான் ஏதுஞ் செய்ய முடியாதவன் என்று தாங்கள் அடிக்கடி சொல்வது வழக்கம்.

[ஜெசிக்கா வருதல்.]

ஜெசிக்கா.—எனை யழைத்தனிரோ? ஏதுநும் மிட்டம்?

ஷைலாக்.—இராப்போசனத்திற் கெனை யழைத்துள்ளார்.
ஜெசிக்கா ! திறவு கோல்கள் இந்தா.
ஏன் ! யானேகுதல் வேண்டும். என்னை
அன்பா லழைத்திலர், அவர்செயல் முகத்துதி.

ஆயினு மமிதமாச் செலவிடுங் கிறிஸ்தவ
னுணவுண் டிடுவா னுவர்ப்புட னேகுவல்.
என்றன் புதல்வியே ஜெசிக்கா வென்
வீடுகாத் திரு. மிகு வெறுப் போ டேகுவல்.
கனவினிற் பணப்பை கண்டே னேற் றிரா.
ஆதலி னென்மன வமைதிக் கேதோ
தீங்கு விளைவது திண்ணம் போலும்.

லான்சிலட்.—ஐயா! தாங்கள் போகவேண்டும் என்று தங்களைப் பிரார்த்திக்கிறேன். என் இளைய எசமான் தங்கள் 'வசவை' (வரவை) எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்.

ஷைலாக்.—நானும் அப்படியே எதிர்பார்க்கிறேன்.

லான்சிலட்.—அவர்கள் ஒன்றுசேர்ந்து பேசிக்கொண் டிருந்தால் நீங்கள் ஒரு வேஷக் கூத்துப் பார்ப்பீர்கள் என்று நான் சொல்லமாட்டேன். நீங்கள் பார்த்தால் நாலு வருஷத்திற்கு முன் சாயங்காலம் வந்த 'விபூதித் திருவிழாப் புதன்கிழமை'யானது காலை ஆறுமணிக்கு வந்துபோன 'ஈஸ்டர்' திங்கட்கிழமையன்று என் நாசியிலிருந்து இரத்தம் சும்மா வரவில்லை.

ஷைலாக்—ஆங்கே வேஷக்கூத்து மமைவதோ?
யானிங் கியம்புதல் கேட்டி ஜெசிக்கா!
எனது கவாட மெல்லாந் தாளிடு.
முரசி னோசையு முரணிய கழுத்துடை
ஊதுகுழலின் சில்லென் னோசையும்

செவியுறின் பெருகுத் தைலம்பூசிய
முகத்தினை யுடைய கிறிஸ்தவ மூடரை
நோக்குவான் சாளர நுழையேல். உன்றன்
சென்னியை நீட்டேல் தெருவினில். என்றன்
அகத்தின் செவிக ளாகும் பலகணி
அடைப்பாய். மாட்சிமையமையுமென் வீட்டில்
அற்பவிளையாட் டார்ப்படை யற்க.
இற்றை யிரவில் விருந்துணற் கேகச்
சற்றும் பிரீதி யிலதால், சத்தியம்,
ஆயினுமேகுவல். அடா! நீ யெனக்கு
முன்ன ரடைந்தியான் வருவது மொழிமோ.

லான்சிலட்.—ஐயா! நான் முன்னே போவேன். அம்மா! இவர் சொல்வதெல்லாம் இருக்கட்டும். நீர் சாளரத்தின் வழியாகப் பாரும். உம் பார்வைக்குத் தகுந்த ஒரு கிறிஸ்தவன் அந்தப்பக்கமாகப் போவான்.

[போகுதல்.]

ஷைலாக்.—ஆகாரேச்சம் ஆ! அறிவிலி யென்சொனான் ?

ஜெசிக்கா.—'அம்மணீ! வந்தன' மென்ன வறைந்தனன்.
வேறிலை.

ஷைலாக்.— இத்திருவன் மிக்க வன்பினனே,
ஆயினும் பேருண் வேட்டோன், அன்றியும்
காட்டுப்பூனையிற் கழியப் பகலெலாம்

துயிலுவன். நந்துபோன் றாருவன் றொழிலிற்
சோம்பித் திரிதருஞ் சுரும்பின மென்னே
டிருலி லியங்குத லிலையே யாதலின்
அவனை விடுத்தனன். அவனை யென்வயிற்
கடன்பெற்றுள்ள களஞ்சிய மனைத்தும்
வீணிற் செலவிடற் குதவயான் வேட்ட
ஒருவனிடந்தனி லுய்த்துளேன் யானே.
செல்லா யகத்தி னுள்ளிற் ஜெசிக்கா !
உடனே யொருகால் மீளினு மீளுவன்.
உரைப்ப துஞற்றுதி, கவாடமடைத்தி.
'இறுக்கிப் பிணித்தவை சுறுக்கிற் காணலாம்'
எனுமுதுரையினை யென்றும் விருத்தி
நாடினேன் பயனிலதென நவிலானே.

[போதல்.]

**ஜெசிக்கா.**—சுகமே போய்வா, அதிட்டந் துணைசெயில்
என்னைப்பெற்ற பிதாவை நானிழந்தேன்.
ஈன்ற புதல்வியை யிழந்தனை நீயுமே.

[போதல்.]

---

## ஆறாங் களம்.

அதே இடம் : வேனிஸ் நகரம்.

[கிராஷியானோவும் சாலரினோவும் வேஷதாரிகளாய் வருதல்.]

கிராஷியானோ.—நம்மை லாரேன்சோ நணுகுற நவின்ற
கொட்டிலுமிஃதே.

சாலரினோ.— குறித்த கடிகையும்
ஆயது.

கிராஷியானோ.— அன்பர்கள் குறித்த கடிகையின்
முன்னரே முடுகி வராதத னாலிவர்
ஆலசி யஞ்செய லதிசயம் விளைக்கும்.

சாலரினோ.—நவீன நண்பினை நன்கு நாட்டுவான்,
நாட்டிய நட்பு நழுவா திருக்க
முடுகுறும் விசையின் மும்மூன் றொன்றாம்
கடுப்புடன் சித்தசன் கபோதஞ் சென்றிடும்.

கிராஷியானோ.—எக்காலத்து மியல்பே யஃது. இங்
குண்ணவுட் காருத லுற்ற காலையில்
உளதாங் கடும்பசியுடனே யுண்டபின்
எழுபவ னெவனுளன் ? முன்ன மியற்றிய
கட்டமாங் கதியெலாங் கால் பெயர்த் துப்பின்
தணிவி லுற்சாக மொடுதிரும் பிச்செயும்
அசுவ முண்டோ ? உளவாம் பொருளெலாம்
அனுபவித் தலினு மளவிலா வூக்கம்
செலுத்துபு தேடப் படுகின் றனவே.
பரத்தையின் குணமுள பவனந் தன்னாற்
றழுவிப் புல்லித் தனதுரி மைத்துறை

இகந்து துகிலுட னிளையோ னிடம்பன்
போன்று மரக்கலம் போதா லெற்றே!
தாசி யியல்புடைச் சதாகதி தன்னால்
மழையிலும் வெயிலிலும் வருந்தின பக்கமும்
சிதர்ந்த சிதையுமாய்ச் சிதைவுறு நாவாய்
மெலிந்து தளர்வுறீஇ மிகுவறி யவனும்
இடம்பன் போலு மீளலெத் தகைத்தே?

சாலரினோ.—இதோ லாரேன்சோ வருகிறார். இன்னும்
இதைக்குறித் தினிமேற் பெயர்த்தும் பேசுவாம்.

[லாரேன்சோ வருதல்.]

லாரேன்சோ.—இனிய நண்பர்கா ளித்துணைக் காலம்
தாழ்த்துநான் போந்த தவற்றினைப் பொறுமின்.
என்வழி பார்த்துமை யிருக்கச் செய்தது
என்பணி யேயலால் யானலேன், எனைப்போற்
காதலி நாடிநீர் கள்வரிற் றிரிதர
வாஞ்சித் திடுங்கால் மற்றுமக் கிப்படி
நானும் வழிபார்த் திருப்பேன் நணுகுதும்.
இவ்வயி னெனது தந்தையாம் யூதன்
உளனும். உள்ளே உள்ளார் யார்கொல்?

[ஜெசிக்கா வேலைக்காரன் உடையுடன் தோன்றுதல்.]

ஜெசிக்கா.—யாவர்நீர்? உமது தொனியால் யானுமைத்
தெரிந்துளேன், சரதமே. ஆயினுந் தெள்ளிதின்
ஐய மகன்றிட வறைதிரா லெனக்கே.

லாரேன்சோ.—உனது காத லுடைய லாரேன்சோ

ஜெசிக்கா.—உண்மை லாரேன்சோ! உண்மையா வென்றன்

அன்ப ! மற்றுமையலால் யாவரை யித்துணை
நயந்தேன். நான் உம் மவளா யிருத்தலை
உமையலால் லாரென்சோ ! உணர்வாரார் ?

லாரென்சோ.—என்னுடை யவளாய் நீயுளா யெனற்கு
உன் நம்பிக்கையும் கடவுளு மேகரி.

ஜெசிக்கா.—ஈதோ பிடியு மிந்தப் பெட்டியை.
பிரயா சத்திற் கேற்றபே றளிக்கும்,
எனைநீர் கண்ணுறு வண்ணம் எல்லியா
இருத்தலி னுவந்தேன். எனதுவேற் றுடையால்
மிகவும் வெள்கினேன். ஆயினும் வேட்கை
கண்ணிலா ததுவே. காதலி னோர்புரி
சின்னீ ரிழுதைச் செய்கைகள் தெரியார்.
தெரிந்திட வல்லரேல் சேவக னாகநான்
திரிந்ததை நோக்கச் சித்தசன் றானுஞ்
செந்நிறக் கபோலஞ் சிவணநா ணுறுவன்.

லாரென்சோ.—இறங்குதி. எனக்குத் தீவர்த்தியாளா
யிருத்தல் வேண்டும்.

ஜெசிக்கா.— என்ன ? எனது
நாணந் தெரிக்க நானுமோர் பந்தம்
பிடித்திடல் வேண்டுமோ ? பிடியா தேயது
மிக்கதெளி வாயுள தன்றோ ? மெய்யாய் !
இப்பணி காதல ! எவர்க்குமெற் றெரிப்பதே,
கரந்துநா னிருக்கக் கடவேன்.

லாரென்சோ.— காதலீ !
சேவகன்றனது சிறந்த வுடையினும்

எழில்கரந் தேயுளாய். ஒல்லையில் வருதி.
ஏகாந்த மாமிரா வேகிடும் வல்லையில்.
பசானியோ விருந்தில் நமையெதிர் பார்க்கிறார்.

ஜெசிக்கா.—கதவுதா ளிட்டினுஞ் சில 'டக்கற்று'டன்
உம்முட னெல்லையி லுற்றிடு வேன்யான்.

(மேலே போதல்.)

கிராஷியானோ.—என்றன் றலைமுடி யாணைமற் றிவடான்
அந்நிய மதத்தளே, யூதை அல்லள்.

லாரேன்சோ.—அவளை நான்மிக்க வாதர வோடும்
வேட்டிலே னெனில்யான் மேவுக சாபம்.
ஏனெனி லென்மதிப் பதுபிழை படாதெனில்
அனையா ளறிவுடை யவள்காண். என்றன்
நாட்ட முண்மை நவிலுமேல் வனப்பினள்,
நிசத்த வெனவவள் நிரூபித் துள்ளாள்.
ஆதலி னென்ற னசைவிலாச் சிந்தையில்
அவளு மவ்வா றறிவொடு வனப்பும்
மெய்யு முடையளாய் மேவிவீற் றிருப்பாள்.

[ஜெசிக்கா கீழேவருதல்.]

என்ன ? வந்தனையோ? ஏகுமின் துரைகாள்.
நமைப்போல் வேடம் பூணுறு நண்பர்
இதுவரை நமக்கா வெதிர்பார்த் திருப்பரே.

[ஜெசிக்காவோடும் சாலரினோவோடும் போதல்.]

[அந்தோனியோ வருதல்.]

அந்தோனியோ.—அங்கே ஆர் ?

கிராஷியானோ.—ஐயா ! அந்தோனியோ !

அந்தோனியோ.—சீச்சீ கிராஷியா னோநஞ் சினேகர்
எங்குளர் ? இப்பொழு தொன்பான் கடிகை
கழிந்த. நங் காதல ருமக்காக் காத்தனர் ;
இற்றை ஞான்றிரா வேஷக் கூத்திலை.
மாருதந் துணையா வந்தது. பசானியோ
கடிதிற் கப்பற் கேகுவர். உம்மை
நாட விருபது பேரைநா னுய்த்துளேன்.

கிராஷியானோ.—நனிமகிழ் வுற்றேன். இஞ்ஞான் றிரவே
ஓடம் பாய்விரித் துய்த்தலின் மிக்க
இன்பம் விளைப்ப தெற்குவே றிலையே.

[எல்லாரும் போதல்.]

---

## ஏழாவது களம்.

இடம் :—பெல்மண்டு போர்ஷியா வீட்டின் ஓர் அறை.

[எக்காளம் ஊத. மோராக்கோ அரசனுடன் போர்ஷியாவும் அவள் பரிசனங்களும் வருதல்.]

**போர்ஷியா.**—திரையை நீக்குபு சிறப்புடை யரசன்
காணவப் பெட்டி களைக்காட் டுதிபால்.
இனியுமக் கிட்ட மானதைத் தொடுதிர். [நச்சுவ

**மோராக்கோ.**—"எனைத்தெரிந் தெடுப்போன் பல்லோர்
தடைவான்" என்னுஞ் சாசன மமையுந்
தமனிய மதனுற் சமைந்தது முதலதே.
"எனைத்தெரிந் தெடுப்போன் தகுதிக்கிசைந்ததை
அடைவான்" எனும்வாக் களித்திட் டமைதரும்
இரசிதத் தாய திரண்டா வதுவே. [யும்.
"எனைத்தெரிந் தெடுப்போ னுள்ளன வெவை
ஈந்தெதற்குந் துணிந்திடல் வேண்டும்" எனும்
அச்சுறு நயமிலா வசன மறைந்திடும்
ஒளியில் வங்கமா யுளதுமூன் றுவதே.
பெட்டியைச் சரியாத் தொட்டன னென்பதை
எவ்வண மறிவே னியம்புதி யாலரோ ?

**போர்ஷியா.**—அவற்று ளொன்றிலென் படமுள தரசே
அதுதெரிந்திடி லதனோடுநா னுமதே,

**மோராக்கோ.**--தெரிவதிலெனக்குத்தெய்வந்துணைசெய,
பார்ப்பல், பொறிமொழி மாறுப் பார்ப்பல்.
வங்கப் பேழை வகுப்ப தெவன்கொல் ?

"எனைத்தெரிந் தெடுப்போ னுள்ளன வெவையும்
ஈந்தெதற்குந் துணிந்திடல் வேண்டும்." ஈயக்
கடவன். எதற்கா ? வங்கந் தனக்கா?
ஈயந் தனக்கா துணிதல்? இப்பேழை
அச்சுறுத் துவதே. அனைத்துந் துணிந்திடும்
மானவர் மிகுநல மதித்தே செய்குவர்.
பொன்மனம் பயனில் பொலிவுறு தோற்றந்
தனைநினை தற்குத் தானிசை யாதே.
ஈயந் தனக்கா எதுவு மீந்திடேன்.
துணிவுடன் செய்யேன். தூவெண் மையுடன்
வெண்பொன் றானும் விளம்புவ தென்கொல்?
" எனைத்தேரிந்தெடுப்போன்தகுதிக்கிசைந்ததை
அடைவான்." அவன்றன் தகுதிக் கமைந்தது.
நில்லாய், மோராக்கோ! நினது மதிப்பை
ஒர மின்றி யுய்த்துண ருதியால்.
உனதள வையினா லுன்னை மதித்திடிற்
போது மான துனக்குப் பொருத்தமே.
ஆயினும் போதுதல் அப்பெண் மணியை
அணுகு மளவில தாயினு மாகும்.
ஆயினும் என்றன் தகுதியை யயிர்த்தல்
என்றன் தகுதியை யிகழ்வதே யாகும்.
எனது தகுதிக் கியைந்திடு மளவு !
அஃதப் பெண்மணி யாகும், ஐயமேன் ?
ஆக்கமு முயர்குடிப் பிறப்பு மமைதரு
நாகரி கமுடை நடக்கையும் பண்பும்
ஆகு மிவற்றுள வட்குநான் தகுதியே.

அன்புடைமையினிவையனைத்தினுந்தகையுளேன்.
இனுந்தடு மாறு திதைத்தெரிந் திடிலென் ?
செம்பொனிற் றீட்டிய செய்ய சாசனத்தை
இன்னு மோர்முறை நானியைவுற நோக்குவல்.
“ என்னைத்தெரிந்தெடுப்போன் பல்லோர் நச்சுவ
தடைவான்”. அஃதவ் வனிதையே யன்றோ ?
இப்பூ தலமெலா மிவளைவேட் டுளதால்,
உயிரோ டுள்ள மகாத்துமா வாகும்
இம்முனி கோயி லேத்துதற் குலகில்
நாற்றிசை யோரும் நண்ணு கின்றனரே.
எர்க்கே னியாவனம் இடமகல் அரேபியாப்
பாழாம் பாலைத் திணையெலா மிப்பால்
பொற்புடைப் போர்ஷியா தனைக்கண் ணுறவரும்
இறைவர்க் கிராச பாட்டை யாயினவே.
செருக்குடைத் தனது சிரமே லெடுத்து
வானின் முகத்துத் திரையுமிழ் வாரிதி
தடுத்தில தன்னிய வீரர்சார் வுறலை.
கால்வாய் கடந்திடல் போற்கடல் கடந்து
கவின்கொள் போர்ஷியா வைக்காண வேகுவர்
இவளது திவ்விய வோவிய மிந்த
மூன்றி லொன்றே மூடிக்கொண் டுளது.
ஈய மொருக்கா லிவளை யுடையதோ ?
இவ்விழி வெண்ணமே நிரயம் புகுத்தும்,
அதுபிற ரறியாப் பிரேதக் குழியினில்
அவளது சேமச் சேலையை யடக்கவும்
தகுதியிற் றாழ்தரு மொளியிலு லோகமே.

காய்ச்சின கனகம் தனிலும் பத்திலோர்
பங்கே மதிப்புடை வெள்ளியிற் பதிந்தனள்
எனவெண் ணுதுமோ? ஏ! தீ நினைவே!
இத்துணை விலையுய ரிரத்தின மென்றும்
பைம்பொனி லன்றிப் பதித லுறுதே.
இங்கி லாந்தி லிரணியந் தனிற்பதி
தேவ தூதன் திருவுருத் தாங்கியோர்
நாணய முளதால். ஆயினந் நாணயத்
தவ்வுரு வெளியிற் பதித்த தாகும்.
ஆனு லிவ்வயின் ஆடக வமளியில்
அகமெலா நிறைந்தமர்ந் தனளோ ரணங்கே.
ஈதி தாட்கோல், இதை நான் தெரிந்துளேன்.
அதிட்ட மெவ்வண மாயினு மாகுக.

போர்ஷியா.—ஈங்குள தரசே! சாவியை யேற்றிடீர்.
என்பட மாங்கே யிருப்பி னும்முடைமைநான்.

மோராக்கோ.—(செம்பொற் பெட்டியைத் திறக்கின்றுன்.)
ஐயோ! நிரயமே! ஏதுள தீங்கே.
வெண்டலை யதனது வெறுங்கட் குழியில்
வரைந்தவோர் சுருளுளது, அதைவா சிப்பல்.

(வாசித்தல்.)

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மினுமினுப் பதெல்லாம்பொன் னுகாதென்றே பல்கால்
விளம்பல் கேட்டாய்
எனதுவெளிப்புறங்காணற்பொருட்டே தம்முயிர்தருவா
ரிலக்க மில்லார்,

தனதகத்திற் புழுமலியுங் கல்லறையுந் தமனியப் பூச்
சுடைய தாமால்,
மணவலிமை யுடையாய்போன் மதிவலியு முடையோனு
யில்லா யன்றே. (1)

மதியுடையா யாகியுன தவயவங்க ளிளமையதா
வயங்கு மாபோல்
முதுமைசேர் விவேகமலி வுடையோனுய் நீயுமிருந்
திடுவா யாகில்
இதுபுரைவல் விடையுமுனக்கியம்பிடவே துவுமொன்று
மிலதே யாகும்
வதுவைநீ வேட்டிடலும் வெறுப்பெனக்காம் விடைபெ
றுதிவாழி மன்னே. (2)

மெய்யா வெறுப்பே வேலையும் வீணே.
விருப்பே ஏகுதி. வெறுப்பே வருதி
சலாமம்மா! **போர்ஷியா!** சாலப்பேசி
விடைபெற வொண்ணு விசனம் மிகவுள
இதயனுன், இவ்வணம் தோற்பவர் பிரிவரால்.
(அவன் பரிசனத்தோடும் ஏக, எக்காளம் ஊதுதல்.)

**போர்ஷியா.**—அவரைச் சாந்தமா அகற்றினே னம்மா
ஈர்த்தியா லெழினி. எனையிவர் போற்கரு
மூர்த்திய ரெவரும் முந்தெடுத் திடுகவே.
[எல்லாரும் போதல்.]

## எட்டாவது களம்.

இடம் :—வேனிஸ் நகரம் ஒருவீதி.

[சாலரினேவும் சோலானியோவும் வருதல்.]

சாலரினே.—என்ன,என் அன்பனே!பசானியோகலத்துச்
செல்லுறும் போதினன் செவ்விதிற் கண்டேன்.
அவருடன் கிராஷி யானேவு மகன்றனர்.
அக்கலத் துண்மையா லாரேன் சோவிலே.

சோலானியோ.—துட்டனும்யூதன் தான் இட்டகூக்குர
இந்நக ரதிபனை யெழுப்பியாங் கவனுடன் [லால்
பசானியோ வின்கலம் பார்த்திட முயன்றான்.

சாலரினே.—காலந் தாழ்த்தவர் வந்தனர். கலமும்
சென்றது. லாரேன்சோ வவனன்புசேர்
ஜேசிக்கா விருவருஞ் செல்ல வோடத்திற்
கண்டவ ருளரெனக் கடற்கரை தனிலிந்
நாட்டிறை தனக்கு நவின்றனராற் சிலர்.
அன்றியும் பசானியோ செல்கலத் தவருடன்
அவர்கள் சென்றில ரென அந்தோனியோ
உரைத்துளா ருறுதியிவ்வூ ரிறைவ னுக்கே.

சோலானியோ.—குக்கனும் யூதன் மறுகெலாங்குரைத்
கத்துணைக் குழப்பம் அத்துணை விநோதம் [தாங்
அத்துணை மூர்க்கம் அமைந்தபல் வகைமொழி
இதுவரை கேட்டிலேன். எனது புத்திரீ !
ஆ!என் 'டக்கற்று'. ஆ!என் புதல்வி
ஒருகிறிஸ்தவனோ டோடிவிட் டனளே

ஏ! என் கிறிஸ்தவ 'டக்கற் றுகளே'!,
நீதியே! நியாயம் நிகழ்த்து சட்டங்களே!
என்'டக் கற்று'ம் எனது தநயையும்!
இலச்சினை யிட்ட தோர்பை 'டக்கற்று'
நிறைந்தி லச்சினை நிலவிரு பைகள்.
இரட்டை 'டக்கற்று'கள் என்மாட் டுள்ளன,
என்றன் புத்திரி யெடுத்தகன் றனளே.
அணிகள், அரதந மிரண்டு மளவிலா
மதிப்புள இருமணி வவ்வின ளென்மகள்.
கன்னியை நீதியே கண்டு பிடித்திடாய்.
அரதநம் 'டக்கற் று'னவை யெல்லாம்
அவடன் மேனியி லுடையண் மற்றன்றே.

சாலரினோ.—ஏ! வெனிஸ் நகரு ளெல்லாச் சிறுவரும்
அவன்மணி யவன்மகள் அவன்'டக் கற்று'கள்
என்னாக் கூக்குர லிட்டவற் றொடர்வார்.

சோலானியோ.—நலமிகும் அந்தோனியோ தம்தவணை
இகவா திருப்பா ராகுக. இலையேல்
இதற்காச் சாவை யிடும்பை யெய்துவர்.

சாலரினோ —நன்றாய் ஞாபக மூட்டினீர். நெருநலோர்
பிராஞ்சு தேசத்தா னுடன் பேசினேன்.
பிராஞ்சையும் இங்கிலாந்தினையும் பிரிக்கும்
ஒடுக்கமாங் கடலி லுயர்விலை யுளநம்
கப்பலொன்று கவிழ்ந்ததென் றுரைத்தான்,
அஃதவ னுரைத்தலும் அந்தோனி யோவை
எண்ணி னேனான், அஃதவ ரல்லாததா

யிருக்குக வென்று மவுனமா வேட்டேன். [திர்;

சோலானியோ.—கேட்டதை அந்தோனியோ விடங்கிளத்
ஆயினும் பரபரப் பின்றி யறைகுவீர்,
எனெனி லவர்க்கஃ தின்னல் விளைக்கும்.

சாலரினே.—அவரினு மிகுந்த அன்புள வாடவன்
இப்புவியிலே. அவரும் பசானியோவும்
ஒருவரை யொருவர் பிரிந்ததைப் பார்த்தேன்.
உரைத்தனர் பசானியோ ஒல்லே மீளுவதா.
அவ்வணம் புரியலீர். ஆங்குள பணியை
எற்கா அரைகுறை யாக வியற்றலிர்.
அத்தொழில் முடிவரை யவ்விடத் திருப்பீர்.
உமது காத லுண்ணிறை யுளத்தில்
என்வயின் யூதன் ஏற்றுள வாவண
நினைவுமக் கெய்திடு வதைநீக் குதிரால்.
இருத்திர் களிப்போடு. இயைந்திடு மளவும்
நேசப் படுத்தல் நேச முணர்த்திடல்
இவைகளி னவசிய மெண்ணஞ் செலுத்துதிர்
என்றனர். இவ்வா றியம்புங் காலேயுங்
கண்களிற் கலுழி நிறைமுகந் திருப்பித்
தனது கரந்தனைத் தன்பினர் நீட்டி
இறும்பூ திழைக்கு மிதய நெகிழ்ச்சி
அமையு மன்புடன் பசானியோ கரதலம்
பிடித் தசைத் தனர், அவர் பிரிந்தன ரிவ்வணம்

சோலானியோ.-அவருக் காகவே யவனியை வேட்டனர்
எனயா னெண்ணுவல். வம்மின்யாம் போபவர்க்

கண்டவ ரழுந்துந் துயர்களைந் திடுவோன்
இன்ப மெவ்வண மாயினு மிசைப்பேம்.

சாலரினோ.—அவ்வித மேயா மமைவுடன் புரிவாம்.
[எல்லாரும் போதல்.]

---

## ஒன்பதாம் களம்.

இடம்:—பேல்மண்டு: போர்ஷியா வீட்டின் ஓர் அறை.
[நேரிசா ஒரு சேவகனோடு வருதல்.]

நேரிசா.—சீக்கிரம், சீக்கிரம் என்றுனை வேண்டுவல்,
இன்னே நீக்குதி யெழினியை. ஆரகன்
அரசன் சத்தியஞ் செய்தாய் விட்டது.
தெரிந்தெடுத் தற்குச் செல்லுவ னிக்கணம்.

[எக்காளம் ஊத, ஆரகன் பிரபுவும் போர்ஷியாவும் அவர்கள் பரிசனங்களுடன் வருதல்.]

போர்ஷியா.—கனமுடையரசே! காணுதிர் பேழைகள்.
என்றன் படமுள தெதுவதனைத்தெரிந்
தெடுக்கில்நம் வதுவை யின்னினி முடிவுறும்.
தவறிடி லரசே! மேன்மொழி சாற்றல்
தவிர்ந்துட னித்தலந் தணப்பது தகுதியாம்.

ஆரகன்.—காரிய மூன்று கைக்கொள லாணையால்
எனக்கு விதியே. முதலில் யான்றெடும்
பேழை யெஃதெனப் பிறருக் கோதுதல்
ஒழிவதாம். உத்தமப் பேழையைத் தவறில்
எனது சீவ கால மெல்லாம்
கடிசெய வனிதையைக் கருதா தொழிதலே
அடுத்தது. கடையா யான்றெரிந் தெடுக்கும்
அதிட்ட மிலேனா யாயிடி லக்கணம்
உன்னை விட்டுநா னேடுவ தேயாம்.

போர்ஷியா.—தகுதியில் தமியேன் றனக்காத் துணிபவர்
எவருமிவ் விதிகளுக் கிசைகின் றவரே.

ஆரகன்.—அப்படிக் கியானு மாயத்தமா யுள்ளேன்.
என்மன விருப்பினுக் கதிட்டந் துணைசெய்க.
பொன்னும் வெள்ளியும் பொலிவில்வங் கமுமுள.
"எனைத்தெரிந் தெடுப்போ னுள்ளன வெவையும்
ஈந்ததற்குந் துணிந்திடல் வேண்டும்." ஈய
அலதுநான் றுணிய வாரம்பிக்கு முன்
சுந்தர மிகுத்துநீ தோற்றுதல் வேண்டுமால்.
தமணியப் பேழை சாற்றுவ தெவனோ?
ஆ! நா னஃதை யுற்று நோக்குவன்.
"எனைத்தெரிந் தெடுப்போன் பல்லோர் நச்சுவ
தடைவான்." பல்லோர் நச்சுவது. அப்பலர்
எனுமொழி இடையூ றேய்ந்த சாலையில்
வெளிச்சுவ ரதனில் வெயில்மழை தாக்கக்
குடம்பை கட்டுமூர்க் குருவியைப் புரைய
அகத்துள சிறிதும் நுட்பமா யறியா
மூட மதியரை மொழிகுவது. அன்றியும்
மிகுமறி வின்றி வெளிப்பகட் டாற்றெரி
மதியில் மாக்களையும் தெரித்திடு மன்றோ.
சாமானிய ருடன் சார்தல் புரியவும்
அநா கரிக மக்களு ளமையவும்
ஆர்த்தி யில்லேன். ஆதலிற் பல்லோர்
நச்சுவது நாடுதனை னீக்குவேன்.
ஆயி னிரசித கருவூலப் பேழையாம்
உனைநா னுற்று நோக்குவன். இன்னும்
ஒருமுறை யுன்றன் சாசன முறையாய்.
"எனைத்தெரிந்தெடுப்போன் தகுதிக் கிசைந்ததை

அடைவான்." நன்று யறைந்துள தாலிது.
ஏனெனி லதிட்டந் தனையே மாற்றித்
தகுதி யெனிலச் சினை தரியா தெவன்றன்
முதன்மைக் குரியனு முந்துறத் திரிவனால்.
தனக்குத் தகுதியில் சால்பினை யெவனும்
பூணுதொழிக. புன்றொழி லதனால்
பட்டம் பதவி அதிகாரம் பெறல்
பொருந்தாது. ஏதமில் கவுரவம் பூண்போர்
பாத்திர வளவினற் பெறுவது பான்மையே.
அவ்வித மாமேற் றலைப்பாகை யின்றி
இக்காற் றேற்றுந ரெத்தனை பெயரோ
சிரந்தனை மூடித் திரிவது தகுதியாம்,
பணிவாங் குநர்பலர் பணிசெயற் பாலரே.
அன்றி யுண்மையாக் கவுரவ ராகும்
மணியி னின்றெவ் வளவோ விழிய
நாக ரிகமில் நாட்டா ரான
பதரெத் தனைபெயர் தூற்றிடற் பாலராம்.
பதரே யாகவும் பன்னாட் சென்றதால்
அழிந்தவ ராகவு மமைவுறு மனந்த
பீடி லிழிதகை யோருட் பெருந்தகை
யாகு மெத்தனை பெயரைப் பொறுக்கலாம்.
சரிதான். யானுந் தெரிந்தெடுத் திடுவேன்.
"எனைத்தெரிந் தெடுப்போன் தகுதிக் கிசைந்ததை
அடைவான்," தகுதி யெனக்குள தாக
யானு மதிப்பல். அதற்குத் திறவுகோல்
ஈதிர். ஒல்லையென் னதிட்டங் காண்பேன்.

(வெள்ளிப் பெட்டியைத் திறக்கின்றான்.)

**போர்ஷியா.**—அங்குநீர் காண்பதற் கத்தனை காலமே.

**ஆரகன்.**—இங்கே துளது? மருண்டு நோக்கிழுதைச்
சித்திர மெனக்கொரு சுருள்தந் திடுமால்.
அதை நான்வாசித் திடுவன், அந்தோ! நீ
போர்ஷியா வுக் கெத் தனை பொருத் தம் மிலாய்,
எனது நம்பிக்கை, எனது தகுதி
இவைகட் கிணக்க மெவ்வளவும் மிலாய். [தை
"எனைத்தெரிந் தெடுப்போன் தகுதிக் கிசைந்த
அடைவான்." முழுமகன் றலையே யல்லால்
எனக்குத் தகுதிவே றிலையே போதும்.
அஃதென் பேறு? அதனிலு மிக்க
தகுதி யெற்குச் சாற்றின் மற்றிலையோ? [லும்

**போர்ஷியா.**—செயிர்புரி தலுமதை நியாயந் தீர்த்த
ஒன்றையொன் றொவ்வாத் தொழில்களாய் முர
இயற்கை யுடையன வாகும். [ணிய

**ஆரகன்**— இங்குளதென்?

(வாசிக்கின்றான்.)

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.

தழல்தனிலேழு முறைபுடமிட்டுத் தாழ்விலா திலங்குவதிதுவே,
வழுவுதலெக்கா லத்துமில் மதியா லெழுதாம் ஆய்ந்ததுமிஃதாம்,
நிழல்தனை முத்த மிடுபவர் சில்லோர் நிழல்புரையின்பமே பெறுவர்

அழகுடைமாக்க ளறிவில ரிலக்க மகன்றவரு
ளரென மதித்தேன் (1)
இவரை யொப்பதுவே யிவ்வுயிரில்லா முழுமகன்
றலையுடைப் படமும்
துவரிதழ்த் தோகைக் காதலிவேறு ரென்னினும்மரு
வுவைநீயே
அவனியி லெக்கா லத்துமுன் சிரமா யமருவன்
மடத்தலை யேனும்,
இவணகன் றிடுவாய், ஏகுதி, போந்த காரியமினி
ப்பயனிலையால். (2)

இவ்வயி னிற்பனே லிதனிலு மிகுந்த
அறிவிலி யாகத் தோற்றுவன். கடிமணம்
நாடி வருங்கா ளொருமூடச்
சென்னி யொன்றுளனாய்ச் சேர்ந்தேன். இரண்டுடன்
போதருகின்றேன். போகிறேன். இனியளே!
சலந்தனைப் பொறையாய்த் தாங்கிடுவதுவாம்
எனது சரத மெஞ்ஞான்று மோம்புவேன்.

(ஆரகன் அரசனும் அவன் பரிசனமும் போதல்.)

**போர்ஷியா.**—விளக்கிவ் வாறு விட்டிலைச் சுட்டது.
ஆ! இத் தெரிதர வருமறி விலிகள் !
அவர்தெரிந் திடுங்கா லவர்க்குள யுத்தியால்
உள்ள ஞானந் தனையு மொழிப்பரே.

**நெரிசா.**—தூக்குணல் பெண்கொளல்சூழ்ந்தவினையினால்
ஆமென வரைந்திடு முதுரை சரதமே.

**போர்ஷியா.**—வருதி நெரிசா! திரைதனை மறியாய்

(ஒரு வேலைக்காரன் வருதல்.)

வேலைக்காரன்.—துரைமகளேதோ !
போர்ஷியா.— துரை 'இதோ, வேண்டுவதென்'.
வேலைக்காரன்.—தாயே! தன்னெசமானன் வருவதை
முன்னறி விப்பான் முடுகிய வேனிஷிய
இளவ லொருவனின் னில்வா யிறங்கினன்.
முகமனும் வந்தனமொழியு மல்லது
மிக்கவிலையுள வெகுமதி யாகிய
ஊதிய மாமுப சாரமுங் கொணர்ந்தான்.
இத்தகைக் காதற் றூதனை யிதுவரை
நான்கண்டிலன். இவன் தனது நாயகன்முன்
வருவது கடுப்ப வசந்த காலத்
தெந்த நாளு மிவ்வள வினிமையாய்
வெயில் முதுவேனிற் காலவரவினை
இதுவரை காட்டின தேயிலை யாமால். [னுன்
போர்ஷியா.—போதும், தயைசெய். இப்பொழுதேயவ
சுற்றத்தா னெனச் சொல்வாய் நீயென்
றஞ்சுகின் றேனன். அவனைப் புகழ்வதில்
அத்துணை யதிசய வுத்தி யுடையாய்.
வருதி வருதி நெரிசா ! இத்தனை
உபசா ரத்தோ டுறுமதன் றூதனை
விரைவிற் காண்பான் வேட்டனன் யானே.
நெரிசா.—மதனே! உனக்கது சம்மத மாயின்
வருமவன் பசானியோ வள்ள லாகுகவே.

(எல்லாரும் போதல்.)

---

# மூன்றாம் அங்கம்.

## முதற்களம்.

இடம்.—வெனிஸ் நகரம் ஒரு வீதி.

[சோலானியோ சாலரினோ வருதல்.]

சோலானியோ.—நல்லது. பரிவர்த்தன சாலையில் விசேஷமென்ன?

சாலரினோ.—என்ன? குட்வின்ஸ் என்று பெயருள்ளதாக நான் எண்ணுகிற ஒடுக்கமான கடலில் மிக்க விலையுள்ள சரக்குகள் ஏற்றப்பட்டிருந்த அந்தோனியோவின் கப்பலொன்று உடைந்துபோன வதந்தி இன்னுமிருந்து கொண்டேயிருக்கிறது. அது மிகுந்த அபாயகரமும் தீங்கிழைப்பதுமான ஒருமணற் சமபூமி. உலகவதந்தி என்னும் மாது உண்மைமொழி யுடையாளெனில் அவ்விடத்தில் அநேகம் உயர்ந்த கப்பல்களின் சரக்குக்கள் புதையுண்டிருக்கும்.

சோலானியோ.—வழக்கம்போல் இஞ்சிதின்ற, அல்லது தன்னுடைய மூன்றாவது கணவன் இறந்ததனால் அழுவதாகத் தன் அயலாரை நம்பச்செய்த, பெண் பிள்ளையைப் போன்று, வதந்தி என்னும் பெண்ணானவள் இது விஷ

யத்தில் பொய்யளாகக் கடவளென்பது என் விருப்பம். மிகைபடக்கூறுமலும் வார்த்தை யாகிய இராச பாட்டையில் குறுக்கே செல்லாமலும் பேசுங்கால் உண்மைபாக நன்மை மிக்க அந்தோனியோ, யோக்கியரான அந்தோனியோ, அவர்பெயருடன் சேர்த்துச் சொல்லத்தக்க நல்லபட்டம்வேறு இருக்கவேண்டுமென்று நான் விரும்புகின்றேன்.

சாலரிஞே.—சரிதான். சொல்வதைப் பூர்த்திசெய்யும்.

சோலானியோ.—ஆ! நீர் என்ன சொல்லுகின்றீர்? ஏன்! அவர் ஒரு கப்பலை இழந்தார். இது தான் முடிவு.

சாலரிஞே.—இதுவே அவர் நஷ்டங்களின் முடிவாயிருக்க வென்று நான் ஆவலுடையேன்.

சோலானியோ.—என் பிரார்த்தனைக்கு இடையூறுகப் பிசாசு செய்யாவண்ணம் நான் சீக்கிரத்தில் 'ஓம்' எனச் சொல்வேனுக. ஏனெனில் அவன் இதோ யூதன் உருவத்தோடு வருகின்றான்.

[ஷைலாக் வருதல்.]

என்ன ஷைலாக்கே! வர்த்தகர்களுக்குள்ளே என்ன சமாசாரம்?

ஷைலாக்.—என் மகள் பறந்துபோனதைப் பற்றி நீர் அறிவீர். அவ்வளவு நன்ருக வேறொரு

வருமறியார். உம்மைப்போல் வேறொருவரும் அவவளவு நன்றாக அறியார்.

சாலரினோ.—அது நிசமே. அவள் பறந்துபோன சிறகுகளைச் செய்து தந்த தையற்காரன் யாரென்று எனக்கும் தெரியும்.

சோலானியோ.—அந்தப்பறவை சிறகு முளைத்துப் பக்குவமடைந்ததென்று ஷைலாக் தாமே அறிவார். அப்பறவைகளெல்லாம் சிறகு முளைத்தவளவில் தாயை விட்டகறல் சுபாவமே.

ஷைலாக்.—அப்படிச் செய்ததற்காக அவள் நரகம் புகுவாளாக.

சாலரினோ.—பிசாசு அவளுக்கு நியாயாதிபதியானால் அது நிசமாம்.

ஷைலாக்.—என் சொந்த ஊனும் உதிரமும் எனக்கு விரோதமாய்க் கலகம் செய்வதா ?

சோலானியோ.—அழுகிப்போனகிழத்தசையே! உனக்கு வெட்க முண்டாக. இந்த வயதிற் கலகம் செய்கின்றையா ?

ஷைலாக்.—என் மகள் என் ஊனும் உதிரமும் என்று சொல்லுகிறேன்.

சாலரினோ.—அஞ்சனத்திற்கும் யானைத் தந்தத்திற்குமுள்ள பேதத்தினும் மிக்கபேதம் உமது தசைக்கும் அவள் தசைக்குமுளது. சிவப்பு முந்திரிகையின் இரசத்திற்கும் ரேனிஸ் வெள்ளை முந்திரிகையின் இரசத்திற்கு முள்

ளதினும் மிக்க பேதம் உங்கள் இரத்தங்களிலுள்ளது. அந்தோனியோ கடலில் ஏதாவது நஷ்ட மடைந்தாரா, இல்லையா என்று கேள்விப்பட்டீரா? சொல்லும்.

ஷைலாக்.—அதிலெனக்கு வேறொரு நஷ்டமான வியாபாரம். பரிவர்த்தன சாலையில் தன் தலையைக் காட்ட மாட்டாதவன். வாங்கின கடனிறுக்க நிருவாக மில்லாதவன். வீண் செலவாளி. பரிவர்த்தன சாலையில் பொருளுடையவன்போல் தோற்றி வரும் பிச்சைக்காரன். அவன் முறியைப் பார்த்துக்கொள்ளக்கடவன். அநியாய வட்டிக்குக் கொடுப்பவனென்று என்னை யெப்பொழுதும் சொல்லுகிறவன். தன் உடன்படிக்கையைப் பார்ப்பானாக. கிறிஸ்தவதருமத்திற்காகப் பணம் கொடுப்பவன். அவன் தன் ஆவணச்சீட்டை நோக்குவானாக.

சாலரினோ.—ஏன் ? அவர் தவறினால் அவர்மாமிசத்தைப் பெறமாட்டீர் என்பது எனக்குத்திண்ணமே. அது எதற்கு உபயோகம் ?

ஷைலாக்.—மீன் பிடிக்க, அதைத் தூண்டிற் சுவையாக்க. அது வேறொன்றுக்கும் உணவாய் உதவாவிட்டாலும் என்பகைசாதிக்க உணவாயுதவும். அவன் என்னை அவமதித்து ஐந்து லட்சம் 'டக்கற்று' எனக்கிலாபம் வராமல் தடுத்திருக்கிறான். என் நஷ்டத்தைக்

கண்டு சிரித்தான். என் இலாபத்தைக்கண்டு பரிகசித்தான். என் குலத்தாரை நிந்தித்தான். என் இலாபங்களுக்கு இடையூறு செய்தான். என் நண்பர்கள் நண்பிற் குறையச்செய்தான். என் விரோதிகளின் விரோதத்தை விருத்தி செய்தான். இவைகளெல்லாம் ஏன் செய்தான்? நான் யூதனும். யூதனுக்குக் கண்களில்லையோ? கைகள் கால்கள் அகக்கருவிகள் புற உறுப்புக்கள் பஞ்சேந்திரியங்கள் மனோ விகாரங்கள் மனச்சலனங்கள் யூதனுக்கில்லையோ? கிறிஸ்தவன் புசிக்கும் போசனம் அவனும் புசிப்பதில்லையோ? ஒரே தன்மையான ஆயுதங்களால் காயம் அடைவதில்லையோ? ஒரே வியாதிகட்கு உள்ளாவதில்லையோ? ஒரே தன்மையான ஏதுக்களால் வியாதி நீங்குவதில்லையோ? ஒரே தன்மையான சீதோஷ்ணங்களால் குளிர்ச்சியும் வெப்பமும் அடைவதில்லையோ? நீங்கள் எங்களைக் கிள்ளினால் எங்களுக்கு உதிரம் பாய்வதில்லையோ? நீங்கள் எங்களைக் கூச்சங் காட்டினாற் சிரியோமோ? நீங்கள் எங்களுக்கு நஞ்சைக்கொடுத்தால் இறவோமோ? நீங்கள் எங்களுக்குத் தீங்கு செய்தால் நாங்கள் பழிவாங்கோமோ? மற்றவைகளில் நாங்கள் உங்களை ஒத்திருந்தால் அதிலும் உங்களை ஒத்திருப்போ

ம். ஒரு யூதன் ஒரு கிறிஸ்தவனுக்குப்பிழை செய்தால் அவன் தாழ்மையை எவ்விதம் காட்டுகின்றான்? பகைபாராட்டியே. ஒரு கிறிஸ்தவன் ஒரு யூதனுக்குக் குறையியற்றின், கிறிஸ்தவனது சித்தாந்தத்தின்படி அவன் பொறையென்ன? கேட்கவேண்டுமோ? தீமைக்குத்தீமை புரிதலே. நீங்கள் ஓதுவிக்கும் துன்மார்க்கத்தை நானும் பின்பற்றுவேன். எனக்குப் போதிப்பித்ததை விருத்தி செய்து காட்டாவிட்டால் எனக்குக்கெடுதி சம்பவிக்கக் கடவதாக.

[ஒரு வேலைக்காரன் வருதல்.]

வேலைக்காரன்.—துரைகளே! என் எஜமானாகிய அந்தோனியோ தம்முடைய வீட்டிலிருக்கிறார். உங்களிருவருடனும் பேசப் பிரியப்படுகின்றார்.

சாலரினோ.—அவரைப்பார்க்கவூரெல்லாந்தேடினோம்.

[தியூபல் வருதல்.]

சோலானியோ.—அந்தக் குலத்தைச்சேர்ந்தோன் இன்னொருவன் இதோ வருகின்றான். பிசாசே யூதன் ஆனாலொழிய இவர்களுடன் சேர்த்து எண்ணத்தகுதியான மூன்றாமவனில்லை.

[சோலானியோ, சாலரினோ, வேலைக்காரன் போதல்.]

ஷைலாக்.—என்ன? தியூபலே! ஜினோவாவில்என்ன விசேஷம்? என் மகளைக் கண்டு பிடித்தீரா?

தியூபல்.—அவளைப்பற்றிக் கேள்விப்பட்ட விடங்க

ளுக்கெல்லாம் அடிக்கடி போனேன். ஆனால் அவளைக் கண்டுபிடிக்கக் கூடவில்லை.

ஷைலாக்.—என்ன! ஐயோ! ஐயோ! ஐயோ! ஐயோ! பிராங்கு போர்ட்டில் இரண்டாயிரம் 'டக்கற்று'க்கொடுத்து நான் வாங்கின ஓரிரத்தினம் போய்விட்டது. இது வரையில் ஒரு காலும் நமது சாதியாருக்குச் சாப விபத்து நேர்ந்ததில்லை. இது வரையில் நான் அதை உணர்ந்ததில்லை. அதில் இரண்டாயிரம் 'டக்கற்றுகள்' தொலைந்துபோய் விட்டன. அதைத் தவிர மிக்க விலையுள்ள ஆபரணங்களும் தொலைந்தன. என் மகள் என் கால் மாட்டில் இறந்து கிடக்க அவள் காதில் நகைகளிருந்தால் அது எனக்குப் பிரீதியாயிருக்கும். என் காலடியில் அவள் பாடையில் கிடக்க அவள் பிரேதப்பெட்டியில் என் 'டக்கற்று'களிருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். அவைகளைப்பற்றி ஒரு சமாசாரமுமில்லையா? நல்லது! அவைகளைத் தேடுவதில் எவ்வளவு செலவாயிற்றோ அறியேன். ஆ! நஷ்டத்திற்குமேல் நஷ்டமே. திருடன் கொண்டுபோனது அவ்வளவு. திருடனைக் கண்டுபிடிக்க அவ்வளவு. திருப்தியில்லை. பழிக்குப் பழியுமில்லை. என் தலைக்குவந்ததைத்தவிர வேறு துரதிர்ஷ்டமுமில்லை. நான் விடுகிறதைத்தவிரவேறு பெருமூச்சு

மில்லை. நான் சிந்துகிறதைத்தவிர வேறு கண்ணீருமில்லை.

தியூபல்.—ஆம் ஏனையோருக்கும் துரதிருஷ்டமுண்டு. நான் ஜினேவாவில் கேள்விப் பட்டபடி அந்தோனியோ—

ஷைலாக்.—என்ன? என்ன? என்ன? துரதிருஷ்டமா? துரதிருஷ்டமா?

தியூபல்.—டிரிப்போலியிலிருந்துவந்த ஒரு கப்பலுடைந்துபோய்விட்டது.

ஷைலாக்.—சுவாமிக்கு வந்தனம். சுவாமிக்கு வந்தனம். நிசந்தானா? நிசந்தானா?

தியூபல்,—உடைந்த கப்பலிலிருந்து தப்பிவந்தசில கப்பற்காரருடன் பேசினேன்.

ஷைலாக்.—நல்ல தியூபலே! உமக்குவந்தனம். நல்ல சங்கதி. நல்ல சமாசாரம். ஆ! ஆ! எங்கே ஜினேவாவிலா?

தியூபல்.—ஓரிராத்திரியில் ஜினேவாவில் எண்பது 'டக்கற்று' உமது மகள் செலவிட்டதாகக் கேட்டேன்.

ஷைலாக்.—ஒரு சுரிகையால் நீரென்னைக் குத்துகின்றீர். என் பொன்னை இனி யொருகாலும் நான் காணமாட்டேன். ஒரே முகூர்த்தத்தில் எண்பது 'டக்கற்று,' எண்பது 'டக்கற்று!!

தியூபல்.— அந்தோனியோவுக்குக் கடன்கொடுத்தோர் அநேகர் என்னோடு வெனிஸ் நகரத்தி

ற்குவந்தார்கள். அவர்கள் அவன்கடன்தீர்க்க வகையற்றவனாக வேண்டியதைத்தவிர அவனுக்கு வேறே மார்க்கமில்லை யென்று சத்தியஞ் செய்தார்கள்.

ஷைலாக்.—அதைப்பற்றி யெனக்குமிகுந்த ஆனந்தம். அவனைப் பிடிப்பேன். அவனைச் சித்திரவதை செய்வேன். அதைப்பற்றிச் சந்தோஷம்.

தியூபல்.—ஒரு குரங்கைக்கொடுத்து உமது மகளிடத்திலிருந்து தான்பெற்றஒருமோதிரத்தை அவர்களிலொருவன் எனக்குக்காட்டினான்.

ஷைலாக்.—அவள் நாசமாகப்போகட்டும். தியூபலே என்னைச் சித்திரவதை செய்கின்றீர். அது என் வைடூரியம். நான் பிரமசாரியாயிருந்தபொழுது லீயா எனக்குத் தந்தது. ஒரு காட்டிலுள்ள குரங்குகளையெல்லாம் கொடுத்தாலும் அதை நான் கொடுக்கமாட்டேன்.

தியூபல்.—அந்தோனியோ நிச்சயமாகக்கெட்டுப்போனான்.

ஷைலாக்.—அது நிசமே. அது மிகவும் நிசமே. தியூபலே! போய் எனக்காக ஒருத்தியோகஸ்தனைத் தீர்மானியும். இரண்டு வாரத்திற்கு முன்னேயே பேசித் தீர்மானியும். அவன் தவறினால் அவன் இரத்தாசயத்தை நான் பெறுவேன். ஏனெனில் அவன் வேனிஸ் நகரத்தைவிட்டு ஒழிந்தால் என்னால் கூடிய

அளவு இலாபஞ் சம்பாதிப்பேன். தியூபலே ! போம். போம். நமது ஆலயத்தில் என்னைச் சந்தியும். நல்ல தியூபலே ! போம். தியூபலே ! நமது கோவிலில் (சந்தியும்.)

(எல்லாரும் போதல்.)

---

## இரண்டாம் களம்.

இடம்:—பெல்மண்டு, போர்ஷியா வீட்டின் ஓர் அறை.

[பசானியோ, போர்ஷியா, கிராஷியானே நெரிசா இவர்களும் பரிவாரங்களும் வருதல். பெட்டிகள் வெளியில் வைக்கப்பட்டிருக்கின்றன.] கின்றேன்.

போர்ஷியா.—தாமதஞ் செய்கெனத் தமைப்போற்று

தேர்ந்திடு முனமிரண் டொருதினந்தாமிரும்.
சரியல தாய்ந்திடி னுஞ்சகவாசம்
அகலு மாதலி னீர்சற்றுத் தாமதியும்.
நீங்கே னுமையென நிகழ்த்தா நின்றது.
அன்போ என்னின் அன்று. வெறுப்போ
இத்தகைப் புத்தி யியம்புத லின்றென்
றறிதிர் நீரே. ஐயோ ! கன்னிகைக்
குன்னுவ தொழிய வுரைப்பது மாண்பல.
ஆயினு மெனைநீர் நன்று யறிதர
மோசத் துறைக்கெற் காக முடுகுமுன்
இரண்டொரு திங்க ளிவ்வயி னுமைநான்
நிறுத்துவல். உமக்கு நிதானமாம் பேழையை
ஓர்ந்திட வோதுவேன். ஆயி னதனல்
ஆவேன் சத்தியம் பிழைத்தவள். அவ்விதம்
எக்கா லும்யா னிருப்ப தில்லையால்.
ஆகலி னெனைநீ ரடைத றவறினும்
தவறுதிர். அப்படி யாதலிற் சத்தியங்
கொன்றே னுகுக வெனக்குறிபாவம் யான்
புரிந்திட மிகுநயப் புடையோ ளாக்குதிர்.

நீர்சபித் திடுவீ ருமதுநேத் திரங்களே.
என்னை மயக்கி யெனைப்பிரித் திட்டவால்.
என்னிலோர் கூறுமதே. எனதென
இயம்பற் பாலதா மேனைய பாதியும்
உமதே. எனதெனி னுமதே யாகலின்
எல்லா முமதே, இத்தீ நாட்கள்
உடையோர்க் குரிமை யுதவா தொழிக்கும்.
ஆதலி னுமதே யாயினு முமதல்ல.
அங்ஙனந் தவறில் ஆரிருட் புகுவது
அதிட்டமே, யானல. அளவுவிஞ் சின வென்
உரையே. பேழை யுணர்தல் தவிர்த் துயான்
கால கரணஞ் செய்வது காலம்
நீண்டதி கப்பட நிகழ்த்துதற் பொருட்டே.

**பசானியோ.**—தெரிவே னாக. ஏனெனிற் சித்திர
வதைக்களத் துளன்போல் வதிதரு கின்றேன்.

**போர்ஷியா.**—சித்திர வதையைச் செயுமிடத் துள்ளீர்,
ஆயின் உம்மன் புடனுளாயது துரோகம்
அதுவெது வெனமெய் யறைதிர்பசானியோ !

**பசானியோ.**—எனது காத லெற்கெய்து மோவெனும்
அச்சம் விளைக்கு மையமே யன்றித்
துரோகம் வேறில. துகினத் தினுக்கும்
எரிய ழலுக்கு மிணக்க முளதெனில்
அதற்கு மிணக்க முண்டாயிடு மறிதி.

**போர்ஷியா.**—ஆம். சித்திரவதைத் தான மடைந்துளார்
படுவே தனையாற் பகர்ந்திடு மாபோல்
எஃதோ வியம்பினி ரெனயா னஞ்சுவல்.

பசானியோ.—எற்குயி ரளிப்பே னெனச்சூ ளியம்புதி,
உண்மை யொழியா துனக்கோ துவல்யான்.
போர்ஷியா.—ஆயி னுண்மை யறைவிர் வாழ்ந்திடுவிர்.
பசானியோ.—காதலித் தேனென மெய்யிற் கழறலே
உண்மை யறிக்கை முழுவதூஉ மாகும்.
எனைநோய் செய்த நீ யானுய் வதற்காம்
முறையை மொழிவதில் இன்பமே தனையே.
ஆயினு மென்ற னதிட்டம், பேழைகள்
தம்மிடை யென்னைச் சார்ந்திட வுய்த்தி.
போர்னியோ.—ஆயிற் போதிர். அவைகளிலொன்றினுன்
பூட்டப்பட்டுளேன். எனைநீர் பொய்யிலா
அன்பால் வேட்டுளீ ராமெனிற் காண்பீர்.
நெரிசா! ஏனையோர் நின்மி னீரகல.
அவர்தெரிந் திடுங்கா லார்த்திட வாத்தியம்.
அன்னவர் பெற்றில ராமெனிற் கீதம்
பாடிப் பைப்பைய விறக்கு மன்னப்புட்
போலவே யிவரும் பொன்றிடு வாரால்.
உவமைஇனும்மிக வுசிதமாம் வண்ணம்
என்கண் ணிவருக் கோடையு முதக
மரணப் படுக்கையு மாகவாய்ந் திடுமால்.
அவர்பெற்றிடிலோ வாச்சியம்யாவதாம்?
புதிதா மகுடம் புனையரை யன்றனைச்
சத்திய பத்தி தானுடைச் சனங்கள்
முறைமுறைவணங்க முழங்குபல்லியமும்
கடிநாட் காலையிற் கனவுறீஇத் துயிலும்
மணமகன் செவியுற வவன்றனை வதுவைக்

கழைக்கு மாலய மணியி னேசையுமாம்.
கதறுறும் ட்ரோஜன் கடலரக்க னுக்கிடு
கன்னிப் பலியை யுயிர்காத் திடுங்கால்
இளமைசேர்ஆல்சிடீஸ் சென்றதற்கிறையும்
குறைவில் கண்ணியக் கோலத் துடனும்
ஆயினு மவனிலுங் கழிநனி யன்பு
சேர்ந்துமிப் பொழுதிவர் செல்லுகின் றனரால்,
பலியிடு பண்டமாய் நிற்கின் றேன்யான்.
அயலுள வனைவரும் அழுதலிற் கண்சிவப்
பமைதரு முகத்தின ராகி யாண்டொழில்
முடிவு காணுற முந்துறு ட்ரோஜன்
பூவைய ராவரால். போதிர் எர்க்கியுலீஸ்.
வாழ்ந்திடி னீருயிர் யானும் வாழ்ந்துளேன்.
சமர்புரி நும்மினுந் தவமனக் கலக்கம்
அமைதரு பவளா யமர்நோக்குவனியான்.

[பசானியோ தனக்குள்ளே பேழைகளைக்குறித்து ஆலோசிக்குங்கால் வாத்தியம் முழங்கப் பின்வரும் பாட்டுப் பாடுதல்.]

குறள் வெண்செந்துறை.

அன்புமுளை யரும்புமிட மிருதயமோ சிரமோ
அவ்விடமெற் கறைந்திடுவாய் பிறந்ததெவண்வளரும்
இன்பொடுமெவ் விதமியம்பா யெதிர்விடை யெற்களிப்பாய்
இதுவிழிக ளாந்தலத்திற் றோன்றிடுவ தாமே (1)
பார்வையினில் வளருவதாம் பார்வைதரு மன்பு

படுக்குமிளங் குழவியுடைப் படுக்கையின்மா ய்ந்திடுமால்
ஆர்வமொடெல் லாநாமுஞ் சாவுமணி யறைவோம்
அதனைக்கிண் கிணியெனநா னாரம்பித்திடுவேன்(2)

(எல்லாரும் கிண்கிணி கிண்கிணி என)

பசானியோ.—இவ்வித மாகவே வெளித்தோற் றம்மெலாம்
இழிதகைத் தாகுக. என்றுமிவ் வுலகம்
பகட்டினால் வஞ்சிக்கப் படுவதே.
சாற்றுங்கால் வழக்குச் சட்டந்தனில்
மோசமுங் கெடுதியு முன்னிறை வழக்குகள்
இனிய மொழிகளா லிரச முடையவாய்த்
தோஷத் தோற்றம் மறையா தவையெவை?
சமய சாத்திரந் தனி லிகழ் வுறலாங்
குற்ற மொரீஇ நற் குணமுள தேசிகன்
ஏற்புடைத் தாக வேத மெடுத்துரைத்
தணிபெற வமைத்திடா வாசு மற்றுளதோ?
சுகுணத் தோற்றஞ் சிறிது வெளிப்புறந்
தாங்கிடாத் தனித்தீக் குணமொன் றின்றே.
எர்க்குலீஸ் முகக்கடுப்புடைய மார்ஸிவர்களின்
மோவா யதனை மொய்ம்புறப் புரியுந்
தாடி களைத்தாந் தாங்கின ராயினும்
மணற்சோபான மானும் பொய்யாம்
இதயத்தினரா யீரலையுள்ளே
பார்க்கிற் பால்போல் வெண்மை யுடையரா
வதிமனக்கோழைய ரெத்தனை பெயருளர்?

இவர்தமக் கேனைய ரஞ்சிட வீரர்க்
கமைதருந் தாடி யாரோ பிப்பரால்.
அழகைநோக்குதி. அஃது நிறுத்துக்
கொளப்படும் பொருள்களா லாவது குறித்திநீ.
அங்ஙன நிறைப்பொரு ளார்ந்த தாயினும்
அப்பொருள் களை மிக அணிந்தவர் கனம்பெரு
திலேசு படச்செய் திடுதலா லவ்வெழில்
செகத்தி லதிசயஞ் செயுமியல் பிற்றும்.
தன்னை யீன்ற கபாலம் சமாதியி
லிருக்கத் தானு மின்னொரு தலைக்குச்
சீதன மானதா அடிக்கடி தெரிவதாய்க்
கற்பிதமாகச் செயப்பெறு கவினின்
தலைமேற் காற்றி லுல்லாச மாக
அலையும் சுரிபொற் கூந்தலு மன்னதே
யாகும், ஆதலினால் வெளித்தோற்றம்
மிக்கவிடருளவேலைக் கழைத்தாங்
கேமாற்றுந்துறையே, இந்திய னெழிலைக்
காக்குங் கவின் சேர் கஞ்சுக மேயாம்.
சுருங்கச் சொல்லில் கூரறி வாளரை
வலையிற் சிக்கிடச் செய்ய வஞ்சகக்
காலந்தரித்திடுங் கபடமார் மொழியே.
ஆதலின் மைடஸ் ஆனவ னுக்குச்
சீரணமாதல் செல்லாவுணவாம்
பிலுக்குடைப்பொன்னே! பெறேனுனிற்சிறிதும்.
வெளிறி நரர்களின் வேலைசெய் யாளே!
அற்பமு முன்பா லடைந்திடே னே.

ஏது மீவதாய் வாக்களித் திடாமல்
அச்சுறுத் துவதா மழகிலா வங்கமே !
சொல்வண் மையினும் நின்வெள்ளிய தோற்றமே
என்மனமிளக்குமால். இதையேநான்றெரிந்
தெடுக்கிறேன் எனக்கானந்த முண்டாகுக.

போர்ஷியா.—ஐயமு மாய்ந்திடா வவ நம்பிக்கையும்
பணிப்புறு பயமும் பசுநிறப் பார்வைசேர்
காதற் பொறாமையுங் கடுக்கும்விகாரமும்
எல்லாம்வளியென வெங்ஙனம்பறக்கும் !
ஆ! காதலே ! நீஅளவா அமைதியால்.
நினது பரவசந் தணித்தி. நின்னுடைய
ஆனந் தத்தை யளவிட் டடக்காய்.
இப்பே ரின்பஞ் சற்றே குறைத்தியால்.
உன்னருள் கண்டியான் மெய்ம்மறந் துள்ளேன்
தெவிட்ட லுறுவணஞ் சிறுக்கச் செய்திடு.

பசானியோ.—இவ்வயின் யான் கண்ணுறுவதென்கொ
லாம்?

(வங்கப்பேழையைத் திறந்து)

செவ்விசேர் போர்ஷியா சித்திரப் படமே !
சிருட்டியை யித்துணைச் சிவணுற வெழுதிய
தெய்விக நரன்யார் ? இவ்விழி அசைபவோ?
இலையெனி லென்றன் விழியூர் தியினில்
ஊர்தலி னசைபவாய்த் தோற்றுகின் றனவோ?
இன்னுயிர்ப் பதனாற் பிரிவுறு மிதழிவை.

இத்துணை யினிதா மின்னுயிர்ப் புத்தடை
அத்துணை யினிய வன்பரைப் பிரித்தல்
அழகிதே,இதோ அவள் அளக பாரத்தில்
ஓவியன் சிலம்பி போற்றொழி லுஞற்றிச்
சிலந்தி வலையினிற் சிக்கிடு மீயினும்
அதிவிரை வுடனே யாடவ ரிதயம்
கண்ணியிற் சிக்குறக் கனக வலைகள்
செய்துளான். ஆ! ஆ!! அவள் நேத்திரங்கள்
இரண்டையுந் தீட்டிடப் பார்ப்பதெவ் விழியால்!
இயற்றிய வொருகணே இயற்றியோ னிரண்டு
நயனமுங் கவர்நலம் படைத்தலினால்,
அதன்றுணை யெழுதப் படாததாய் விடுமே.
எனினுமிச் சாயலை யானெவ் வளவு
குறைவாக் கூறுபு கோளிழைத் தேனோ
அவ்வள விச்சாயலு மப்பொருட்குக்
குறைந்ததாக் குறித்தியால். எனததிட் டத்தைச்
சுருக்கியடக்கிய சுருளிதோவுளதே

(வாசிக்கிறான்.)

ஈரடித்தாழிசை.

செப்புவெளித் தோற்றமதாற் றெரிந்தெடுத்திடாநீயும்,
அப்படிச்செய் பவர்போ னல் லதிட்டமனைத் தையு
மடைவாய். (1)
அவ்வளவாமுண்மையினா லாய்ந்தெடுத்தாய் மற்றிதனை,
இவ்வளவா நல்லதிட்ட மேய்ந்ததனாற் றிருத்தியடை.()
புதிதாகப் பிறிதொன்றைப் புந்தியினி னாடாதே,
இதினீயு நனிதிருத்தி யடை. உனக்கீதியைந்ததுதான்.

இன்புதவுமதிட்டமெனவெண்ணுதியெனவெண்ணிமனைக்
கன்புதவு முத்தமிட்டாங் கவணலங்கொண்டாடாயே.()

சீலமுடைய திச்சுருள் திருமாதே.

(முத்தமிடுகிறான்.)

நின்னநு மதியுட னினைமுத் தம்மிட
மனைவியாக் கொளவதி காரம் வாய்ந்துளேன்.
இகலாட் டம்புரி இருவரி லொருவன்
நோக்குந ருவப்பும் ஆர்ப்பும் நோக்குபு
சித்திதா னடைந்தது தேர்ந்து மயங்கிப்
போற்றுபே ரொலிதனைப் புகழலோ இலையோ
எனுமயிர்ப் புடனினு நோக்குறு மாபோல்
உன்னு னுறுதியா லொப்பமிட் டுறுதிப்
படும்வரை யான்பார்த் ததுமெய் யோவென
ஐயத் துடனு னமைதரு கின்றேன்,
வனப்பு மும்மடங்குறு நற்றுரை மகளே !

போர்ஷியா.—யானுள வாறெனை யானிற்கும்மிடம்
பார்க்கின் றீராற் பசானியோப் பிரபுவே !
எனக்காக வேநா னிதனிலு மிக்காள்
ஆம்பே ராசை யில்லே னுயினும்
அறுபது மடங்குற அவாவினேனும்பொருட்டு.
அழகி லாயிரம் செல்வத்தயுதம்
மடங்குற வேட்பல். அஃதெலாநும் மதிப்பில்
சற்குணஞ் சவுந்தரந் தனம்பாங் கர்களாம்
இவற்றின் மிக்களா யிருத்தற் பொருட்டே.
என்பொருண் முழுவதூஉ மின்மையே யாம். யான்

சுருக்கிச் சொல்லிற் கல்விகற் பித்திடப்
படாத சிறுமியே. ஆயினு மவடான்
கற்கும் பிராயங் கடந்திலள் களிப்பே.
கற்றிடல் கடினமாம் வணமவண் மந்தமாய்ப்
பிறந்து வளர்ந்தில ளிதுபெருங்களிப்பே.
அவட்குக் கணவனுந் தலைவனு மரசுமாம்
உம்வயிற் சாந்தமாந் தன்னுயி ரதனை
ஒப்புவித் துளாளிது நனிமிகு களிப்பே.
எனது மியானு நுமது நீருமாய்
இப்பொழு தாயினேம். இதற்கொரு கணமுன்
இவ்வெழின் மாளிகைக் கிறைவி யாகவும்
என்பணி செய்வோர்க் கெசமானி யாகவும்
எனக்கு நானேயரசி யாகவு மிருந்தேன்.
இக்கண மதனி லிப்பொழு தேயிவ்
இல்லமிச் சேவக ரிந்த நானும்
உம்மவை யாயினே மொப்பிலென் றுரையே!
அவைதமை யிக்கணை யாழியோ டளிக்கிறேன்.
இதைநீர் பிரிந்திழந் தீயுமெல் வையில்
அதுநுங் காதலழிவின் முற்குறி
ஆய்நான் குறையறை வதற்குச் சார்பாம்.

**பசானியோ.**—பெண்ணே எனைநீ பேச்சில னாக்கினை.
என்னரம் பினுள விரத்தமேயியம்பும்.
பிரசைகள் பிரியமாய்ப் பேணு றுமரசன்
செப்ப மதாப்பிர சங்கஞ் செய்தபின்
யாவரு மார்த்து வப்புடன் பேசலினாற்
கலந்த குழப்பமுங் களிப்புமேயன்றி

எதுவும் விசதமாய்த் தோன்றிட லிலதாய்
இருக்குமா றெனதகக் கரணந்தனில்
மயக்க மேயலான்மற்றொன் றில்லையால்.
இவ்விரல் விட்டிவ் வாழி யகலுமேல்
ஆக்கைநின் றுயிர்தா னகலுமப் பொழுதே.
ஆ! அக்கால மதனிற் பசானியோ
இறந்தன னெனநீ இயம்பாய் துணிவுடன்.

நெரிசா.—என்னேச மானே ! என்னேச மானியே !
இதுவரை யயல்நின் றெமதிட்ட பூர்த்தி
வாய்ந்திடப் பார்த்தனம் மங்களம் கூறுதற்
கமயமற் றிதுவால். அறைகுது மங்களம்.

கிரா.—பசானியோ பிரபுவே ! பண்புடை யம்மணீ !
பெட்புறத் தகுசுகம் யாவுநீர் பெறுக.
நான்நற் பாலதாய் நண்ணுவ தெதுவுநீர்
இச்சியீ ரென்பதெனக்கு நிச்சயமே.
ஒருவருக் கொருவர்கொள் காதலொப் பந்தம்
கனமிகுந் தாங்கள் முற்று வித்திடும்
அக்கா லத்திலே யானு மணஞ்செய
உத்தரந் தரநா னுமைவேண்டு கின்றேன்.

பசானியோ.— உமக்குமோர் பெண்ணுள ளெனின் [முழுப்பிரியமே.

கிராஷியானோ.—எற்குநீ ரொருபெண் ணீந்தனிர், வந்த [னம்.
உம்முடை நாட்ட மொப்பவென் னாட்டமும்
துரிதமாய் நோக்கவுங் கூடுமென் றுரையே!
தலைவியை நோக்கினீர் தாதியை நோக்கினேன்.

வேட்டீர் நீரும்; வேட்டனன் யானும்.
ஏனெனி லுமைப்போ லெனக்குந் தாமதம்
ஒவ்வா தாகுமால். உம்முடை யதிட்டம்
அவ்வயி னுளபே ழையினமர்ந் ததுவாம்.
தற்கா லத்துச் சார்நிகழ்ச் சிப்படி
அதிட்டமென் னுடையது மதிலே யமர்ந்ததாம்,
வியர்வை யரும்பிடக் காதல் விளம்பியும்
அண்ண முலர்ந்திட வாணை யிட்டும்
கடைசியிற் பிரதிக்கிணை கடவா ளென்னில்
உமததிட் டத்தா னுவளைநீ ருற்றிடின்
இவ்வனப் புடையா ளெனக்கவள் காதல்
ஈந்திடு முறுதி மொழியெற் கிசைத்துளாள்.

போர்ஷியா.—நேரிசா! இஃது நிசமோ நிகழ்த்தாய்

நேரிசா.—உமக்கதுபிரியமேல்,உண்மையே அம்மா!

பசானியோ.—உண்மையா வுன்னினிர்; கிராஷியானோ [உரையும்.

கிராஷியானோ.—ஆமாம் உண்மையேஎன தாண்டகையே!

பசானியோ.—உமது மணத்தினு லெமது வதுவையும்.
அடைந்திடு மிகுகனம்

கிராஷியானோ.— ஆ! இதோவருவதார்?
லாரேன்சோ! அவன் யூதையும்? ஆ! ஆ!
என்றன் வெனிஷிய எனுவன் சோலானியோ?

[லாரேன்சோ ஜெசிக்கா, சோலானியோ வருதல்.]

பசானியோ.—நவீன வுரிமை யிங்குமது நல்வரவு
ஏற்றிட வெற்குச் சுதந்தரந்தருமேல்,
லாரேன்சோ சோலானியோ வந்தனமையா,

இனியளே ! போர்ஷியா ! எனதுநாட் டார்களும்
உண்மைத் தோழரு மாமிவர்திறத்துன்
இசைவுட னேற்பேன்; இதுநல் வரவே.

**போர்ஷியா.**—ஏற்றன னவர்வரவியானும் அவர்தம்
வரவு நமக்கு மங்களவரவே.

**லாரேன்சோ.**—வந்தன முமக்குத் தந்தனம் வள்ளால் !
இங்குமைப் பார்க்கயா னெண்ணிட வில்லை.
ஆனுற் சோலானியோ வழிதனிற்கண்டு நான்
மறுக்கக் கூடாவண மெனையிங்குற
வேண்டினன்.

**சோலானியோ.**— எனது பிரபுவே வேண்டினன்
அதற்குங் காரண முளது அந் தோனியோ
வள்ளலுமக்கு வழங்கினர் வந்தனம்.

(பசானியோவுக்கு ஒரு கடிதம் கொடுக்கின்றுர்)

**பசானியோ.**—அவரதுகடிதநான் பிரித்திடு வதன்முன்
எனதுநற் பாங்க ரெவ்வித முள்ளார்
எனத்தயை யுடனே யியம்புதி ரெனக்கே.

**சோலானியோ.**—என்றன் றுரையே! உளந்தனி லன்றிப்
பிணியிலை அவர்க்குப் பிணியிலா தும்மிலை.
அவரது கடித முணர்த்து மவர்நிலை.

(பசானியோ கடிதத்தை படிக்கின்றுர்.)

**கிராஷியானே.**—நெரிசா! அந்த அங்யையை ஓம்புதி.
அவட்குநல் வரவறை. கைகொடும் சோலானியோ
வேனிஸ் நகரத்தின் விசேட மென்கொலோ?
இராசவர்த் தகராம் நல் லந்தோனியோ
எப்படி யிருக்கிறுர்? எமதுசித் தியினுல்
இன்ப மெய்துவா ரெனயா னெண்ணுவல்

நாங்கள் ஜேசன்கள் நாங்கள் பொன்மயிர்
பெற்றனம்.

சோலானியோ.—அவரி ழந்ததைநீர் பெறுதிரால்
என்பதே யென்ற னிச்சைய தாகும்.

போர்.—பசானியோ கன்னத்தொளிதனைப் பறிக்கும்
தீயசெய் தியேதோ தீட்டப் பட்டுள
தக்கடி தத்தில். ஆருயிர்த் தோழன்
எவனோமாண்டனன். இலையெனி னுலகிற்
கடைப்பிடி யுடையவோர் காளையின்மனவலி
இவ்வண மாற்றுதற் கேதுவொன் றும்மிலை.
ஆ ! இனும் துக்கம் அதிகமா கின்றதே !
உமதனு மதியுட னுரைப்பேன் பசானியோ !
நாத ! உம் பாதிநா னுதவிற் கடிதம்
கொணர்வதிற்பாதியென் கூறு, மற்றதுவெது
வென்னினு மியானடைந் திடுதல் வேண்டுமே.

பசா—இனிய போர்ஷியா ! எக்கா லத்தினும்
கடித மதனைக் கறைப்படுத் தியமிகு
தீயசெய் திகளிற் சிலவுளவீங்கே.
பொறையுடைப் பாவாய்! பொருந்துமென்காதலை
உனக்கு நான்முன முரைத்திடுங் காலை
என்றன்செல்வ மெலாமென் னரம்பில்
ஓடுவதே. அஃதுயர்குடிப் பிறப்பாம்
என்று தெள்ளிதி னிசைத்துளே னன்றோ?
அக்கால் யானறைந் திட்ட துண்மையே.
ஆயினு மன்புள வணங்கே! ஒன்றும்
இலாத வறுகநா னென்னை மதித்தலில்

எத்துணை யிடம்பனென்பதை நீயறி.
எனக்குப் பொருளொதுஉ மில்லையென்றியான்
உனக்குரைத்திட்ட காலையி லுன்னிடம்
ஏது மிலானினு மிழிந்தவன் யானென்
றியம்பியிருக்க வேண்டுமால். ஏனெனில்
என்ற னன்புள நண்பனுக் கென்னைக்
கட்டுப் படும்படி செய்துளேன். காசு
நான் பெறுவதற்கா வென்ற னண்பனை
அவனது தீராப் பகையா ளிக்குக்
கட்டுப் படுத்தினேன். மாதே! கடிதமொன்
றுளதிதோ ? கடிதமென் நண்பனினுடம்பாய்
அதிலொவ் வோர்சொலுஞ் சீவாதாரமாம்
குருதி கொப்புளிக்குங் கொடுங்காய மாகும்.
ஆயி னுண்மையோ ? சோலானியோ அவர்தாம்
உவரியிற் றுணிவா யுய்த்திடு கலன்கள்
எல்லாந் தவறினவோ ? ஏனொன்றும்
சித்தியெய்திலதோ ? திரிப்போலிஸ் மேக்ஸிகோ
இங்கிலாந்து இந்தியா லிஸ்பன் பார்பரி
வணிகரை நாசஞ் செய்யும் வரைகளின்
அச்சுறுதாக்குத லடையா மரக்கலம்
ஒன்று மிலை கொலோ ?

**சோலானியோ.—** ஒன்றுமேயிலையால்
என்றன்றுரையே ! இதுவலால் யூதன்
கடனை யிறுக்கக் கூடிய பணங் கையில்
இருப்பினு மேற்றிடா னவனெனத்தோற்றுமால்.
ஒரு மனிதனுக்கு நாசமு ளுற்றிட

அத்துணைக் கூர்ம்பேராசை யமைதரும்
நரனுருத் தாங்கும் பிராணிகா ணிதுவரை
அறிந்ததில். காலையு மாலையு மவனிந்
நகரதி பனைநனி நசையுடன் வினவுவன்.
அவற்கு நியாய மளித்திடத் தவறின்
துரைத்தனச் சுவாதீனத்தின் மேற்பிழை
சுமத்துவன். இருபது வாணிகர் சாலவும்
பெரிய பட்டண வாசிகள் பிரபுவும்
இவரெலா மவர்க்கு வேண்டிய திசைத்தனர்.
அவன்றன் றுவணம் நியாயம் நட்டமாம்
வன்மமார் வழக்கினின் றோட்டுவா ரெவருமில்.

**ஜெஸிக்கா.**—அவனுடன் யானிருந் திடுமக் காலை
தனக்கவ னீந்திடத் தகுவதி னிருபது
பங்குப் பணத்திலும் அந்தோனியோ தசை
அடைவதா யவன்றன் றேசத் தவராம்
சஸ், தீயூபல் இவரிடஞ் சத்தியம்செய
நானேகேட்டுளன். நாம்பரி தாபப்
படும்அந் தோனியோ இராச்சிய பலமும்
சட்டத் தோடதி காரமுந் தடாவிடில்
அல்லலடைகுவ ராமென் றுரையே

**போர்ஷியா.**—இவ்வணமிடருட் பட்டுளோரும் முயிர்த்
தோழரா ?

**பசானியோ.**— எனக்குமிகுமுயிர்த்தோழரே.
ஒப்பிலாதோங்குறாஉ மிரக்க முடையோர்.
சாலவுங் கனமுளார், தகுமுபசாரம்
உஞற்றலிற் சிறிது மோய்விலா வுத்தமர்,

இத்தலி தேயத் துயிர்ப்புடை யெவரினும்
இவரே மற்றிங்கி யாவருமேத்தும்
பூர்வ ரோமா புரியின் கவுரவம்
சால விளக்குந் தகையின ராவார்.

போர்ஷியா.—அவர்யூ தனுக்கங் களிக்கவேண்டிய
கடனெவ்வளவு? கழறுதிர் காதல!

பசானியோ.—எனக்கா மூவா யிரம்டக் கற்றுகள்

போர்ஷியா.—என்ன? இவ்வளவோ? ஆறுயிரம்
ஈந்துட னுவணம் பரிகரித்திடுவீர்.
இத்தகை யிட்டன தொற்றை யுரோமமும்
பசானியோ தன்றப்பா லிழப்புறுமுன்
ஆறுயிரத்தை யிரட்டிப்பீர். அதன்பின்
அதனைமும்மடங் காயிட வளிப்பீர்.
ஆலயத்தென்னுடன் முதலடைந் தெனைமனை
எனைவழைத் ததன்பின்னே குதிர்வெனிஸ்நகர்.
உந்தோழன்மாட் டுழல்வுறுமுளத்துடன்
போர்ஷியா வின்பாற் போக்குதிர் சயனம்.
இச்சிறு கடனை யிறுத்திட விருபான்
பங்குப் பணங்கொடு படர்ந்து கடன்றனைச்
செலுத்திநம் முண்மைச் சினேகிதன் றனையும்
அழைத்திவ ணணுகுதிர். நேரிசாவாகும்
என்றன் றோழியும் யானு மிடையிலே
கன்னியுங் கைமையு மெனவாழ்ந் திருப்பேம்,
போதிர். போதிர் எனெனில் வதுவைத்
தினமே நீர்தாஞ் செல்லுதி ராதலால்
உமதன்பருக்குநல்வரவையுரைப்பீர்,

களிப்புறு வதனங் காட்டுதிர். மிக்க
அருமையா யுமைநா னடைந்தே னதனாற்
கழிபேரன்புடன் காதலித் தேனுமை
ஆனால் உம்முடை யன்பர் கடிதம்
எற்குத் தெரிய வாசித் திடுவீரால்

(வாசிக்கின்றான்.)

இனிய பசானியோ! என்மரக்கலங்கள் எல்லாம்தப்பிப்போயின. எனக்குக் கடன் கொடுத்தவர்கள் குரூரர்களாகின்றார்கள். என்ஆஸ்தி மிகக் குறைந்தது. யூதனுக்கு நான் எழுதிக் கொடுத்த பத்திரம் காலம்கழிந்து அபராதத்திற்குள்ளாயது. அதை நானிறுப்பதில் சீவித்திருத்தல்கூடாது. ஆதலால் என் மரணகாலத்தில்உம்மை நான்காண்பதற்கு மாத்திரம் கூடுமாயின் உமக்கும் எனக்குமுள்ள கடன் எல்லாம் தீர்ந்ததாகும். ஆனாலும் உமது பிரியப்படிசெய்யும். உமதன்பு உம்மை இங்கு வரத் தூண்டா விட்டால் என் கடிதம் அப்படிச் செய்யாமல் இருப்பதாக.

**போர்ஷியா.**—ஆ! காதலஇங் குளபணி யனைத்தும்
ஒல்லையி லுஞற்றி யுடனேயேகுதிர்.

**பசானியோ.**—ஏகுவா னுன்றன் னினிய விடையெனக்
குளதே யாதலி னொல்லையிற்செல்வேன்.
ஆயிற் றிரும்பினா னடைந்திடுங் காறும்
யான்சய னித்தலா லியையும் தோடம்
எந்தப் படுக்கையும் எய்தாதாகும்.

நாமிரு வருஞ்சந் தித்திடு நாள்வரை
அயர்வுயிர்த் திடலெனக் கில்லா தாகுக.

(எல்லாரும் போதல்.)

—

## மூன்றுங் களம்.

இடம்: வெனிஸ் நகரம் ஒரு வீதி.

[ஷைலாக், சாலரினே, அந்தோனியோ, சிறைகாப்பாளன் வருதல்.]

ஷைலாக்.—சிறைகாப்பாளனே ! செவ்விதிற் காவாய்,
இரக்கமென்றென் னிடத் தியம்புத லொழிதி.
வட்டியி லாக்கடன் றருமதியிலி யிவன்.
சிறைகாப்பாளனே ! செவ்விதிற் காவாய்.

அந்தோனியோ.—நானினும் நவிறல்கேள் நல்ஷை லாக்கே !

ஷைலாக்.—என்பத் திரப்படி பெறுவன்யான், என்றன்
பத்திரத் திற்கெதிர் பகர்தல் ஒழிதி.
என் பத்திரப்படி பெறுவன்யான் எனநான்
சத்தியஞ் செய்துளேன். சற்றுங் காரணம்
இன்றிநீயெனை நாயென விளித்தனை.
குக்கல் யானுதலி லென்றன் கூரிய
பற்களைப் பற்றிமற் றெச்சரிக்கைகொள்.
இந்நக ரிறைவனு மெனக்கு நியாயம்
அளிப்ப னவசியம். துன்மார்க் கம்நிறை
சிறைகாப் பாளனே ! சிறைவிட் டவன்றன்
வேண்டிய விதநீ வெளியி லவனுடன்
வந்திட மடையனு யிருப்பது வியப்பே !

அந்தோனியோ.—நானவின் றிடுவதைக் கேட்கத் தயைசெயாய்.

ஷைலாக்.—பத்திரப்படியே பெறுவன். நீ பகர்வது
செவியுறேன். பெறுவல்பத் திரப்படி, பேச்சினித்
தவிர். கிறிஸ் தவமத் தியஸ்தர்க் கிணங்கிச்
சிரமசைத்திரங்கிப் பெருமூச் செறிதரும்
குழைமனக் கூரிய மதியிலா மூடனாய்
ஆகேன். என்றன் பின்னருமடையேல்.
எவரு மென்வயிற் பேசவுமிடங்கொடேன்.
எனதாவணப்படி யடைகுவ னியானே
சாலரினே.—மனிதர்க ளோடெக் காலமும் வதிதரும்
வச்சிர மனமுடைக் கள்ளநா யிவனே.
அந்தோனியோ.—அவன்போகட்டும்அவனைப்பயனிலாப்
பிரார்த்தனையுடனினிப் பின்றொட ரேன்யான்.
அவனென தாவியை யவாவினன். அவன்றன்
கருத்து நன்றாகக் கண்டறிந் தேன்யான்.
என்பாற் குறைசொல விவன்கடன் காரரிற்
பலரைநான் பன்முறை நட்ட மடைந்திடா
வாறுகாத் துள்ளேன். ஆதலி னிவனெனைப்
பகைத்தனன்.
சாலரினே.— இந்நகர்ப் பதிபித் தண்டம்
புரியவெக்காலும் பொருந்தான்றிண்ணமே.
அந்தோனியோ.—நியாய முறைதனை நிருபணிலையெனல்
ஆகாதாகுமால். அதனைமறுத்திடில்
வேனிஸில் வியாபா ரஞ்செய் யன்னியர்
இராச நீதிக் கியம்புவ ரேதம்.
ஏனெனிலிந்நகர் வாணிபமிலாபம்
இத்தேயத்துள சாதிய ரெல்லாம்

சேர்ந்துசெய் வனவாம். ஆதலிற் போதிர்.
இவ்விச னங்களும் நட்டங் களுமென்
கொடுங்கடன் கொடுத்தோ னவற்குநாளை
ஓரிராத் தற்றசை யாயினுமுதவற்
கிலாவண மென்னை யிளைத்தலியற்றின.
சிறைகாப்பாளனே! நல்லது செல்லுதி.
அவன்கடன் றனைநா னடைத்தலைப் பசானியோ
காண்பானெய்திடக் கடவுளைவேண்டினேன்.
அப்பொழு தெனக்கோ ரவலமு மிலையால்.

(எல்லாரும் போதல்.)

---

## நான்காங்களம்.

இடம். பெல்மேண்டு, போர்ஷியா வீட்டில் ஓர் அறை.
[போர்ஷியாநேரிசா, லாரேன்சோ,
ஜெசிக்கா, பால்த்தசார்
இவர்கள் வருதல்.]

லாரேன்சோ.-அம்மணி ! உம்முன் யானறைந் திடினும்
தெய்வத நட்பின் றிறங்கோண் டாடும்
கவுரவ முண்மைசேர் கருத்துநீருடையீர்.
அஃதிவ் வணமு மதன்பிற் பிரிவுறும்
பொறையேதிட்டமாய்ப் புகன்றிடுமன்றே.
இக்கன மெவற்குநீ ரீந்தனிரெனலும்
எத்துணை யுண்மைத் துரைமகற் கிந்த
உதவி யுஞற்றினி ரெனலுமுங் கணவனும்
என்றன் றுரைமகற் கெத்துணைப் பிரிய
சினேக னெனலுநீர் தெரிதரின் வழக்கமாம்
உதாரத் துவமுமை உந்து தலினுல்
இயற்றும்பணிகளி லிந்தப்பணியை
அதிகப் பெருமையாய் மதிப்பிரென் றறிவன்.

போர்ஷியா.—நன்மைசெய் ததற்கா னானிது காறும்
பச்சாத் தாபப் பட்டதே யில்லை.
இக்கா லத்துநான் படுவ தில்லையால்.
ஒருவரோடொருவர் பேசுபுகாலங்
கழித்தே யன்பாஞ் சமநுகம்பூண்டும்
ஆவியை யுடைய ஆர்வலர் சாயலும்
ஒழுக்கமுங் குணமு மொத்துறுவ தவசியம்.
என்றன்மகிழ்நனுக் கின்னுயிர்ப் பாங்கன்

ஆக அந்தோனியோ விருத்தலா லென்றன்
புருடனை யனையவன் போல்வது திண்ணமே.
என் னுயிர்ச் சமானனை யிருணிலவேதனை
நிகர்த்த பீடையி னின்றுநீத்திடச்
செலவிடு மெத்துணைச் செலவுமன் சிறிதே.
இஃதெனை யானனி புகழ்தலே இயையும்.
அப்பேச்சொழிக. மற் றறைவது கேட்டியால்.
என்னாயக னிவண் மீள்வுறு மளவும்
வீட்டினிர் வாகம் விசாரணை யிவ்வெலாம்
உன்கையி லொப்புவித் தேன்லா ரேன்சோ !
எங்கள்கணவர்க ளிவண்வருங் காறும்
இந்நேரி சாவுட னான்றனித் தீசனைப்
போற்றுபு நிட்டை புரியுமோர் விரதம்
இராசியமாகப் பூண்டுளேன். இரண்டு
'மைலுக்' கப்பாற்றுறவோர் மடமொன்
றுளதவணாங்க ளுறைவோம், உமக்குநான்
இடுமிப் பணிதனை யேற்றிட மறுக்கன்மின்
எனநயந் தனனால். இப்பொறுப் பென்றன்
அன்பி னொடுசில வவசிய மும்மேற்
சுமத்திடச் செயுமால்.

**லாரேன்சோ:—** துரைமகளே ! என்
மனப்பூ ருவமா வுமது மாசிலாக்
கட்டளை யாவுங் கடந்திடேன் யானே.

**போர்ஷியா.**—என்பரி சனரென் னெண்ண முன்னரே
அறிவா ராதலி னாலே பசானியோப்
பிரபுதனக் கும்எனக் கும்பிரதியா

உமையும் ஜெசிக்கா வினையு மேற்றிடுவர்.
ஆதலிற் போதிர் யாம் போய்வருங் காறும்.
லாரேன்சோ.—நல்லெண நன்று ளுமக்குளவாகுக.
ஜெஸிக்கா.—இஷ்டபூர்த்தி யெய்துக வுமக்கே.
போர்ஷியா.—உமதன் பினுக்கா வுமக்கு வந்தனம்.
உமக்கதைத் திரும்ப வுரைத்திட வுவந்தேன்.
வந்தனம் ஜெசிக்கா !

(ஜெசிக்காவும் லாரேன்சோவும் போதல்.)

வருதி பால்த்தசார்.

உண்மையும் யோக்கியமு முடையை யாவுனை
எக்கா லத்தினுங் காணுமா றின்னும்
காண்பே னாக. இக்கடி தங்கொண்
டாடவர் செல்லக் கூடுமவ் வேகமா
வகுதி படுஆ தனக்கு. ஆங் கென்றன்
பந்து வாகும் பண்டிதன் பலாரியோ
கையிலிக் கடித மீந்தவ னுன்னிடம்
வழங்கிடு முடையுங் கடிதமும் வாங்கியே
வெனிசுடன் வியாபா ரஞ்செய் பொதுத்துறை
மனோவே கத்துடன் வருதியென் பிரார்த்தனை.
வார்த்தையாற் காலம் போக்கா தேகுதி.
நானு முனக்குமுன் னணுகுவ னாங்கே.
பால்த்தசார்.—கூடிய வேகங் கொண்டே கிடுவேன்.
(போதல்)
போர்ஷியா.—நேரிசா ! வருதி நீயினு மறியாக்
கரும மென்னுடைக் கைதனி லுளதால்.
நமையவர் நினைத்திடு முன்னரே நாம்நங்

கணவரைக் காண்பேம்.

நெரிசா.— அவர்நமைக் காண்பரோ?

போர்ஷியா.—அவர்கா ணுவரால். ஆயினு நெரிசா!
நமக்கிலா தவைகள் நமக்குள தாவவர்
உனச்செய் யுடையுடன் காணுவர். ஒட்டம்.
இருவே முமிளைய வாடவ ராடை
தரித்திடி னிருவரில் யான்மிகத் தைரியம்
உடையவ னகு வேன், மிகு மூக்கம்
சேர்தரு சிறப்பொடு கட்க மேந்துவேன்.
பாலப் பருவம் காளைப் பருவமாய்
மாறிடு மத்தியிற் சில்லொலி வசனமாய்ப்
பேசுவேன். பிலுக்கா யிரண்டடி வைப்பதை
ஆண்மைசே ரோரடி யாயிட வைப்பேன்.
இடம்ப வனப்புறு மிளையவ னேபோற்
காதற் போரினைக் குறித்துக் கழறுவேன்.
கனமிக வுடைய மாதரென் காதலை
வேட்டுநான் மறுப்பப் பிணியுறீஇ வீந்த
விசித்திரப் பொய்பல விளம்பிடு வேனல்.
அதைநான் தவிர்த்திட லமையா தன்றே.
அதன்பின் னலநு தாபமங் கடைவேன்.
எவ்விதத் தானு மவரைச் செகுத்திடா
திருந்தே னிலையே எனத்துய ருறுவேன்.
பன்னிரு மாத முன்னரே பள்ளி
அகன்றன னெனவே யாவர் சத்தியஞ்
செய்திட வித்தகைச் சிறுபொய் யிருபது
செப்புவன். என்றன் சிந்தையி னுள்ளே

இடம்பரி னிவ்வகை யாயிர மறிவில்
அகட விகட முள.அவை களைநான்
ஆடிக் காட்டுவேன். ஆதலின் வருதி.
நமக்கா நந்தன வனவா சலிலே
காத்துள வண்டியி லேகுங் காலையில்
என்றன் சூழ்ச்சி யெலாமுனக் கியம்புவன்.
ஆதலிற் றுரித மாக விரைந்திடாய்.
இஞ்ஞான் றிருகா வதஞ்செல வேண்டுமே.

(எல்லாரும் போதல்)

---

## ஐந்தாம் களம்.

அதேஇடம். ஒருதோட்டம்

[லான்சிலட்டும் ஜேசிக்காவும் வருதல்.]

லான்சிலட்.—ஆம் உண்மையே. ஏனென்றால் பாரும். தகப்பனுடைய பாவங்கள் பிள்ளைகளைப் பீடிக்கின்றன. ஆதலா லுமக்காகப் பயப்படுகிறேனென்று உமக்குச் சொல்லுகிறேன். உம்மிடத்தில் நான் எப்பொழுதுங் கபடமில்லாமற் பேசுகிறவன். ஆதலால் அந்தச் சங்கதியைப்பற்றி யென்னுடைய அபிப்பிராயத்தை யிப்பொழுது சொல்லுகிறேன். ஆகையாற் சந்தோஷமா யிரும். ஏனெனில் நிச்சயமாக நீர் நரகத்திற் குள்ளாவீர். உமக்கேதாவது நன்மை செய்யக் கூடிய ஒரே யொரு நம்பிக்கைதா னிருக்கிறது. அதுவு மதிகப் பாவமான நம்பிக்கையே.

ஜேசிக்கா.—அதுவென்ன நம்பிக்கை யென்று தயைசெய்து சொல்லு.

லான்சிலட்.—சத்தியமாய் உமது தகப்பனும்மைப் பெறும லிருந்திருக்கவேண்டு மென்றும், நீர் யூதனுடைய பெண்ணாயிராம லிருந்திருக்கவேண்டு மென்றும் நீர் சிறிது நம்பலாம்.

ஜேசிக்கா.—மெய்யாக, அது பாவமானநம்பிக்கையே! ஆகவே என்தாயின் பாவங்களின் பயனை நானனுபவிக்க வேண்டும்.

**லான்சிலட்.**—ஆனால், உண்மையாக, உமது தகப்பனாலும், உமது தாயாலும், நீர் நாசமடைவீரென்று நம்புகிறேன். இவ்விதமாக நான் உம்முடைய தகப்பனாகிய சில்லாவை விட்டகலும் பொழுது, உமது தாயாகிய கேரிப்டிசில் விழுகிறேன். நல்லது, நீரிருவழியிலுந் தொலைந்து போனீர்.

**ஜெசிக்கா.**—என் புருஷனா லிரட்சிக்கப் படுவேன். அவரென்னைக் கிறிஸ்தவ மாதாக்கி யிருக்கிறார்.

**லான்சிலட்.**—மெய்யாக, அவர்பேரி லதிகக் குற்றமேயுண்டு. முன்னமேயே போதுமான கிறிஸ்தவர்களிருக்கிறோம். ஒருவனுக் கொருவனால் இடையூ றுண்டாகாத விதமாயிருக்கக் கூடிய அத்தனைபேரிருக்கிறோம். இவ்விதமாகக் கிறிஸ்தவர்க ளாகிறது பன்றியின் விலையை யதிகமாக்கும். நாம் எல்லாரும் பன்றிக்கறி தின்பவர்களானால், கரிமேல் வைக்கப் பன்றிக்கறி வற்றலை பணத்திற்குக் கூடிய சீக்கிரத்திற் கிடையாமற் போய்விடும்.

[லாரேன்சோ வருதல்.]

**ஜெசிக்கா.**—லான்சி லட்டே ! நீ சொல்லுவதை என்புருஷனிடத்திற் சொல்லுவேன். இதோ அவர் வருகிறார்.

**லாரேன்சோ.**—லான்சிலட்டே ! நீ இப்படி என்பெண்சாதியை மூலையில் அழைத்துக்கொண்டு

போகிறதா யிருந்தால் சீக்கிரத்தி லுன்னைச் சந்தேகிப்பவ னாவேன்.

**ஜெசிக்கா.**—இல்லை. எங்களைப் பற்றிப் பயப்பட வேண்டுவதில்லை; லாரேன்சோவே! லான்சிலட்டும்நா னுஞ் சண்டைபோட்டுக்கொண்டிருக்கிறோம். நான்ஒரு யூதன் மகளாதலால், எனக்குக் கடவுள் கருணை கைவராதென்று கண்டிப்பாகச் சொன்னான். யூதரைக் கிறிஸ்தவராக்கிப் பன்றிக்கறியின் விலையை நீ ரதிகப்படுத்துவதனால், குடியரசுக்குண்டாகும் நல்லங்கத்தினர் நீரல்லரென்று அவனென்னிடம் நிகழ்த்தாநின்றனன்

**லாரேன்சோ.**—விரைவில் மௌனமா யிருத்தலே அறிவின் திறத்தையறிவிக்கும் நல்லுபாயம். எக்காலத்திலு மிவ்விதமான பேச்சைக்கிளிப் பிள்ளைகள் தவிர ஏனையர் சொல்ல விசையாரென்று நான் நினைக்கின்றேன். ஐயா, உள்ளேபோய் அவர்களை யுணவுக்குஆயத்தமாயிருக்கத் தெரியப்படுத்து.

**லான்சிலட்.**—ஐயா, அது ஆய்விட்டது. அவர்களெல்லாரும் மிக்க பசியுட னிருக்கிறார்கள்.

**லாரேன்சோ.**—நல்ல பிரபுவே! வார்த்தையி லிருந்து வேடிக்கை விளைக்கிறவராயிருக்கிறீர். ஆனால் அவர்களை யுணவு சித்தமாக்கக் கட்டளையிடும்.

லான்சிலட்.—அதுவுமாய் விட்டது. ஐயா! 'மூடு' என்று சொல்லுகிற ஒரே வார்த்தை தான் பாக்கி.

லாரேன்சோ.—ஆனல் ஐயா! 'மூடு' என்று உத்தரவு செய்வாயா?

லான்சிலட்.—ஐயா! அதுவுஞ் செய்யேன், என் வேலை எனக்குத் தெரியும்.

லாரேன்சோ.—சந்தர்ப்பங்கிடைக்கும் பொழுதெல்லாம் விநோதம் பேசுகிறது. உன்புத்தி சாதுரிய வைபவமெல்லாம் ஒரே நிமிஷத்திலாகாட்டுகிறது? விடுவாயாக. கபடமில்லாமற் பேசுகிற மனிதன் பேச்சிலுள்ள தெளிவான அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளென்று உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன். உன்னுடன் வேலைசெய்கிறவர்களிடத்திற்குப்போ. அவர்களை 'மேசை' யை மூடச்சொல்லு. கறியைப் பரிமாறு. நாங்களுண்ண வருவோம்.

லான்சிலட்.—ஐயா! மேசையோ பரிமாறப்படும். கறியோ ஐயா! மூடப்படும். நீங்களுண்ணவருகிறதற்கோ ஐயா! உங்களுடைய மனப் போக்கின்படிக்கும் மனச்சாபல்யப்படிக்கு மாகட்டும்.

(போதல்.)

லாரேன்.—ஆ! ஆ! அருமையாம் விவேகமே! எத்தனை
பொருத்தமா யவன்றன் வார்த்தைகள்
[பொலியுமால்.

இத்திரு வந்தன் னினைப்பி லெத்தனை
நன்மொழி நன்கமைத் துள்ளான். அவனிலும்
உயர்தரு பதவியி லிருந்தொன் றியபல
வசன முடையவ ராயினும் வழங்க
உற்சா கம்முள மொழியொன் றிலாமையால்
அருத்தங் கெடுத்திடு மளவிலா மூடரைத்
தெரிவே னனே. ஜேசிக்கா! என்ன ?
சங்கதி சரிதான் சாலவு மினியளே !
பசானியோப் பிரபுவின் பாரியை யெவ்வணம்
மதித்தனை. உன்னெண மற்றெனக் கியம்பாய்.

ஜேசிக்கா.—உரைக்கவொண் ணுதே. பசானியோப் பிரபு
யோக்கிய மான நடக்கை யுடையராய்
வாழ்ந்திடத் தக்கதே. தன்மனை வியினல்
இத்துணைப் பாக்கிய மேய்ந்தவன் புவியிற்
சுவர்க்கசுக முழுவதும் வசுந் தரையிற்
பெறுவன். அவ்வணம் பெறுந்தகை யிலனேல்
அவனெரு காலுஞ் சுவர்க்க மடைவுறல்
கூடா தாகக் குறித்தல் வேண்டுமால்.
வான நாட்டினில் வான வரிருவர்
இகலிப் பணயம் பெண்க ளெனக்கொளின்
ஒருவன் போர்ஷியா வையொட் டமாக்கில்
அவட்கிணை யாகவெவ் வணங்கை மற்றவன்
வைக்கினுங் குறைக்கு வண்பொருள் பிறிதும்
வைத்திடி னல்லாற் குறைநிரம் பாதால்.
ஏனெனில் வறும்பொலா விவ்வுல கத்தில்
அவட்கிணை யாமற் றொருத்தியு மிலையால்.

லாரேன்சோ.—மனையா ளாகமற் றிவளிருந் திடல்போல்
நின்னு யகனு நீயெனைப் பெற்றனை.
ஜெசிக்கா.—இல்லை, என் னெண்ண மதனையுங்கேட்பீர்.
லாரேன்சோ.—உடனேகேட்பேன்,உணப்போவோமுன்.
ஜெசிக்கா.—இலை, நான் பசியா யிருக்குங் காலையே
புகழ்ந்திடு வேனுமை.
லாரேன்சோ.— வேண்டாம் போசனம்
உண்ணுங் காலை யுரையாடு வோம்நாம்.
அப்பொழு தெவ்விதம் நீயறைந் திடினும்
அதுமற் றவையுடன் சீரண மாகும்.
ஜெசிக்கா.—நல்லது. உமைநா னன்றுய்ப் புகழுவேன்.
(எல்லோரும் போதல்)

---

# நான்காம் அங்கம்.

---

## முதற்களம்.

இடம் வெனிஸ் நகரம்.

ஒரு நியாயஸ்தலம்.

[நகரத்தலைவனும் பெரியபட்டின வாசிகளும்
அந்தோனியோவும் பசானியோவும்
கிராஷியானோவும் சோலானியோவும்
மற்றவர்களும் வருதல்.]

நகரத்தலைவன்:— என்ன ? அந்தோனியோ இங்கே இருக்கின்றாரா?

அந்தோனியோ:—இதோ இருக்கின்றேன். தங்கள் சித்தம்.

நகரத்தலைவன்:—யானுமைக் குறித்து விசனமெய் [துகிறேன்.
இரக்கமென் பதுவே இம்மியு மில்லாத்
தயையுளத் தரும்புந் தகையிலாக்கொடிய
துச்சன் கன்மனத் தினனுந் துன்னலற்
குத்தரஞ் சொல்லுவா னுற்றனிர் நீரே.

அந்தோனியோ —அவன்றன் கொடுநெறிச் செல [வினை யடக்கித்
தணித்திடத் தாங்கள் சாலவுஞ் சிரமப்
பட்டதாக் கேள்விப் பட்டுளே னரசே!
பிடித்த பிடிவிடா திருத்தலி னுலவன்

பொறுமை யாற்செயும் பொல்லாங் கினி
[னின்
றெனைச்சட்ட வுதவியாற் றப்புவித் திடுதல்
கூடா மையினவன் கோபத் தினுக்கென்
பொறுமையை யீடா நிறுவி யவன்றன்
கொடுங்குரூ ரத்தையென் குணவமை தியினாற்
சகித்திடச் சித்தனாய்த் தமியே னுள்ளேன்.

நகரத்தலைவன்:—ஏகுக ஒருவனிங்கி யூதனை யழைக்குக.

ச்லா:—வாயிலிற் காத்துளன் வருகிறான் காவல!

[ஷைலாக் வருதல்.]

நகரத்தலைவன்:—இடங்கொடு மவனென் னெதிருற
[நிற்கவே.
ஷைலாக்! தீர்ப்புத் தனைப்பெறுந் துணையும்
வன்மனஞ் செலுத்தும் வழிநடக் கின்றாய்,
என்றுலகெண் ணும். யாமெண்ணலு மதுவே.
இன்னமும் யாமனத் தெண்ணுவ வெவை
[யெனில்,
இப்பொழு ததிசய மெய்திட மேவுநின்
கொடுமையிற் கூரதிசயம் விளைக் குந்தயை
பச்சாத் தாபங் காட்டுவாய் பின்னர்.
அன்றியு மவசிய மாகவே யிந்த
ஏழை வாணிகன் றசையோ ரிராத்தல்
நீபெற நிற்கு மிவ்விடத் திலேயே
தயையுப சார மாஞ்செயல் களிலெக்
காலமும் பயின்றறி யாக்கடு மனத்துத்
தார்த்தர் துருக்கிய ரிரும்புநெஞ் சத்தினர்

சிகிமுகிக் கன்னெஞ் சினர்க்கு மிரக்கம்
உறச்செயும் பான்மை யுடைய தாகியும்
இராசவா ணிகரையுந் தலையெடா தழுத்துந்
திறத்தின தாகியுஞ் சின்னா ளாகச்
சாலத் திரண்டு தாங்கொணாத் தகையதாய்
நலிவித் திடுமவர் நட்ட மனைத்தையும்
கருணைசேர் விழியுடன் கடைக்கணித் தவர் [தம்
அபரா தந்தனை யகற்றலே யன்றி
மாந்தர்க் குரிய சாந்தம்நண் பிவற்றால்
உள்ளங் கசிந்துநீ யுதவி முதலிற்
பாதியை மன்னிப் பாயென் பவையே.
யூத! நின் னருண்மொழிக் கியாமெலாங் [காத்துளேம்.

**ஷைலாக்:**—என்றனெண் ணமுமக் குரைத்து ளே [ன்யான்.
என்பத் திரப்படி யெனக்குரித் தாங்கடன்
அடையவெங் தூயதா மோய்வுநா ளின்மேல்
இட்டுளே னாணை. அஃ திலையென மறுப்பின்
உமது பட்டய மூர்ச்சுதந் தரங்கள்
இவற்றிற்கு நாச மெய்துக. மூவா
யிரம்'டக் கற்றி'னை யேற்றலினழுக்குறும்
பிணத்தசை நிறைபெறப் பெட்புறு மாறெ [வன்?
எனநீர் வினவுவீர். அதற்கெதிர் விடைநான்
அளியேன். ஆயினு மஃதென் னிட்டமென்

றறைவேன். அதுவிடை யளித்த தன்றோ?
என்னகத் தோரெலி யிடரியற் றிடுமேல்
அதைநஞ் சிடஅயு தம்'டக் கற்று'கள்
ஈந்திட விச்சை யுடையே னாகிலென்?
இதையே யெதிர்விடை யாக்கொளொண்
[ணாதோ?
அங்காந் திடும்பன் றியையரு வருப்பார்
சிலருளர். பூனையைக்கண் ணுறிற்றிகைப்பார்.
அதுவேயன்றி யுந்தோ லொத்தின்
வாயி னின்றெழூஉம் வள்ளொலி கேட்டிடிற்
றம்மை யடக்குந் தரமிலர் தாம்பலர்.
மனோவிகா ரத்தெச மானனும் வேட்கை
விருப்பு வெறுப்பைத் தன்வழி நடத்தும்.
இப்போழ் துமக்குநா னெதிர்விடை யீகு
[வன்.
வாயங் காந்திடும் வராகத்தை யிகழ்தலும்
வீடுவாழ் தீங்கிலாப் பூசையை வெறுத்தலும்
வீங்குமொத் தொலியினை விரும்பா திருத்த
[லும்
எய்துவ தற்கு நல் லேது வின்றியும்
தமைவெறுப் புறுத்துந் தகையபொருள்களைத்
தாம்வெறுத் தலினா லாம்விலக் கொண்ணா
நாணதை யன்னவர் பூணல்போல் பயனிலா
இத்தகு வழக்குத் தொடர்வதி லெனக்கும்
அந்தோனி யோமே னிலையா யமைந்துள
விரோதமு முறுதியாம் வெறுப்புமே யன்றி

வேறு காரணம் விளம்பிடற் கில்லே.
மேலினிக் கூறேன்விடைபெற் றீரா?

பசானியோ:—இரக்கமின் மனிதனே ! இஃதுன்குரூரப்
போக்கினைப் பொறுத்திடற் கேற்ற
[தோர் விடையல.

ஷைலாக்:—என்னுத் தரமுமக் கிட்டமாம் வண்
[ணம்
புகன்றிடக் கடமை பூண்டவ னல்லேன்.

பசானியோ:—வெறுத்த பொருளைவீட் டுவரோ
[யாவரும்?

ஷைலாக்:—வீட்ட வொண் ணுதனை வெறுப்பனே
[எவனும்?

பசானியோ:—வெறுப்பவை முதற்கணே விரோதிப்
[பவையல.

ஷைலாக்—ஏனுனை யிருதர மரவந்தீண்டிட
விரும்புவா யோ ?

அந்தோனியோ:— நீர் விவாதஞ் செய்வது
யூத னுடனென் றுன்னுதி ருளத்தே.
கடற்கரை யிற்போய் நின்றக் கடலின்
வெள்ளம் வழக்கமாய் விஞ்சிடு முயரந்
தணித்திட நீரும் பணித்திட லாகும்.
பறழ்தனைக் கவர்ந்து செம்மறி பதைத்தழச்
செய்ததென் னெனவோ நாயைக் கேட்க
[லாம்.
மலைவளர் மரங்கள் வளிபட் டசைந்துழித்
தந்நெடுந் தலைகளைத் தாமசைஇச் சத்தம்

இடுவதை நீர்தவிர்த் தொழித்திட லாகும்.
இவனது யூத இருதயந் தன்னை
(ஆ! ஆ! அதனிலும் கடினமெதுவோ)
இளகச் செய்திட முயலு வதிலும்
அதிகக் கடின மாயுள தெதுவோ
அதையிளக் கிடநீர் முயலினு முடியுமால்.
ஆத லினினிவே றளித்திடப் பேசலிர்.
மற்றைய வுபாய வழியெலா நீக்கிச்
சாலச் சுருக்கமுந் தகுதியாம் விரைவும்
ஆய தீர்ப்பையா னடைக. வேட்டதை
யூதன் யெறுக உமைப் பிரார்த்திக்கிறேன்

பசானியோ:—மூவா யிரம்'டக் கற்று'க் கிருமூ
வாயிர முளதிதோ.

ஷைலாக்:— ஆறுயிரம்'டக்
கற்றி' னெவ்வொரு 'டக்கற்று' மாறு
பாகமா யொவ்வொரு பாகமோர் 'டக்கற்
று'யினு மதைநா னடைந்திடேன். என்றன்
பத்திரப் படியே பெற்றிடு வேன் யான்.

நகரத்தலைவன்:—இரக்கஞ் சிறிதும் காட்டிடா நீயும்
அதனை யெவ்வண மடைந்திட நம்புதி?

ஷைலாக்:—தவறு செய்திலேற் கேதுதண் டனைப் [பயம்?
அடிமைக் ளநேகரை விலைக்குநீர் கொண்டு [ளீர்.
அவர்களை விலைக்குநீர் வாங்கிய வாற்றாற்
கழுதையும் நாயுங் கோவேறு கழுதையும்

இவைபோ லிழிவா மடிமைத் தொழில் [செய
அவர்தமை யேவு கின்றனிர். அவரைச்
சிறைவிடுத் துமது செல்வங் கைக்கொளற்
குரியமக் கட்கு வதுவை புரிந்திடுக,
சுமைசுமந் தேனவர் வியர்க்கிருர், அவர்தம்
படுக்கை நம்முடைய படுக்கையின் மெது [வாய்
உணவுமும் முணவுபோ லுருசியா யிருக்க,
என்றிங் குமக்குநா னியம்பிட லாமோ?
அடிமைக ளெம்பொரு ளெனவிடை யறை [வீர்.
அதுவே யென்ற னெதிர்விடை யாயிடும்.
அதிகா ரத்துட னவ்னிடங் கேட்குமோர்
இராத்தற் றசையெனு லாற்றவு மரிதாய்
அடையப் பட்டதே, அஃதென தேயாம்.
எவ்வித மும்பெறு வேன்,இலை யென்னில்
சீச்சீ யும்முடைச் சட்டமும் பாழே.
வெனிஸ்நக ரத்துள, தீர்ப்பும் வியர்த்தமே.
'தீர்ப்பு' நான் பெறுவேன், எதிர்விடை செப்
அதை நானடைவனோ ? [புவீர்.

நகரத்தலைவன்.— இதைத்தீர்த்திடற்கு
நானழைத் துள்ள நல்ல பண்டிதன்
ஆம்பெல் லாரியோ விஞ்ஞான் றிவணடைந்
திடானெனி லெனததி காரத் தாலிவ்
வழக்கு விசாரணை நிறுத்திவைத் திடுவேன்.

சால:—என்னுடை யரசே யிவணிப் பொழுது
படுஆ நகருள பண்டித னிட மிருந்
தொருகடி தத்துட னோர்தூ தன்வெளி
தனினிற் கின்றனன்
நகரத்:— தருதியாற் கடிதம்,
அழையாய் தூதனை.
பசா:— அந்தோனியோவே!
சந்தோ டமாயிரும். என்னை? தைரியம்
இன்னுங் விடாதீர் ஐயா! வென்பொருட்
டும்முதி ரத்தி லொருதுளி யிழக்குமுன்
என்றசைச் சோரியெலும்புக ளெல்லாம்
அடைவான் யூதனே.
அந்:— மரண மடைந்திட
மந்தையிற் றக்க வன்பிணி சேர்தரும்
ஆடு நானே. அதுபல வீனமாங்
கனிமுத லிற்றரை மேல்விழல் கடுப்ப
யானு மிறுதி யெய்துவே னுக.
எற்குப் பின்னீ ருயிருட னிருந்தென்
மரண சாசனம் வரைதலின் மிக்க
உயர்ந்ததோர் தொழினீ ருஞற்றிட லாமோ?

[நியாயவாதியின் இலேககனுக்கு உரிய உடையுடன் நேரிசா வருதல்.]

நகரத்:—படுஆ பட்டணத் துளபேல் லாரியோ
இடத்தி லிருந்துநீ யெய்தினை யாங்கொல்?
நேரி:—என்றன தரசே அவ்விடத் திருந்து நான்
வந்துளேன், பேல்லாரியோ வந்தன மீந்தனர்.

(ஒருகடிதம் கொடுத்தல்.)

**பசா:**—இவ்வள வூக்கமா யேன்கத் தியைநீ
தீட்டுகின் றனையோ ?

**ஷைலா:**— தீர்த்திடக் கடனை
வகையொன் றின்றிமற் றுங்கே நிற்பவ
னிடத்தப ராத மறுத்தெடுத் திடற்கே.

**கிரா:**—கொடிய யூத ! உன் கத்திகூ ராக்கல்
உன்னடித் தோலிலன் றுன்னுடை யுயிரிலாம்.
கொடியவுன் பொறுமையின் கூர்மையிற் பாதி
எந்த வாயுதந் தனக்குமற் றிலையே.
கொலைப்பணி முடிப்போன் கோடரிக் கும்
மிலை,
எவ்வித வேண்டலு மிளக்கா தோவுனை ?

**ஷைலா:**—இளக்கா துன்மதிக் கெட்டிய தியாதும்.

**கிரா:**—ஆ! வெறுக் கத்தகு நாயே ! அழிகநீ.
உயிருட னுனைவைத் திருப்பது நியாயம்
பிழையா வாகுக. பிதகோராசுபோல்
விலங்கி னுத்துமா மானிட மேனியிற்
புகுமெனு மெண்ணம் போற்றி என்மதந்
தனினின் றியான்றடு மாறச் செய்தியால்.
உனதுநா யாத்துமா வோநா யுடம்பிற்
புகுந்தொரு நரவதை புரிந்திடத் தூக்குண்
டிடுங்காற் றாக்குமர மிகந்தக் கொடிய
வாத்துமாப் பறந்துன் னசுத்தத் தாய்வயின்
நீவதி தருநாள் நின்னுளே புக்கது.
ஏனெனி லுன்ற னெண்ண மெல்லாம்

ஓநாய்த் தன்மையு முதிரப் பிரியமும்
மிகுபசி யுடைமையு மிரைவேட் டலுமாம்.

ஷைலா:—என்பத் திரவிலச் சினைதனை யிகழ்ந்து
நீக்கிடுங் காறும் நின்னுரை யீரலை
ஆரவா ரத்துடன் பேசி யழித்தியால்.
புத்தியைப் புதுக்குதல் புரிதிநற் சிறுவ !
இலையெனிற் றீரா வழிவெய் திடுமால்.
நியாயம் பெறநா னிற்கின் றேனிவண்.

நகரத்:—நமது நியாயத் தலத்திற் கோர் நற்
படிப்புடை வாலிப பண்டித ரொருவரைப்
பெல்லா ரியோவனுப் பியவிக் கடிதம்
இன்புறக் கொணர்ந்தது. அவரெங் கேயு
ளார் ?

நெரி:—அவரைநீ ரேற்றுக் கொள்ளுவ தறிவான்
அவரிதோ வருகி லணைந்துளா ரீங்கே.

நகரத்:—முற்றுங் களித்தனம், மூவர்க ளல்லது
நால்வர்போ யவரை நன்மரி யாதையோ
டழைத்து வம்மினீர். அதுவரை நாமும்
பெல்லாரியோ கடிதம் பேசுதல் கேட்பாம்.

(இலேககன்வாசிக்கின்றான்.)

தங்கள் கடிதம் வந்து சேர்ந்த இப்பொழுது நான் வியாதியா யிருக்கின்றேனென்று தங்கள் கனத்திற்குத் தெரியவரும். ஆனால் தங்களுடைய ஆள் வந்தபொழுது ரோமாபுரியி லிருந்து ஒரு வாலிப பண்டிதர் என்னை அன்பு

டன் பார்க்க வந்து என்னுடன் இருந்தார். அவர் பெயர் பால்தசார். யூதனுக்கும் வியாபாரியாகிய அந்தோனியோவுக்கும் உண்டாகிய விவாதவழக்கைப்பற்றி யவருடன் சொன்னேன்; இருவரு மநேக புத்தகங்களைத்திருப்பிப்பார்த்தோம். அவரிடத்தில் என் அபிப்பிராயத்தைச் சொல்லி யிருக்கிறேன். தங்களுடைய வேண்டுகோளை எனக்குப் பிரதியாக நிறைவேற்ற நான் கேட்டுக்கொண்டதன்மேல், நான்போதுமானபடி புகழ்ந்துரைக்கக் கூடாத அவ்வளவு பெருமிதமான கல்வியை யுடைய அவரால், அந்த என்னுடைய அபிப்பிராயம் விர்த்தி செய்யப்பட்டு அவருடன் அனுப்பப்பட் டிருக்கின்றது. அவருடைய வயதின் குறைவானது அவர் அடைய வேண்டிய கவுரவமான மதிப்பிற்கு இடையூறு யிராதபடி தங்களைப் பிரார்த்திக்கின்றேன். ஏனெனில், இவ்வளவு முதிர்ந்தமூளையையுடைய இளைய வுருவத்தைப் பார்த்ததே இல்லை. அவரைத் தாங்கள் கிருபையுடன் ஏற்றுக்கொள்ள அனுப்புகிறேன்; விசாரணைக் காலத்தில் அவருடைய கீர்த்தி நன்றாய் வெளிப்படும்.

நகரத்:—கல்விமான் பெல்லா ரியோகடி தத்தை
வாசித் திடநீர் கேட்டீர். வந்தனர்
பண்டித ரிதோ:—

[நியாயசாஸ்திர பண்டிதர்போல் உடுத்துக்கொண்டு போர்ஷியா வருதல்.]

நும் பாணி கொடுத்திடும்.
வந்தனிர் வயோதிகப் பேல்லாரியோ விட
மிருந்தே ?

போர்:— ஆம்வந் தேனென் னேந்தலே !
நகரத்:—உம்வர விற்கியா மிகமகிழ்ந் துள்ளேம்.
நீருட் காரும். இந் நியாயத் தலத்திலே
விசாரணை யாகும் விவாதநீ ரறிந்துளீர்.

போர்:—நானிவ் வழக்கினை நன்று யறிந்துளேன்.
யாவன் வணிகன் ! யாவன் யூதன் ?

நகரத்:—அந்தோனியோ, கிழ ஷைலாக் காவீர்
நில்லுமின்.

போர்:— நின்பெயர் ஷைலாக் காமோ ?

ஷைலா:—என்றன் பெயரது ஷைலாக் காகும்.

போர்:—நீபிடி வாதமாய் நிகழ்த்தும் விவாதம்
விநோதமே. ஆயினும் வேனிஷிய சட்ட
விதியோ நீசெலும் விதத்தைக் குற்றம்
பேச வொணுதால். அவன்றன் பிடிக்குள்
அகப்பட் டுள்ளீ ரன்றோ ?

அந்:— ஆம் அவன்
அவ்வண மறைகிறுன்

போர்:— ஆவணந் தனைநீர்
ஒப்புகின் றனிரோ ?

அந்:— ஒப்புக் கொள்கிறேன்.

போர்:—அவ்வித மாமே லிந்த யூதனும்
இரக்கமுள் ளவனு யிருந்திடல் வேண்டும்.

ஷைலா:—இருத்தலெவ் வவசியத் தாலென் றியும் [புதிர்

போர்:—இரக்கமென் பதுபல வந்தத் தியைவ [தொன்
றன்று. விண் ணின்றிவ் வவனியின் மீதே
வீழ்ந்திடு மினிய மழைபோன் மேவும்.
அஃதிரு வகையா நன்மை யளிப்பது.
ஈவோ னேற்போ னென்றிரு வருக்கும்
ஏக காலத்தி லின்னல் மீயும்.
உயர்வறு திறலினு முயர்வறு திறத்தது.
பட்டாபி ஷேகம் பெற்றபூ பாலற்
கவனது கிரீட மதனினுஞ் சிறந்தது.
தராதிபன் செங்கோல் தரணியி லவனது
அதிகா ரத்தி னடலுக் கறிகுறி.
தனக்கு மாட்சியுஞ் சனங்கட் கச்சமும்
தந்து விளங்கும். இந்தத் தரணியில்
இறைவர்க் கஞ்சுற லிதனி னுவதே.
இரக்கமோ இச்செங் கோற்குமேம் பட் [டதே.
இறைவர்க ளிதயசிம் மாசனத் திருப்பதாம்.
ஈசன் பல்குணத் தேற்றவோர் குணம். இத்
தயைநியா யத்தைச் சமனப் படுத்திறல்
தரணிப ராற்றல் சகதீ சனதுபோன்
றொளிரு மன்றே. ஆதலின் யூத!
நியாயம் பெறலே நின்வழக் காயினும்
நீதி யொன்றையே நிமலன் கைக்கொளின்
எவரும் பரகதி யடையோம் இதைநினை.

பேரரு ளிறைசெயப் பிரார்த்திக் கின்றனம்.
அப்பிரார்த் தனைநா மனைவரும் பிறருக்
கிரங்கி யுதவிசெய் திடக்கற் பிக்குமால்.
நின்றன் வழக்கி னீதியுக் கிரத்தைச்
சமனப் படுத்தஇத் தனையான் சாற்றினேன்.
அன்றிஅந் நீதியே யடைதனின் கருத்தேல்,
இவ்வெனிஸ் நகருள வோரமில் லாத
நியாயத் தலமதோ நின்றிடும் வணிகற்
கெதிர்த் தீர்ப்பு ச்செய் திடவே கடவது.

**ஷைலா:**—என்செயற் பயனெலா மென்னையே யடைக.
சட்டம் பத்திரத் தண்டமப ராதம்
இவையே நான்பிரார்த் தனைசெய் திடுவேன்.

**போர்:**—தனமீந் திடற்கவன் சத்தியில் லானோ?

**பசா:**—இலானலன். அவற்கா விந்நியா யத்தலத்
தீவே ஞனே. அத்தொகைக் கிருமடங்
கீவேன். அதுபோ தாதெனிற் பத்து
மடங்களித் திடநான் கட்டுண் பேன்மன்.
ஈயே னெனிலென் கரஞ்சிர மிதயம்
அபராத மாகுக. அதுவுந் தகுதியா
யிலையெனிற் சலஞ்சா தித்திடுங் குரூர
எண்ணம் பெருந்தகை யினைப்பா ராட்டா
தகற்றி யொழித்திடும். ஆதலி னைய! நும்
அதிகா ரத்தாற் சட்ட மதனை
வலிந்து பொருள்படுத் துவீர். ஒரு வான்நலம்
செயவோர் சிறுபிழை செய்திவ னெண்ணமாங்
கொடுங்கூ ளியையடக் குகெனவேண் டுகிறேன்.

**போர்:**—அது தகா. வெனிஸில் உளவதி காரம்
ஏது மியற்றிய சட்ட மெதனையும்
மாற்றவற் றன்றால். அஃதோர் மேற்கோள்
ஆக நிலைத்தே யதுகா ரணமா
அளவில் பிழைகள் அரசாங் கத்தில்
அணைந்திடும். ஆதலி னதுகூ டாதே.

**ஷைலா:**—இவர்வழக் குத்தீர்த் திடவந்த **டானியல்.**
ஆ! ஆ! **டானியல்** ஆ! நுண் ணறிவுள
வாலிப நீதி மானே உமைநான்
எத்துணை வியப்பேன்.

**போர்:**— இப்பத் திரநான்
நன்குபார்த் தாய்ந்திட நல்கத் தயைபுரி.

**ஷைலா:**—உளதிதோ மிகக்கன முடையபண் டிதரே,
உளதிதோ.

**போர்:**— உன்பணத் திற்குமும் மடங்குத்
தனமதோ **ஷைலாக்** கேதந் திடுவரால்.

**ஷைலாக்:**—சத்தியம், சத்தியம், கடவுள்முன் சத்தியம்
செய்துளேன், பொய்ச்சத் தியத்தினா லெய்தும்
பாவமென் னாத்துமா பற்றிட விடுவனோ?
ஆத்துமா பாவ மடைந்திட விடேனே!
விடேன்வெனிஸ் நகரெலா மெற்கீந் திடினுமே.

**போர்:**—ஏன்? இப் பத்திர மிழந்ததே யாகும்.
சட்டப் படிக்கித னாலே யூதனும்
அவ்வணி கன்றன் னிதயந் தனக்கணித்
தாகவோ ரிராத்தற் றசையை யறுத்துக்
கொள்ளுமோ ருரிமை கொண்டவ னானால்.

இரங்கிடாய், மும்மடங் காம்பண மேற்றிடாய்.
பத்திரம் பரிகரித் திடவெற் கிசைத்திடாய்.
ஷைலா:—நீவிரோர் தக்க நியாயாதி பதியாத்
தோற்றுதிர். சட்டஞ் சூழ்ந்துளிர் நீரே.
உம்வியாக் கியானமு முசிதமா யுளதால்.
சட்டந் தனக்குத் தக்கவா தாரமாய்
நீரிருத் தலினுற் றீர்ப்பு நிகழ்த்திடீர்.
எனைமாற் றிடற்கெம் மனித னுவிற்கும்
பலமிலை. பத்திரப் படிதான் பெறுவேன்.
அந்:—'தீர்மா னஞ்'செய நியாயாதி பதியைப்
பிரீதி மிகுந்துநான் பிரார்த்திக் கின்றேன்.
போர்:—அப்படி யானு லவனது கத்திக்
கும்மார் பினையொப் புவிக்கவேண்டும்.
ஷைலா:—ஓமாட் சிமையுள நியாயாதி பதியே!
ஓமிக வுசித வாலிப சிரேட்டரே?
போர்:—ஏனெனிற் பத்திர மதனிற் காணுறும்
தண்டனை யானது சட்டந்தனைத் தழீஇ
அதனது கருத்திற் கமைந்துள தன்றே.
ஷைலா:—அதுமிக வுண்மை யாம்.முறை கோடா
நெறிசேர் நியாயாதி பதியே, நீர்தாம்
தோற்றந் தனினெத் துணைமுதிர்ந் துள்ளீர்.
போர்:—ஆதலி னும்மார் பதனைத் திறந்திடீர்.
ஷைலா:—ஆமவ னிதயம், அவ்வண மாவணம்
அறையும், ஆ நீதரே யப்படி யன்றோ?
“அவனித யத்திற் கதியணித் தாய்”எனும்
இவையே பத்திரத் தெழுதிய மொழிகள்

போர்:—ஆமா மவையவ் வணமே யுளவால்.
தசைநிறுத் தற்கிவண் தராசாதி யுளவோ ?
ஷைலா:—ஆயத்த மாநா னவற்றினை யுடையேன்.
போர்:—இரத்தம் பாய்ந்தவ னிறந்து படாவணம்
அவன்புண் வாய்களை யடைக்க ஷைலாக்கே!
மற்றுன் செலவிலோர் சத்திர வைத்தியன்
றனையா யத்தமாய்த் தருவித்து வைப்பாய்.
ஷைலா:—அவ்வண மாவணந் தனிலறைந் துளதோ ?
போர்:—அவ்வண மில்லை, ஆயினு மென்னே?
அறமா வத்துணை நீசெயி னன்மையாம்.
ஷைலா:—அதைநான் கண்டிலேன். ஆவணந் தனிலிலை.
போர்:—வணிகநீ ரேதெனும் வகுத்திடல் வேண்டுமோ?
அந்:—சிறிதே, சித்தமு மூக்கமு மாய்நான்
உளேன். பசானியோ உந்தன் கைகொடும்.
நீர்சுக மேபோய் வாரும். உமக்கா
இதற்குட் பட்டே னெனுந்துய ரொழிவீர்.
ஏனெனி லதிட்டமென் பாள்வழக் கத்தினும்
அதிக தயையுளா ளாவிவ் விஷயத்
திருக்கின் றனளால். இன்னலுற் றவனைச்
செல்வ மிழந்தபிற் சீவனோ டிருத்தி
உட்குழி கண்ணு முறுதிரை நுதலுமாய்த்
தரித்திரக் கிழவய ததனிற் பார்த்திடல்
அவட்கெக் காலும் வழக்கமே யாகும்.
அத்தகைத் துன்ப மாநெடுந் தண்ட
நின்றெனை யவளு நீக்குகின் றனளால்.
உம்கன மனைவிக் கெனைவியந் துரையும்.

அந்தோனி யோமுடி முறையவட் கறையும்,
எத்துணை யுமைநட் டுளேனென விசையும்.
நானிறந் தொழிந்தபி னென்னல நவில்வீர்.
கதைநீர் கழறிய பின்னர் பசானியோ
ஒருகா லத்திலோ ருண்மை நண்பனை
உடையரா யிருந்தா ரோவிலை யோவென
அவளே தனக்குள் ளறிவா ளாகுக.
இட்டனை இழந்து விடுகிறீ ரென்று
வியசனப் படுவீ ராகில் மற்றவனும்
உம்கட னொழிப்பதற் குளத்திற் றுன்புறான்,
ஏனெனில் யூத னாழமாய் மாத்திரம்
அறுத்திடு வானே லந்தக் கணமே
எனதெலா விதயந் தன்னொடு மீவேன்.

பசா:—அந்தோனி யோவென் னுயிர்போ லருமையாம்
மனைவியை மணந்துளே னான், ஆயினுமுயிர்
தானு மென்னுடைத் தாரமு மெல்லா
உலகுமும் முயிர் தனக் குறுமதிப் பிலவாம்.
எல்லா மிழந்திடு மேவனுமை மீட்டற்
கதுமாத் திரமோ, அவைக ளனைத்தையும்
இப்பேய்க் குப்பலி யீங்கிடு வேனே.

போர்:—அவ்வா றளிப்பதைக் கேட்கவும் மனைவி
உம்சமீ பத்தி னுற்றிடு வாளேல்
அதற்கா வுமக்கவள் வந்தன மளியாள்.

கிரா:—நான்மிக நயப்பா யுறுதியாய் நட்குமோர்
இல்லா ளெனக்குளாள். இந்நா யூதனைச்
சித்தந் திருப்பவோர் தெய்வந் தன்னைப்

பிரார்த்தனை புரிந்து பெற்றிடுவதற்கா
இறந்தவள் வாணி லிருக்கநான் விழைவேன்.

நெரி:—அவள்முது கிற்பினீ ரறைந்ததாற் குற்றமின்
றன்றே னும்மில்வாழ் வமைதியற் றதுவாம்.

ஷைலா:—(திரும்பி) இவர்கள் கிறிஸ்தவக்கணவராம். [எனக்கோர்
புத்திரி யுளள். அவடனக்குப் புருடனாய்க்
கிறிஸ்தவ னொருவன் கிடைப்பதிற் பராபஸ்
மரபி லெவனே யாயினு மணமகன்
ஆயிடக் கடவ னென்பதென் னாசையே.
(வெளிப்படையாய்)
காலம் வீணே கழிக்கின் றனமியாம்.
'தீர்ப்பு'ச் செயவுமைப் பிரார்த்திக் கின்றேன்.

போர்:—இவ்வணி கன்றசை யினிலோ ரிராத்தல்
நினதே, நீதி பதியளிக் கின்றனர்,
சட்டமு மதனைத் தந்திடு மாலோ.

ஷைலா:—நீதி மிகவுடை நியாயா திபதீ.

போர்:—இத்தசை நீயவ ரிதயந் தனிலிருந்
தறுத்திடல் வேண்டும், மற்றதனைச் சட்டம்
அளித்திடும், நியாயாதிபதியு மளிப்பார்.

ஷைலா:—மிகுவிற் பனமுள நியாயாதி பதியே !
(அந்தோனியோவை நோக்கி)
தீர்ப்பு, வாராய் சித்தஞ் செய்திடாய்.

போர்:—சிறிது தாழ்த்திடு. சிலவினு முள்ளன.
இம்முறி யுன்றனக் கிரத்த மணுவும்
ஈயாது. ஓரிராத் தற்றசை நிபந்தனை.
ஆதலிற் பத்திரப் படிநீ யடைந்திடாய்.

நினதிராத் தற்றசை நீபெற் றிடுதி.
ஆனு லதையறுத் திடுவதிற் கிறிஸ்தவ
உதிரந் தனிலொரு திவலைநீ சிந்திடில்
வேனிஸ்நகர் நியாய விதிப்படியே யுன்
தாவர சங்கம சொத்துகள் வேனிஸின்
அரசு தனக்கப ராதமா யிடுமால்.

கிரா:—பழுதிலா நீதிபதி! பார் யூதனே!
நெறிகோடாத நியாயாதி பதியே!
ஓஉணர் வுடைய நியாயாதிபதியே!

ஷைலா.—சட்ட மதுகொலோ?

போர்:— சட்டநீ யேபார்.
நியாயமதனையே நீவேட் டிடலால்
நீவிரும் பிடற்கு மேற்படு நியாயம்
நீபெறுவாயென நிச்சய மாயிரு.

கிரா:—ஓஉணர் வுடைய நியாய துரந்தரன்;
நீகாண் டியூத! கற்ற நியாயவான்.

ஷைலா:—ஆயினிப் போழ்துநீ ரளித்ததையடைவேன்.
பத்திரப் பணத்தின் மும்மடங்களித்திர்.
ஏகுக கிறிஸ்தவன்.

பசா:— ஈங்குள தப்பணம்.

போர்:—பொறும், பொறும், யூதன் முழுவதூஉ [நியாயமே
அடைவான், பொறும்நீர், அவசர மிலையால்.
அபரா தந்தவிர்ந் தவனே தும்பெறுன்.

கிரா:—ஓயூ தனேகோ டுருநீதி பதியே!
நிரம்பக் கற்ற நியாய துரந்தரா!

போர்:—ஆதலிற் றசைகொய வாயத் தஞ்செயாய்.
உதிரநீ யுகுக்கேல், ஓரிராத் தற்றசை
அலாற்சிறி தேனு மதிகமாக் குறைவா
அறுத்திடேல். ஓரிராத் தற்றசைக் கதிகம்
அல்லது குறைவாக் காற்கழஞ் சாயினும்
அறுத்திடல் கூடாது. அந்த மட்டோ,
ஒருரோ மத்தி னளவே யாயினும்
துலாக்கோல் சாய்வுறிற் றுஞ்சற் பாலைநீ.
உன்றன் பொருளெலா மரசுக் குரியவாம்

கிரா:—ஓ இரண்டாம்டா னியல், ஓ டானியல்.
வாராய் யூத கிறிஸ்தவத் தன்பிலாய்,
இப்போழ் தத்துநீ யென்கையிற் சிக்கினாய்.

போர்:—தாழ்த்தலென் யூத! அபரா தம்பெறாய்.

ஷைலா:—என்முத லெனக்கீந் தெனைச்செல விடு
[திர்.

பசா:—உனக்குச் சித்தமாய் வைத்துளேன், உள
[திதோ.

போர்:—அவனதை யடைவுற நியாய சபையிலே
இசைந்திலன், நியாயமு முறியுமே பெறு
[வன்.

கிரா:—ஓ டானியல், ஓ இரண்டாம் டானியல்
எனநா னின்னு மியம்பிடு கின்றேன்.
எனக்குநீ யிம்மொழி யியம்பிய வாற்றால்
யூதனே யுனக்கு வந்தனம் புரிவனால்.

ஷைலா:—என்முத லேனும் யானடைந் திடே
[னோ?

போர்:—அபரா தம்மலால் வெறொன்று மடை
[யாய்.
ஷைலா:—ஆயிற் பிசாசுதன் னலா நன்மை
அவற்களித் திடுக. வீண்பேச் சொழிதர
இனியிவ் விடம்விட் டேகிடு வேனால்.
போர்:—தாமதி யூதனே ! சட்டத்திற் குன்பால்
வேறோர் பிடியுள ! வெனிஸ்நகர் வீதிகளில்
நேரா யேனு நேரிலா தேனும்
அயலா னொருவ னவ்வெனிஸ் நகர
வாசியி னுயிரை வவ்வவுன் னினனேல்
உன்னினோ னாஸ்தி தனிலோர் பாதி
எவனுயிர்க் கவனிட ரிழைக்கவுன் னினனோ
அவனடைந் திடுவன். மற்றையோர் பாதி
அரசன் சொந்தப் பொக்கச மடையும்.
அவனுயி ரோவர சாக்கினைக் குள்ளாய்ப்
பிறரெவ ராலும் பேணலா காததாய்
மன்னவ னருளால் வாழ்தற் குரியதாம்.
நீயந் நிலையி னின்றனை காண்டி.
ஏனெனிற் பிரதி வாதியின் னுயிரைக்
கவர்ந்திட நேரா கவுநே ரன்றியும்
செய்தனை தந்திர மெனவெளிச் செயலால்
தெரிந்திடும். அதனால் யான்முன் செப்பிய
ஆபத் திலேநீ அகப்பட் டுள்ளாய்.
ஆதலி னடிபணிந் திந்நக ரதிபன்
இரங்குதற் கிரந்தினை யடிகளில் வீழ்வாய்.
கிரா:—நான்று கொள்வ னுனை யேன்று
[வேண்டுதி.

ஆயினு முன்சொத் தனைத்து மரசிற்
கபரா தமாகி யடைந்துவிட் டதனால்
நாளும் நாண் விலையுமுன் பாலிலை யாதலால்
பார்த்திபன் செலவினீ தூக்கப் படுவாய்.

நகரத்:—நங்குண பேதநீ நன்கறிந் திடுவான்
நீகேட் டிடுமுன் னினக்குயி ரளிப்பேன்.
ஆத்தியிற் பாதி அந்தோனியோவதாம்.
மற்றைய பாதி மன்னற் குரியது.
அதிலப ராத மகல்வுற நின்றனைத்
தாழ்நடை யுறுவையேல் தருவோம் நினக்கே.

போர்:—அரசிற் காமது, அந்தோனியோ வுக்கல?

ஷைலா:—இலை, என் னுயிரையும் யாவையுங் கொ
[ண்டிடும்.
அதைமன் னிப்பதை யகற்றுதிர். அகத்தைத்
தாங்கிடுந் தம்பந் தனையகற் றிடுவோர்
இல்லினை யெடுப்போர். யான்வாழ்ந் திடும்வகை
நீக்கிடி லென்னுயிர் நீக்குவீர் நீரே.

போர்;—அந்தோனி யோ! அவற் கியாதருள்புரிவீர்?

கிரா:—தூக்குக் கயிறுதான் சும்மா கொடுப்பதே.
ஈச்சுரப் பிரீதியாய் வேறொன் றிலையே.
அன்றியொன் றளித்தல் தெய்வம் பொறாதே.

அந்:—அவனாஸ் தியினோர் பாதி யாகிய
அபரா தத்தை யகற்றிட விந்நகர்
ஆளும் பிரபுவு மணத்தவை போரும்
பரிவுசெய்திடுக. மறுபாதியை நான்
உபயோ கஞ்செய வவனொப் புவனேல்
சின்னாண் முன்னவன் றனயையைத் திருடிய

துரைமக னுக்கிவன் றுஞ்சிய பின்னர்
ஈந்திடப் பிரிய மெனக்குள தாகும்.
இன்னமு மிரண்டு காரிய மியற்றுதல்
வேண்டுமால். இந்த வெகுமதி தனக்கா
அவனிக் கணமே கிறிஸ்தவ னாதல்
ஒன்று, மற்றைய வொன்றே வவனிறந்
திடுங்கா லவனிடத் துள்ளன வெல்லாம்
அவன்மரு கன்லா ரேன்சோ வவன்மக
டமக்கீந் திடுவதா நன்கொடைச் சாதனம்
எழுதிவைப் பதுவே.

நகரத்:— இதையவ னியற்றுவான்.
இலையே னுமவற் கிவ்வயிற் சற்றுமுன்
இசைத்தமன் னிப்பைப் பரிகரித் திடுவோம்.

அந்:—உனக்கிது திருத்தியோ யூதனே யுரையாய்.

ஷைலா:—திருத்தியே.

போர்:— இலேககா நன்கொடைப் பத்திரம்
எழுதுவாய்.

ஷைலா:— இவண்விட் டேகுற வெனக்கு
விடையளிப் பானுமை வேண்டினன். எற்குநோய்
அணுகிய தால்யான் போயபின் பத்திரம்
அனுப்புமின். அதிலென் கையெழுத் தமைப்பேன்.

நகரத்:—போ. போ. ஆனா லதனைப்புரிந்திடாய்.

கிரா:—ஞானஸ் நானஞ் செய்வதி னுனக்கு
ஞானத் தந்தை யராவா ரிருவர். நான்
நியாயாதி பதியா யிருந்திடி னின்னை
ஞானஸ் நானப் பெட்டிக் கலாமற்

றாக்கு மரத்துக் குக்கொண் டேக
இன்னும் பதின்மரை யுடையனா யிருப்பாய்.
(ஷைலாக் போதல்.)
நகரத்:—ஐயா என்னுடன் புசிக்க வென்னகம்
வாரீ ரெனவுமை வரங்கேட் கின்றேன்.
போர்:—தாழ்வொடு தங்கள் கனத்தை மன்னிப்பு
நான்கேட் கின்றேன். படூஆ நகர்க்கிவ்
விராத்திரி யேநா னேகிட வேண்டுமால்.
உடனே புறப்பட லுசிதம தாகும்.
நகரத்:—அவகா சமுமக்கிலாமையால் விசனமே.
அந்தோனி யோஅத் துரைமகற்குத் தரும்
பரிசளித் திடும் கடப் பாடு மற் றவற்கு
நனிபட் டுளீரென நானினைக் கின்றேன்.
(நகரத்தலைவனும் அவன் பரிசனங்களும் போதல்.)
பசா:—மாட்சிமை மிகுகன வானேயென்றன்
இட்டனு மியானு மிற்றைஞான் றுமது
விவேகந் தன்னால் வேதனை மேவுறு
தண்டனை தப்பினோம். அதற்கா யூதன்
மூவா யிரம்டக் கற்று முழுவதூஉம்
உபசார சகிதமா யுற்ற சிரமந்
தனக்குமா றாகத் தருது முவந்தே.
அந்:—அதுவே யன்றியெஞ் ஞான்று மன்பினிலும்
ஊழியந் தனிலு முமக்காட் பட்டுளோம்.
போர்:—திருத்தி யுடையோன் செல்வ மடைந்தோன்.
தீங்கினின் றுமை நிவர்த்தித்தது திருத்தியே.
அதனாற் பரிசடைந் தவனே யானேன்.
எந்நா ளினுமென் மனம்பண வாசைப்

பட்ட தேயிலை. இனிநாம் பார்த்திடும்
அமயத் தெனைநீர் அறிய வேண்டுவல்.
வாழிய நீவிர், நான் போய்வரு கின்றேன்

பசா:—நேயமுள் ளவரே! நிர்ப்பந்த மாவுமை
இனுநா னிணங்கச் செய்திட வேண்டுமால்.
கட்டண மாக வலாதுகா ணிக்கையாய்
எம்மிடத் தோர்ஞா பகப்பொருளேற்பீர்.
இருவர மீந்திட வுமைப்பிரார்த்தித்தேன்,
எனக்கிலையெனுமையும், மன்னிப் பதுவுமாம்.

போர்:—அதிக நெருக்கஞ் செய்கிறீ ரதனால்
இணங்குவேன்,
(அந்தோனியோவை நோக்கி)
எற்குநுங் கையுறை தருவீர்.
அதைநா னும்பொருட் டாக வணிகுவேன்.
(பசானியோவைப் பார்த்து)
உமதன் பினுக்கா வுமது கையுறாஉம்
இக்கணை யாழியை யேற்பல்யானே.
உமது கையைநீ ருள்ளிழுக் கற்க.
ஏலேன் வேறுநா னெதையும், அன்பினால்
எனக்கி தில்லையெனநீர் மறுக்கீர்.

பசா:—ஐயோ! நன்மைசே ரையன்மீ ரிக்கணை
யாழி யற்பமே. இதையுமக் களித்தாங்
கியானவ மான மெய்திட விசையேன்.

போர்:—இதனைத் தவிரமற் றெதனையும பெற்றிடேன்.
இதின்மிகு மவாவுள தென்றியான் கூறுவேன்.

பசா:—இதனது விலையினும் ஏற்றமாம் விசேடம்
உளதிது. வேனிஸில் விலைநனிமிகவுள

அந்த வோர்கணை யாழியை யளிப்பேன்.
அதைப்பறை சாற்றி யறிவேன். இதற்கு
மாத்திர மௌனமன் னித்திட வேண்டுவேன்.
போர்:—அறிந்தே னையா, அளிப்பதாப் பகர்தலில்
உதாரர் நீரே. உமைநா னிரக்க
முன்னர்ச் செய்தீர், பின்ன ரிரவலற்
களித்திடும் விடையு மளிக்கின் றீரென
நானினைக் கின்றேன்.
பசா:— நன்மைசே ரையரே
இக்கணை யாழியெற் கீந்தவென் மனைவி
அதைத்தரித் திட்டஞான் றதனைநான் விற்றல்
ஈத லிழத்த லிகப்பதாச் சத்தியம்
என்னிடத் தேற்றனள்
போர்:— தாங்களீ வதனை
ஒழிக்க வநேகருக் கிஃதோ ருபாயம். உம்
பத்தினி பயித்தியக் காரியா விலாமல்
இம்மோ திரம்பெற வெத்துணைத் தகையுளேன்
எனல்தெரிந் திடுவளே லெனக்கு நீரிதை
ஈவதற் காகவெக் காலத் திலும்பகை
சாதியாள். செல்கிறேன், சாலவாழ்வுறுகநீர்.
(போர்ஷியாவும் நேரீசாவும் போதல்.)
அந்:—எனது பசானியோப்பிரபுவே யிவருக்
கிம்மோ திரமீந் திடும், எனன்பும்மவர்
தகுதியு முந்தன் றையல் கட்டளை
தன்னினு மேலா மதிக்கத் தகுமே.
பசா:—ஏகுதிர் கிராஷியா னே, ஏகிடீர்மிகு
அவசர மாகமற் றவர்தமை யணுகுபு

மோதிர மளித்துநும் மால்முடி யும்மேல்
அவரை அந்தோனியோ வகங்கொண் டணேவீர்.
போதிர் மிக்க விரைவுடன் போதிர்.

(கிராஷியானே போதல்.)

வருதிர், நீரு நானு மவ்வயின்
இக்கண மேகுவேம். வைகறை யதனில்
நாம்பேல் மண்டு நகரந் தனக்கு
வல்லையிற் செல்வேம், வருதிர் அந்தோனியோ.

(எல்லாரும் போதல்.)

---

## இரண்டாங்களம்.

அதே இடம் ஒருவீதி.

(போர்ஷியாவும் நேரிசாவும் வருதல்.)

போர்:—யூதன் மாளிகை யுசாவிப் பத்திரம்
ஈந்து கைச்சாத் திடுவாங் கிடுதி.
இற்றைஞான் றிரவே யேகிநம் வீட்டை
நங்கண வருக்கோர் நாள்முன் னணுகுவோம்.
இம்முறி லாரேன் சோவுக் கினியதாம்.

(கிராஷியானோ வருதல்.)

கிரா:—நலமுடை யையபா உமையடைந் ததுநலம்.
என்றன் பசானியோப் பிரபு இந்த
மோதிர மதனை முன்னிலு நன்றாய்
ஆலோசித் துமக் கனுப்பினர். அன்றியும்
அவருட னசன மயில்வா னழைத்தனர்.

போர்:—அதுமுடி யாதே. அதிவந் தனத்துடன்
அவர்களை யாழியை யங்கீ கரித்தேன்.
இதனை யவருக் கியம்பிட வேண்டினேன்.
அன்றியும் யூதனகந்தனை யென்றன்
இளைஞற்குக் காட்டுதிர்.

கிரா:— இயற்று வேனதனை.

நேரி:—(போர்ஷியா பக்கம் திரும்பி)
உம்முட னோர்மொழி யுரைத்திட வேண்டும்
எக்கா லத்திலும் பேணி வைப்பேனென்
றுணையிட் டதன்மேல் யானவர்க் களித்த
ஆழியென் னன்ப ரளிப்பரோ பார்ப்பேன்.

போர்:—(நேரிசா பக்கமாகத்திரும்பி)
அடைந்திட லாகுநீ அதுநிச் சயமே.
அவர்கள் மோதிர மாடவர்க் களித்ததாக்
கழிமிகு சத்தியங் கழறுவ ராமால்.
அவரினு மதிகமா வாணைநா மிட்டாங்
கவர்தமை நாண மடைவுறப் புரிவோம்.
(வெளிப்படையாய்)
போதிவிரைவாய், போதிநான் றங்கும்
இடநீ யறிவாய்.
நேரி:— இனிய ஐயரே!
வருதிர். அம் மாளிகைநீர்காட்டுவீரோ?

(எல்லாரும்போதல்.)

---

# ஐந்தாம் அங்கம்.

---

## முதற்களம்

இடம்:—பெல்மண்டு, போர்ஷியா வீட்டின் முன்றில்.

[லாரேன்சோவும், ஜெசிக்காவும் வருதல்.]

லாரே:—சந்திரன் இன்னே தவமிளிர் கின்றனன்.
இத்தகை மைத்தா மிராத்திரி யதனில்
இத்தகை யிரவினில் இனிய மாருதம்
விருக்கங் களைமேல் முத்த மிட்டிட
அவைகள் சிறிது மரற்றுதல் செய்யா
இத்தகைத் தாய இரவினிற் போலும்
டிராய்நகர் மதில்மேல் டிராய்லஸ் ஏறி
கிரேக்கர் கூடா ரங்களுள் கிரேசிட்
எதனில் இருந்தனள் அதனை நோக்கி
நெட்டுயிர்ப் பெறிந்தான் எனநினைக் கின்றேன்.

ஜெசி:—இத்தகைத் தாய இரவினிற் போலும்
திஸ்பி பனிசேர் திருணங் தாண்டுபு
மடங்க ணிழலையம் மடங்கற்காணுமுன்
காணூஉக்கலங்கிமற்றோ டினளாமே.

லாரே:—இத்தகை யிரவில் டிடோ தனது
கைதனில் 'வில்லோ'க் கிளைகளை யுடையளாய்க்
கொந்தளிப் புறுங்கடற் கரைகுறு கித்தன்
காதலன் றன்னைக் கார்த்தேஜ்•நகர்க்கு
மீளஅக் கிளைகளை வீசிநின் றனளால்.

ஜெசி:—இத்தகை யிரவில் மேடியா வயோதிக
ஈஸனை யிளையோ னாக்கிடு மந்திரப்
பூண்டுகள் பொறுக்கிச் சேர்த்தன ளாமால்.
லாரே:—இத்தகை யிரவிற் செல்வனும் யூதன்
இடம்விட் டேகினள் ஜெசிக்காகரந்தே,
வெனிஸ்நகர் விட்டுப் பெல்மண்டி னுக்குப்
பணம்வீண் செலவுசெய் பதியுட னேடினள்,
ஜெசி:—இத்தகை யிரவிற் காளைலா ரேன்சோ
உண்மை சிறிதுமே ஒன்றுத லில்லா
உண்மை யுறுதிகள் பற்பல வுரைத்தாங்
கவடன் னாவியைக் களவுசெய் தவளை
மிகவிழை வுற்றதாய் மெய்ம்மொழி பகர்ந்தார்.
லாரே:—இத்தகை யிரவி லெழில்சேர் ஜெசிக்கா
ஓர்சிறு சண்டைக் காரியை யொப்ப
அவள்கா தலன்மே லலர்தூற் றினளால்,
அவனு மவளைமன் னித்தன னாங்கே.
ஜெசி:—ஏனையோ ரெய்தில ரேல்பா னும்மை
எத்தனை 'இரவோ' இயம்பி விஞ்சிடுவேன்.
ஆனாற் செவிகொடும், ஓராடவன்நடைச்
சத்தமென் செவியிற் சார்தரு கின்றதே.
(ஸ்டீவானோ வருதல்)
லாரே:—இந்நிசி தனிலிவ் விரைவுடன் வருவதார்?
ஸ்டீ:—ஓர்நண் பன்.
லாரே:— ஓர் நண்பன், எந்நண்பன்?
நண்ப!நின் னாமம் நவிலத்தயைசெய்.
ஸ்டீ:—என்னா மம்ஸ்டீ வானோ. என்றன்
எஜமானி யிங்கே பெல்மண் டினுக்குப்

பொழுது புலர்ந்திடு முன்னர்ப் போதுவள்
எனும் வாசகம் யான் கொணர்ந்தேன். இன்பம்
விளைக்கும் வதுவைநாள் விழைவுறீ இப் புனிதச்
சிலுவைகள் பக்கலிற் றிரிதரு கின்றனள்.
இவற்றை முழங்கால் படியிட் டேத்துவள்.

லாரே:—அவடன் னுடனே யார்வரு கின்றனர்?

ஸ்டீ:—தூயவோர் துறவியுந் தோழியு மாம். என்
எஜமா னன்றிரும் பினனே விசையும்.

லாரே:—அவர்வர விலையால், அவரிடத் தேயிருந்
தேதுந் தெரிதர வில்லை. ஜேசிக்கா
தயைசெய், உளேநாஞ் சார்ந்திம் மனையின்
எஜமா னியின்வர வேற்றுப சரித்தற்
காவன யாவு மாயத்தஞ் செய்வாம்.

(லான்சிலட் வருதல்.)

லான்:—'சொலா' 'சொலா' ஓ, ஆ, ஓ 'சொலா' 'சொலா'

லாரே:—கூப்பிடுகின்றது யார்?

லான்:—'சொலா' லாரேன்சோ எஜமானையும் லாரேன்சோ எஜமானியையும் பார்த்திரா 'சொலா' சொலா'

லாரே:—கூக்குரல் போடுகிறதை நிறுத்து, இதோ

லான்:—'சொலா' எங்கே! எங்கே!!

லாரே:—இங்கே.

லான்:—அநேக நற்செய்திகளை உடையவனாய் ஓர் தூதன் எஜமானிடத்திலிருந்து வந்திருக்கின்றான் என்று அவரிடம்சொல்லும். நாளைக்காலைக்குள் என் எஜமான் இங்கே வருவார்.

(போதல்)

லாரே:—இன்னுயி ரே!நா மில்லத்து ளேகி
ஆங்கே யவர்கள் வரவெதிர் பார்ப்போம்.
ஆயினு மென்னும், அகத்துட்சேர்வதேன்,
இல்லினுட் சென்றெஜ மானி யணுகினள்
எனத்தகையெசெய்துனா யிஷ்ட ஸ்டீவானோ,
உமதுவாத் தியத்தைக் கொணர்மினோ வெளியே.

(ஸ்டீவானோ போதல்.)

இக்கரை தனிற்சந் திரிகை யெத்துணை
இன்ப மாகத் தூங்குகின் றது. இவண்
நாம்வீற் றிருந்து நமது செவிகளில்
சங்கீ தத்தொனி சார்ந்திடப் பெறுவோம்.
இனியநிச் சத்தமும் இந்த விரவும்
ஆனந்தகான மதற்குவாய்ந் தவைகள்.
இருக்குக, ஜெசிக்கா எவ்வணம் வான்றலம்
அவிர்சிறு பொற்றட் டங்க ளழுத்திய
தென்ன இலங்கும், காண்டிநீ, காணுறும்
அதிகச் சிறிசா யமைவுறு மண்டமும்
தன்னியக் கத்திற் சதாஎவ் வணமுடைக்
கந்தரு வருக்கெதிர் கானம் பாடும்
தேவ தூதர்கள் சிவணப் பாடுமால்.
அத்தகை யின்னிசை நித்தமா மாவியில்
உளதாயினு மிம்மட் போர்வையுடை
சரீர மதைபிழி வுறமூ டியதால்
அவ்விசை கேட்கலா காதவராவுளேம்.

(வாத்தியக்காரர்கள் வருதல்)

ஆ-ஆ, வம்மின், டயானு வையோர்
கீதந் தன்னுற் றுயினீக் கிடுமின்.

நணியுப ரினிய நாத முமதெஜ
மாணி காதைத் துளைத்திட வாத்திய
முழக்குட னவளை யழைத்திலிற் சேர்மின்.

(வாத்தியம் முழங்கல்)

ஜெசி:—இன்னியங் கேட்டுமெக் காலுநான் மகிழ்ந்
திலேன்.

லாரே:—உன்னுயி ரதனிடத் தொன்றலே காரணம்.
இரத்தங் கொதித்துக் கதிக்கு மேதுவால்
கணைக்குபு மிக்க களிப்பொடு துள்ளி
ஓடுமுல் லாச முடைய துட்டக்
காலிக் கூட்டங் கைபழ காத
குதிரைக் குட்டிக் குழாஅ மாகிய
இவற்றைக் குறிக்திநீ. இவைகளெக் காளத்
தோசை கேட்க வுறினு மியாவும்
ஏகமாக் குழீஇநின் றின்னிசை வலியாற்
றம்முடைக் கொடிய பார்வை சாந்தப்
பார்வைய தாகமா றிடுவது பாராய்.
ஆதலின் ஆர்வியஸ் விருக்கங் களையும்
கற்கள் வெள்ளங் களையும் தன்னுடை
இசையா லிழுத்தா னெனவிசைத் தனர்கவி.
ஏனெனிற் கான மியற்கையை மாற்றுத்
தன்மைசேர் வன்மையுஞ் சலமு மற்றுடைய
இயங்கியற் பொருள்க ளில்லையொன் றெனினும்.
சங்கீத ஞானஞ் சற்றுமில் லானும்
இன்னிய விசையா லிளகிடா தவனும்
இராஜ துரோகம் சற்பனை பறியிவை
தமக்குத் தகுதி யானவன் றனே.

அவன்றன் னாவியி னியக்க மிரவுபோல்
மனோகர மின்மையும் அவன்மன விகாரமும்
இயைந்து எரிபஸ்போ லிருண்மய மாகும்.
அத்தகை யாடவன் றனைநம் பற்க.
கானந் தனைநீ கவனித் திடுதியே.

(போர்ஷியாவும் நேரிசாவும் தூரத்தில் வருதல்)

போர்:—யாங்கா ணுறுமவ் வெளிச்ச மற்றென்றன்
அகத்தி லுள்ளதே. அச்சிறு வர்த்தியின்
சுடர்எத் தூரந் துலங்கிடும். அத்துணை
நற்செயல் தீயவிஞ் ஞாலத் தொளிருமே.
நேரி:—மதியொளிர் தருங்கால் வர்த்திநாங் கண்டிலோம்.
போர்—அதுபோற் பேரொளி சிற்றொளி யதனை
மழுங்கச் செய்திடும். மன்னவ னணுகும்
வரையு மிராசப் பிரதிநிதி மன்னன்
போலப் பொலிவன், புரவல னுற்றுழி
உண்ணாட் டோடையுவரிபுக் கொழிதல்போல்
அவன்சிறப் பொழியும். வாச்சிய மதுகேள்.
நேரி:—மாதே! அதுநின் மனைவாத் தியமே.
போர்:—அயலாச்சார்ந்துள அவைகளன்றி
எதுவும் நன்றல எனத்தெரி கின்றது.
அதுபகற் காலத் தினுமிக வதிக
இனிமையா வொலிக்கின் றதுவென வெண்
ணுவல்.
நேரி:—அமைதியே யத்தகைக் குணமத னுக்காங்
களித்திடு மம்மணீ !
போர்:— கவனியா திருப்பிற்
கம்புள்போ லினிதாக் காகமும் பாடிடும்.

எல்லியி லின்பமாப் பாடிடும் பறவை
வான்கோ ழிகளெலாம் வாய்திறந் தரற்றும்
பகலிற் பாடிடிற் சிறுபற வையினும்
இனிய கீத மிசைப்பதா வெண்ணப்
படா தென நினைக்கிறேன். பாரிலெத் தனையோ
பொருள்க ளிடத்தினாற் புகழ்ந்திடத் தக்க
மதிப்பு முண்மைப் பூர்த்தியு மல்குமால்.
வாச்சியம்நிறுத்துக. மதியம் எண்டிமியன்
றன்னுட னித்திரை சார்தரு மதனால்
எழுப்பிடப் பிரிய மிலதாற் சற்றும்.

(வாத்தியம் நிற்க)

லாரே:—அஃது போர்ஷியா வதுகுர லன்றேல்
யான்சா லவுமே மாந்தவ னாவேன்.

போர்:—குருடன் குக்கிலைக் குணமிலாத் தொனியால்
அறிதல் போன்றவனு மென்னை யறிந்துளான்.

லாரே:—அன்புடையம்மணீ! அகத்துள் வருக.

போர்:—எமது கணவர்த மின்பவாழ் விற்காத்
தெய்வந் தொழுதேம். அப்பிரார்த் தனையால்
அதுமிக க்ஷேமமாய் முடியு மென்றியாம்
சிந்திக் குதும், அவர் திரும்பி வந்தனரோ?

லாரே:—இன்னு மவர்வர வில்லை யம்மணீ!
ஆயினு மவர்வர வறிவித் திடுவான்
ஒருதூ தன்முனா வுற்றுரைத் தனனால்.

போர்:—நெரிசா, உள்நீ ஏகி யவர்க்கு
என்றன் வேலைக் காரர்க ளெவரும்
இவ்விட மிகந்துநாம் போந்தது தெரிவியா

திருக்கக் கட்டளை யிடுதி. லாரேன்சோ
பேசலீர் நீர், ஜெசிக்கா நீர் பேசலிர்.

(எக்காளத்தொனி கேட்க)

லாரே:—அணுகினர் நுமது காதலர். அவர்தம்
எக்கா ளத்தொனி யென்செவி யேற்றதால்.
அம்ம! கோட் சொல்வோர் யாமலே மஞ்சலிர்.

போர்:—இப்போ திவ்விர வெல்மழுங் கியபகல்
ஆனதென் றெண்ணுவல். அன்னது சற்றே
விளர்த்ததாய்த் தோற்றும்வெயிலோன்கரப்புழிப்
பகலுறும் படியதோர் பகலே போலும்.

(பசானியோ அந்தோனியோ கிராஷியானோ
அவர்கள் பரிசனங்களோடு வருதல்)

பசா:—பரிதி கரந்தபிற் படர்ந்திடு வாயேல்
பூமியின் மற்றைய புறத்தவர் தம்மொடு
நமக்கும் பகலாய் நண்ணிடு மாமே.

போர்:—இன்னகை யுமக்கியா னீவே ணுருக.
அன்றியெள் ளுநர்நகைக் காளா காதியான்
மன்னுக, அத்தகை மனைவி கொழுநனுக்
கின்ன லிழைப்பாள். என்னுற் பசானியோ
அக்கதி யடையா ரனவர தமுமே.
எனினு மியாவும் இறைசெய லாகுக.
வாழி துரை,உம் நல்வர வேற்கிறேன்.

பசா:—அம்மே வந்தனம், என்னுடைய யன்பரை
உபசரித் திடுதி; உரைப்பருங் கடப்பா
டிவர்திறத் துளேன். இவர் பேரந்தோனியோ.

போர்:—இத்தகை யவர்க்குநீ ரெல்லாத் திறத்தினும்
கடப்பா டுடனுறல் கடமை யன்றே.

எமினனி லவருமக் காக விரப்பவும்
கடம்பட் டனரெனக் கேட்டனன்யானே.

அந்:—'விடுதலை' யடைந்தேன், இனுமிகப் பேச்சு
வேண்டுவ திலையால்

போர்:— ஐய, எம் வீட்டில்
உமைவிருந் தினரா யோம்பிடு கின்றோம்.
வார்த்தையா லன்றி மற்றைய வகையால்
அதனைத் தெரித்திடல் வேண்டுமாதலின்
வாசக மாத்திர வந்தனஞ் சுருக்குவேன்.

(கிராஷியானோவும் நெரிசாவும்
ஒருபுறம் ஒதுங்கிப்பேசுதல்)

கிரா:—என்மேற் குற்றம் ஏற்றுகின்றனையேன் ?
ஆங்குள சந்திரன் மீதே யாணை
அறைகின் றேன்யான் உண்மையா லதனை
நடுவ ணிலேககன் றனக்கே நல்கினன்.
காதலி, அதற்கித் துணைநீ கவல்வதால்,
அதனை யடைந்தோன் மாண்டிருந் திருக்க
வேண்டு மென்றுநான் விரும்பு கின்றேன்.

போர்;—ஆ. ஆ! அதற்குமுன் சண்டை! என்காரணம்?

கிரா:—கருவிசெய் திடுவோன் கத்தியில் வரையும்
கவியினைச் சிவண "எனைக்காதலி நீ,
எனைவிடா திருநீ" எனும்வாக் கியமுடை
ஒருபொன் வளையம், ஒரற்ப மோதிரம்
அவளெனக் களித்தனள் அதனைப் பற்றியே.

நெரி:—என், வாக்கியம், விலை, யிவற்றைக் குறித்து நீர்
அறைகின் றனிரே! அதனையுமக்கு நான்

சந்தவக் கால மிறந்திடு மளவும்
அதனைத் தரித்துநீ ரிருப்ப தாகவும்
உமதுகல் லறையி லும்முட னதுவும்
இருந்திடல் வேண்டு மெனவுநீர் சத்தியம்
இயம்பினிர். எனக்கா வில்லா விடினும்
ஆதுரத் தொடுநீ ரன்பிட்ட வாணை
அதனை யானு மதித்துநீ ரகைதை
கவத்து வைக்க வேண்டுவ தாமால்,
நடுவ னிலேககன் றனக்கு நல்கினிரோ?
இல்லை, நான் சொல்வதற் கிறைவனே சான்று.
அதனை யடைதரு மிலேககன் றனது
முகத்தி லுரோம முகிழ்த்திட லிலையே.
கிரா:—ஆடவ னைவரை யிருப்பனே லதுவாம்.
நெரி:—ஆமாம் அரிவை யாடவ னைவளேல்.
கிரா:—இக்கை யாணை, ஓ ரிளவலுக் கீந்தேன்.
நின்னினு நெடிய னல்லன்பன், நீதி
பதியி லேககன் பச பசப்புடைச் சிறுவன்,
கூலியா வதனை யிரந்தனன், கொடுக்க
மறுத்திட வென்மனம் வலியின் றொழிந்தது.
போர்:—உம்மிடத் தொளியா துரைத்திடல் வேண்டும்.
உம்தன் விரலிலுண் மைமேசர் மொழிக
ளுடனே சேர்த்தி யும்விரற் றசையில்
ஆணையாம் ஆணி கொண்டாங் கறைந்தும
தன்மனை தருமுதற் சம்பா னத்தை
இத்துணை யிலேசி னீங்கினது பிழையே.
என்றன் காதலற் காழி யான் றந்தாங்

கதையெக் காலமு மகலா திருக்க
ஆணை வாங்கினேன். அவரிதோ வுளரால்.
பாருல கீயும் பான்மைய பணமெலாம்
கொடுக்கினு மதனைக் கொடாஅர், தன்விரல்
நின்றதை நீக்கா ரெனநா னவற்காச்
சத்தியந் திண்ணமாச் சாற்றுவ னானேன்.
உண்மையாக் கிராஷியானோடும் மனைவிக்
காற்றவு மன்பில் அல்ல லளித்தனிர்;
யானேற் பித்துப் பிடித்தவ னாவேன்.

பசா:— (ஒருபக்கமாகத் திரும்பி)
என்ற னிடக்கர மதனைத் துணித்தே
ஆழியைக் காத்து மதனை யிழந்தேன்,
எனச்சத் தியஞ்செய் திடுவ துபாயமே.

கிரா:—ஆழி யிரந்திடு நீதி பதிக்கதை
ஈந்தன ரென்றன் னேந்தல் பசானியோ.
அவனதை யடைதற் குண்மையி னருகனே.
எழுதிச் சிறிது சிரம மெடுத்த
அவனிலே ககனும் அப்பை யன்பின்
இரந்தானென்பால். எஜமான் வேலைக்
காரனென் றிருவருங் கணையாழிகளலால்
மற்றைய தெதுவும் வாங்கு மனமிலர்.

போர்:—ஈந்ததென் னாழியோ? என்சீ மானே,
நானளித் ததன்றென நப்பு கின்றனன்.

பசா:—செய்பிழை யியாதொருபொய் சேர்ப்பேன்
[மறுப்பனேல்.
அழகிய வென்கை அங்குலி யாழி

இலதெனல் காணுதி. அதுதொலைந் திட்டதே.

போர்:—இவ்வணமேயும் பொய்யா மிதயம்
உண்மை சற்று முள்ள தன்றே.
ஆழியைக் கண்ணுறு மளவிலு மும்தன்
இல்லா ளாகே ணிதுசத் தியமே.

நெரி:—என்னுடை யாழியை யான்கா ணளவும்
யானு மும்முடை யில்லா ளாகேன்.

பசா:—ஆழி யெவற்களித் தேனென் றறிதியேல்,
ஆழி யெவன்பொருட் டளித்த தறிதியேல்
ஆழி யெதற்கா வளித்தது மந்த
ஆழியலா லொன்று மேற்காமை யாலந்த
ஆழியைச் சற்று மனமிலா தளித்ததும்,
அறிந்தா யெனினீயடைந்துள தாய
கோபக் கொடுமையைக் குறைத்திடுவாயே.

போர்:—ஆழியீந் தாள்தகை யதிற்பா தியையும்
ஆழி யமைதலால் நீர்அடை பெருமையும்
ஆழியின் மகிமையு மறிதிரே யாயின்
ஆழியை யகற்று திருந்திருப் பீர். அவ்
ஆழியை யகற்று திருக்க நீரும்
சற்றே யாவலாய்த் தயைசெய் திருப்பிரேல்
புனிதப் பொருளாய்ப் போற்றிப் புனைந்ததை
நேர்கென நெருக்கி நிர்ப்பந்தஞ் செய்திட
எவன்தான் விவேக மில்லா தவனே.
யானம் பத்தக்க தியாதென நெரிசா
கற்பித் தாள். ஆழியை ஒரு கன்னிகை
அடைந்தனள், இதுமெய் யன்றெனிற் சாவேன்:

பசா:—இலையம் மணி ! என் கவுரவ மென்னுயிர்
தம்பீ தாணை, ஓர் தையல் பெற் றிலளதை.
மூவா யிரம் 'டக்கற்றை' மேவாது மோதிரம்
இரந்தவோர் சட்டப் பண்டித ரேற்றனர்.
என்னுடைப் பிரிய விட்டன் னுயிர்தனை
இரட்சித் தவரே யாயினு மிலையென
மறுத்தாங் கவர்ம னேவியா குலத்துடன்
ஏகுமா விட்டேன், இன்றுரை மகளே.
யான் சொலத் தக்க தென்கொலோ, என்மனம்
நிர்ப்பந் தப்படா நிற்கமோ திரத்தைச்
சென்ற வவர்பினே செலுத்திச் சேர்த்தேன்.
நாமவர் திறத்து நாக ரிகமா
நடந்தே மிலேமெனு மெண்ணமு நாணமும்
தமியே னெஞ்சைத் தாக்கின. அன்றியும்
செய்ந்நன் றி கோறலாந் தீயமா சென்னை
எய்தி டவென்கவு ரவமிசைந் திடவிலை.
இதுபொறுத் தருள்க, என்றுரை மகளே !
விண்மீ னுமிவ் விளக்குகள் சான்று,
அறைவன் கேணீ யாண்டிருந் தனையேல்
தகைசால் பண்டிதர் தமக்குத் தருவான்
என்பா லாழியை யிரந்திருப் பாயே.

போர்:—எனக்கா நீர்வைத் திருப்பதாய்ச் சத்தியம்
உரைத்ததும் நானயந் துளதுமாம் அணியினை
அடைந்தன ராதலி லப்பண் டிதரெந்
நாளு மென்மனையினி னணுகா திருக்க.
உமைப்போல் யானு முதாரா முறுவேன்.

என்வயி னுளதெதூஉ மிலையெனே னவற்கே.
என் தேகம், என் கணவன் படுக்கை,
இவைகளை யவர்க்கிலை யென்னே னியானே.
அவரைநா னறிவேன், அதில்ஐ யம்மிலை.
இல்லினை யிகந்துநீர் என்றும் ஏகிர்.
எனைஆர் கஸ் போல் காத்திடுவீரே.
இலாமல் எனை நீர் தனிமனை யிருத்திலப்
பண்டிதர் எனக்குப் படுக்கைத்தோழராய்
அமைவார், என்றன் கனத்தின் மேலாணை.
நெரி:—இலேககற் கெதுவு மிலையெனே னியானும்.
ஆதலிற் றனித்தெனைவிட்டுநீர் அகல் வகைக்
குறித்துயோசித்துக் கொள்ளுவீராக.
கிரா:—நன்று, நீ யவ்வணம் செய்வாய் நானும்
அவனைக் கண்ணுறா திருப்பே னுகுக.
ஏனெனில் என்கண் அவன்அகப் பட்டால்
அவற்குப் பிழைப்பிலா தாக்குவேனே.
அந்:—இந்தச் சண்டைகட் கெல்லாங் காரணம்
அதிட்டமில் நானே.
போர்:— ஐயா, நீர்துயர்
ஒழிக, யாமுமை யுபசரிக்கின்றோம்.
பஸா:—**போர்ஷியா** பொறுத்தி போக்கொணா துற்ற
இந்தப் பிழையை. இந் நண்பின ரெலாம்
கேட்க வென்னெதிர் கிளருமுன் கண்கள்
சான்றாச் சாற்றுவன்.
போர்:— பாரும் அதனை,
என்னிரு கண்களிற் றன்னை யிரட்டையாக்

காண்கிறீர், ஒவ்வொரு கண்ணிலொவ்வொன்றும்.
உம்முடை யிரட்டை யுருவிலாணையும்.
அது நம் பத்தகு யாணையே யாகும்.
பசா:—இலைநா னியம்பிடு வதைநீ கேளாய்.
இப்பிழை பொறுத்தி, எனதுயி ராணை
இனியெக் காலுஞ் சத்தியம் பிழையேன்.
அந்:— (போர்ஷியாவைப் பார்த்து)
அவராக்கத்திற்கா வொரு காலென்
உடலை யுதவினேன். உம்முடை நாயகன்
ஆழியைப் பெற்ற வவரில ராவிடில்
அஃதுமுற் றபாய மடைந்தழிந் திருக்கும்.
புத்திபூர் வகமா யினியெக் காலும்
உமது காதலருண்மையிற்றவறார்
எனநா னினும்பந் தப்படு வேன், என்
ஆவியைத் தருவே னபராத மாகவே.
போர்:—ஆயினீ ரவர்க்குப் பிணையாகு வீரால்,
இதையவற் களித்து மற்றதைப் பார்க்கிலும்
நன்கு காத்திட நவின்றிடு வீரே.
அந்:—பசானி யோப்பிரபுவே! இதோ பத்திர
மாவில் வாழிகாத் திட வாணை வையும்.
பசா:—இதுவே பண்டிதற் கீந்தது, சத்தியம்.
போர்:—ஆச்சரி யம்நீ ரணைவரு மடைகிறீர்,
ஒருகடி தம்மிதோ உளது, அவகாசமாப்
படிமின்; இன்னது பல்லாரி யோடு
ஆவிருந் துய்ப்ப வந்தது வாமே.
அதனுற் போர்ஷியா பண்டித னவடன்

இலேககன் நேரிசா வெனல்லாண்பீர், நீர்
சென்றவுடனான் சென்றேன் இக்கணம்
திரும்பினேன், இனுமென் னில் லிற் புகுந்தி
லேன்.
என்பதற் கிங்குள லாரேன்சோ கரி.
நல்வர வுமக்கந் தோணியோ நவில்கிறேன்.
எதிர்பார்த் ததனினு மேற்றமா மினிய
சங்கதி யுமக்குச் சாற்றிடுவேனன்.
சீக்கிர மிக்கடி தந்திறந் திடுமின்.
உமது முக் கப்பலு முறுபொரு ளுடையவா
வல்லையிற் றுறைமுகம் வந்தது காண்பீர்.
இந்தக் கடிதமெவ் விநோதச் செயலால்
என்கைப் பட்ட தென்றறி வானீர்
முயலன் மின்.

**அந்:**— நான் மோனமா யிருப்பேன்.

**பசா:**—நீ பண் டிதனோ? நினையறிந் திலனேன்.

**கிரா:**—நீயிலே ககனோ? நினையறிந் திலனேன்.

**அந்:**—இனியமா தேயெற் குயிர்வாழ் வீந்தனிர்.
ஏனெனி லிதனு லென்றன் கப்பல்கள்
துறைமுகஞ் சுகமாய்த் துன்னிய துணர்ந்தேன்.

**போர்:**—என்னலா ரேன்சோ என்றனி லேககன்
உமக்கு நற்சில வாதர வுடையான்.

**நேரி:**—ஆமவை யவர்க்குப் பணமிலா தீவேன்.
அதனலாத்தி யுளயூ தன்மற்
றிறந்திடுங் காலவ னிடத்துள வெல்லாச்
செல்வமு நீருஞ் ஜேசிக்கா தானும்

அடைந்திடு முரிமை யளித்திடு கின்ற
முக்கிய தான முறியீந் திடுவேன்.

லாரேன்சோ:—வனப்புடை மாதரே! வறிய மானுடர்
தம் வழிப்பிர சாதம் வழங்குகின் றீரால்.

போர்ஷியா:—விடியற் கால மானது. விசேடம்
எல்லா மினு நீர் முழுவது மறியீர்
எனல்நிச் சயமே. எல்லா நாமும்
உள்ளே செல்வோம். உண்மை யெதிர்மொழி
ஈவதா வாணை யிட்டுநும் வினுக்கட்
கெல்லா மெதிர்விடை மெய்யா விளம்புவேம்.

கிராஷியானோ:—நல்லது நானுயிர் வாழ்ந்திடு மளவும்
நெரிசா மோதிரந் தனைநீக் காமற்
பாதுகாத் தற்குப் படும்பயம் போல
வேறெதற் கும்பய மேவேன் வாழிப.

(எல்லாரும் போதல்)

முற்றிற்று.



# அநுபந்தம்.

---

பக்கம். வரி. குறிப்புரை.

1 : 1-10 அந்தோனியோவுக்குக் காரணமில்லாமலே உண்டான சஞ்சலம் பின்வருவதைக்காட்டும் முற்குறி.

4 : 70 இருமுக ஜானஸ்-ஜானஸ், லத்தீன் புராண கதைத் தெய்வங்களில் ஒன்று. இதற்கு இரண்டு முகங்களுண்டு. ஒன்று சிரித்தமுகம், மற்றொன்று துக்கமுகம். இருவகை மனிதர் இங்குக்கூறப்படுதலால் இவ்வகைத் தெய்வம் இங்குப் பொருத்தம்.

,, : 76 நேஸ்தார்-கிரேக்க வீரரில் ஒருவர். எவ்வித மான பரிகாசமும் இவருக்கு நகை விளைக்காது. எப்பொழுதும் கடுமுக முடையவராக வே இருப்பார்.

6 : 117-119 விசனத்தில் நாம் நெட்டுயிர்ப்பிடுங்கால் ஒவ்வொரு பெருமூச்சிற்கும் ஒவ்வொரு திவலை இரத்தம் கெட்டுவிடுகிறது என்பது பூர்வீகர் அபிப்பிராயம். இது பிழை.

,, : 124 கடுகடுப்புடையவனுக்குக் காமாலை வரும் என்பது வைத்திய சாஸ்திர சித்தம்.

9 : 190-206 ஒரு அம்பை எய்து அது தொலைந்து போயின், அதைப்பெற மற்றொரு அம்பை அதேவிசையுடன் எய்யின், பின்னெய்தது முன்னெய்த தற்குச் சற்றேறக்குறையச் சமீபத்தில் விழு

பக்கம். வரி. குறிப்புரை.

மாதலால், இரண்டு அம்புகளையும் பெறலாம்; அதுபோல முன் எனக்கு நீர் தந்தகடன் செலுத்தப்படாமலிருத்தலில் அது நீரிழந்ததே ஆதலின் இன்னும் ஒருமுறை நீர்சடன் உதவுவீரேல் நான் சாக்கிரதையாகவிருந்து உம்மிடத்தில் நான் பட்டுள்ள கடனை யெல்லாம் தீர்த்துவிடும் வகை தேடுவேன்.

10 : 217 பெல்மண்டு-ஒரு நகரத்தின் பெயர்.

222-223 கேந்றே புத்திரி-சேந்றே வின்புத்திரி. இவள் புருட்டசின் மனைவி. இவள் பெயரும் போர்ஷியா, கற்பு, புத்திக்கூர்மை, நற்குணம் முதலியனவகளில் சிறந்தவள். இந்நாடகத்தில் கூறப்படும் போர்ஷியா வும் அவளுக்குச் சமமானவள்.

,, 229 தமிழர் கருங்குழலைக் கருதுவதுபோல் ஐரோப்பியர் பொன்னிறக் கூர்தலைப் புகழுவர்.

,, 232-234 பொன்மயிர் கால்கோ என்னும் தேசத்தில் இருந்ததாகவும் அதை மிகுந்த சிரமத்துடன் ஜேசன் என்பவன் சென்று பெற்றதாகவும் ஒரு புராணக்கதை.

அளவில்லாதவரர் ஆகிய ஜேசன்கள்.

ஜேசன் கட்டப்பட்டுப் பொன்னுரோமம்பெறக் கால்க்கோவுக்குச் சென்றதுபோல, போர்ஷியாவை மணப்புரிய விருப்புற்ற அநேகர் பெல்மண்டு நகரத்திற்கு மிகுந்த கட்டத்துதுடன் வருகிறுர்கள்.

பக்கம். வரி. குறிப்புரை.

17 : 140-148 இங்கிலீஷ்காரன் ஒருவன் ஸ்காட்லண்டு தேசத்தான் ஒருவனை ஒரு அடி அடித்தான். அவனுக்குத் துணையாக பிரேஞ்சுக்காரன் ஒருவன் வந்தான். அவனுக்கும் ஒரு அடி விழுந்தது. என்பது கருத்து.

சாசனம் எழுதுவதில் அதை யெழுதிக்கொடுப்போன் முதலிலும் அவனுக்குப்பிணையாயிருப்பவன் அதன் கீழும் எழுதுவது வழக்கம்.

இங்கிலீஷ்காரனுக்கு ஸ்காட்லண்டு தேசத்தானும் பிரேஞ்சுக்காரனும் ஒன்று சேர்ந்தாலும் ஈடல்ல என்பதைக் குறிப்பிக்கிறது.

19 : 188 சிபில்லா-பின்வருவதை முன் சொல்லுபவள். அவளை அப்பாலோ என்னும் தெய்வம் மோகித்து உனக்கு என்ன வரம்வேண்டுமென்று வினவ, தன்கையில் பிடித்த ஒரு பிடி புழுதியிலுள்ள புழுதிகளின் எண்ணங்கொண்டவயது தனக்குத் தரவேண்டும் என்றுகேட்டாள்.

,, 190 டயானு-கற்பு, கலியாணம், இவைகளுக்கு அதிஷ்டான தெய்வம். இது எப்பொழுதும் கன்னியாகவே இருப்பது.

22 : 1 "டக்கற்று":—ஒருவகை நாணயம்.

23 : 22-27 டிரிப்போலி, இண்டீசு, மெக்சிகோ, இங்கிலாந்து—பற்பல இடங்கள்.

,, 25 பரிவர்த்தன சாலே—வர்த்தகர்கூடி வர்த்தக விஷயம் பேசுமிடம்.

| பக்கம். | வரி. | குறிப்புரை. |
|---|---|---|
| 24 : | 51 | நாசரத்து தீர்க்கதரிசி—இயேசுக்கிறிஸ்து. |
| ,, | 64 | இச்சகத்தண்டற்காரன் — இச்சகம் பேசுகின்ற தண்டற்காரன்; அதாவது வரி பெறுவோன். ஷைலாக் தனக்கு அந்தோனியோவின் மேலுள்ள வெறுப்பைக் காட்டுகிறான். |
| 25 : | 74 | குலம்—யூதகுலம், இவர்கள் கிறிஸ்து பிறந்ததாக ஏற்றுக்கொள்ளார். |
| 26 : | 96-104 | பசானியோவைப்பார்த்துச் சொல்லுகிறது இது. |
| | | முதலிய ஆபிராம், யாக்கோபு, லபன், இவர்கள் கிறிஸ்தவர்களில் முன்னோர்கள். |
| 28 : | 152 | நாணயச்சாலை— பரிவர்த்தன சாலை போன்றது—பணம் கொடுத்து வாங்குமிடம். |
| | 154 | தோள் விதிர்ப்பு—தோளை அசைத்தல். இது ஆங்கிலேயர் முதலியோரின் வழக்கம். |
| 34 : | 39 | சுலுத்தான் சோலைமான்—துருக்க தேசச்சக்கரவர்த்தி. இவன் பேர்ஷியா தேசத்தின் மேல் படையெடுத்துச்சென்றவன். |
| ,, | 41 | சோபியா—பேர்ஷியா தேசத்தரசன். |
| 35 : | 49 | எர்க்குலீஸ்—வல்லமையே உருவாகிய ஒருதெய்வம். |
| | | லிக்காஸ்—எர்க்குலீஸின் வேலைக்காரன். |
| ,, | 53 | ஆல்சிடீஸ்—எர்க்குலீஸின் வேறொரு பெயர். |

பக்கம். வரி, குறிப்புரை.

37 : ... லான்சிலட் காபோ என்பவன் ஒருவித விகடக் கூத்தன். இவன் சொல்லுவதில் சில பரிகாசமாயும், சில அருத்தமற்றவையாயும், சில ஒன்றற்கு மற்றொன்றை மாறிச் சொல்லுவனவாகவும் இருக்கும்.

40 : 75-76 "வாலிப லான்சிலட் துரையைப்பற்றியா கேட்கிறீர்" என்று வெளிப்படையாகச் சொல்லுலுகிறான்.

41 : 98 மூன்று சகோதரிகள்—பூர்விக புராணக் கதையின்படி விதிப்பயன் கொடுப்போர் மூவர்.

42 : 133-134 லான்சிலட் பேசிக்கொண்டே முழங்கால்படியிடுகிறான். காபோ அவனை எழுந்திருக்கச் சொல்லுகிறான்.

" 138-140 பரிகாச வார்த்தைகள்.

43 : 154 டாபீன் குதிரையின் பெயர்.

47 : 242 'சொரிசு' 'மயில்' 'தொப்பி' 'தீர்மானம்' என்னும் பதங்களும் இன்னும் சில நூதன பதங்களும் இந்நூலின்கண் உபயோகப்படுத்தப் பட்டுள்ளன.

" 246 கடவுளின் கிருபை பொருட்செல்வத்திற்கு மேலானது என்னும் கருத்துள்ள பழமொழி.

" 253-254 லியோநார்டோவிடம் சொல்லும் வார்த்தைகள்.

" 257 விவிலிய புஸ்தகம்— கிறிஸ்தவர்களின் வேத புஸ்தகம்.

| பக்கம். | வரி. | குறிப்புரை. |
|---|---|---|
| ,, | 259 | இத்தலி — ஒரு தேசம். |
| ,, | 264 | இங்கே—கை ரேகைகளைச் சுட்டிச் சொல்லுகிறான். |
| 49 : | 293 | பேல்மண்டு — போர்ஷியாவின் நகரம். |
| 50 : | 316 | மறைத்துக் காட்டுகிறான். |
| ,, | 317 | ஓம் என நிகழ்த்தலும். |
| 53 : | 3 | ஐரோப்பியருக்குள் புருஷரும் ஸ்திரீகளும் மாறுவேடம் தரித்து நடிப்பது முன்வழக்கம். இராக்காலத்தில் விருந்துண்ட பின்னரே இது நிகழும். |
| 56 : | 4 | என்ன, ஜெசிக்கா. இவ்வார்த்தைகள் ஜெசிக்காவையழைக்க. |
| ,, | 6 | என்ன, ஜெசிக்கா — முன்போல். |
| ,, | 8 | கேட்டிலே ஜெசிக்கா—முன்போல். லான்சிலட்டுடன் பேசும்பொழுதே ஜெசிக்காவைக் கூப்பிடுகிறான். |
| 57 : | 24-26 | கனவில் பணப்பையைக் காணின் தீமை விளையும் என்பது யூதருடைய கொள்கை. |
| ,, | 29 | லான்சிலட் விகடக் கூத்தனுகவே 'வரவை' என்று சொல்லுவதற்குப் பதில் 'வசவை' என்று சொல்லுகிறான். |

பக்கம். வரி. குறிப்புரை.

,, 31 ஷைலாக் தான் வசவை எதிர்பார்க்கிறதாகச் சொல்லுகிறான்.

,, 36-39 விபூதித்திருவிழா. இது புதன்கிழமையன்று வருவது. ரோமன்காதலிக் கிறிஸ்தவர்களின் பண்டிகைகளில் ஒன்று. 'ஈஸ்டர்' என்பது மற்றொரு பண்டிகை. திங்கட்கிழமை காலையும்புதன்கிழமை மாலையும் ஒன்றாக வந்ததாகவும் அப்பொழுது தன் நாசியிலிருந்து இரத்தம் வந்ததாகவும் கூறுகிறான்.

58 45 வேஷக்கூத்திற்கு முகத்திற்கு மெருகுதைலம் பூசிக்கொள்ளுகிற வழக்கம்.

,, 54-55 அடா—மொழிமோ—லான்சிலட்டிடத்தில் சொல்லுகிறான்.

,, 61 ஆகாரேச்சம்— ஆகார் என்பவளின் வமிசத்தான். யூதர்களால் இகழப்படும் ஒரு சாதியிற் சேர்ந்தவன். ஆபிராம் என்பவனுடைய மனைவி சாரா என்பவளின் பெண்ணடிமை ஆகார்.

60 : 10 சித்தசன் கபோதம்—மன்மதன் தேரிழுப்பவை புறாக்கள். ரோமர்களில் மன்மதனுக்குத் தாய் வீனஸ் என்பவள் என்பதும் அவளே இன்பத்திற்கு அதிஷ்டான தேவதை யென்பதும் கொள்கை.

62 : 60 ஒருவன் வெட்கமடையின் அவன் முகம் சிவப்பாகும். இதை ஐரோப்பியருள் காணலாம்

பக்கம். வரி. குறிப்புரை.

76 : 56-58 ஐரோப்பியரில் தாழ்ந்தோர் உயர்ந்தோர் முன் தலைப்பாகையில்லாதிருத்தல் வேண்டும்.

79 : 110 துரையென்று வேடிக்கையாகச்சொல்லுகிறாள்.

,, 112 வெனிஷிய— வெனிஸ் நகரத்திய.

,, 118-122 குளிர் தேசங்களில் முதுவேனிற் காலமே அதிகமாகக் கொண்டாடப்படும் காலம்.

88 : 209 லீயா-ஷைலாக்கின் இறந்துபோன மனைவி.

92 : 62-66 அன்னப்புள் பாடிக்கொண்டே இறக்கும் என்பது ஆங்கிலேய முன்னோர் துணிவு.

93 : 73 கிறிஸ்தவர்களின் கலியாணம் தேவாலயங்களில் நடத்தப்படும். அதற்குக் குறியாக காலைமுதல் அப்போதைக் கட்போது மணியடித்தல் வழக்கம்.

,, 74-84 ட்ரோஜன் – டிராய் நகரத்தான்.

ஆல்சிடீஸ் என்பது எர்க்கியுலீஸ்—க்கு வேறொருபெயர். கதைவருமாறு; டிராய் நகரம் கடற்கரையிலுள்ள பட்டினம். அதைக் கடல் வெள்ளம் கொண்டு போகாதபடி ஒரு மதில் வருணனுதவியாற் கட்டப்பட்டது. வருணனுக்குக் கூலிகொடாததால் அந்நகரையுடைய நாட்டையெல்லாம் வெள்ளத்தால் அழித்து விடுவதாக அவன் பயமுறுத்த, அந்நாட்டு அரசனுடைய மகளைத் தனக்குப் பலியிட்டால்

பக்கம். வரி. குறிப்புரை.

தான் அழியாதிருப்பதாக அவன் சொன்னான். அப்படியே அவளை ஒருகடலரக்கனுக்குப் பலியாக ஒரு பாறையில் கட்டி வைத்தனர். அவ்வரசன் தன்மகளை சிறை நீப்பின் தனக்கு வியாழன் கொடுத்த இரண்டு குதிரைகளைப் பரிசளிப்பதாக எர்க்கியுலீசுக்குச் சொன்னான். மிக்க வல்லமையையுடைய எர்க்கியுலீஸ் அவளை விடுவித்தான்.

93 : 88-95 ஒரு புருஷனும் ஒரு ஸ்திரீயும் ஒருவரையொருவர் பார்த்தவுடன் அன்புண்டாகிறது. அதாவது அன்பு முளைக்குமிடம் கண். அவ்வன்பு விருத்தியாவது ஒருவரை யொருவர் அடிக்கடி பார்ப்பதால். இவவிதம் பார்ப்பதில் ஒருவர் குணம் ஒருவருக்கு ஒவ்வாவிடில் அவ்வன்பு இலதாகி விடும். அதாவது தொட்டிலாகிய கண்ணிலேயே இறந்துவிடும். அப்படிப்பட்ட பயனற்ற அன்பிர்குச் சாவுமணி அறையப்படட்டும்.

94 : 109 மார்ஸ் – யுத்தத்திர்கு அதிஷ்டான தேவதை.

95 : 120-123 அழகு செய்யப் பூண்முதலிய வற்றையணிவது அணிபவரைக் கனமுடையவராக்காது பிறரால் இலேசாக அதாவது கேவலமாக நினைக்கும்படி செய்வதே.

,, 123-129 பெண்கள் வேறு உரோமத்தைத் தங்கள் தலையிற்றரித்து அழகு செய்வதை யிகழ்கிறார்.

பக்கம். வரி. குறிப்புரை.

,, 132 இந்தியன் எழில்-கறுப்புநிறம்.

,, 136 அழகு கபடமார் மொழி.

,, 137 மைடஸ்—விரிஜியா தேசத்தரசன். அவன் தான் தொட்டதெல்லாம் பொன்னுக வேண்டுமென்று பிரார்த்தித்து அவ்வரம் பெற்ருன்: பின்பு அவன் சாப்பிட உணவையும் குடிக்கத் தண்ணீர் முதலியவைகளையும் தொட்டபொழுதெல்லாம் அவைகள் பொன்னய் மாற, அன்ன பானதிகளில்லாமல் பசியால் வருந்தி அவ்வரத்தைப் பிறகு மாற்றிக் கொண்டான்.

114: 58 படுஆ—ஒருநகரம்.

,, 64 பால்த்தசார் என்பவன் பதில் சொல்ல ஆரம்பிப்பதைத் தடுக்கிருள்.

118: 26-27 சில்லா, கேரிப்டீசு—இற்றலி, சிசிலி இவ்விரண்டு தேசங்களுக்கு மத்தியில் மேசின ஜலசந்தியிலுள்ள இரண்டு பாறைகள். இவைகளின் மத்தியில் செல்லுங்கால் கப்பல்கள் இவைகளில் தாக்கிக் கெடுதி நேரிடுவது வழக்கம்.

,, 40 கரிமேல் வைக்க—கரியினுல் நெருப்புண்டாக்கி அதில் பன்றிக்கறியைத் தின்னும் பக்குவமாக்க.

பக்கம். வரி. குறிப்புரை.

119 : 64-79 லான்சிலட் வார்த்தைகளின் அருத்தங்களை மாற்றி விகடம் பேசுகிறுன். 'அவர்களை யுணவுக்கு ஆயத்தமாயிருக்கத் தெரியப்படுத்து' என்பது நாங்கள் உண்ண அவர்களைப் போசனம் ஆயத்தஞ் செய்யச் சொல்லு என்றருத்தம். அவன் அவர்கள் சாப்பிட ஆயத்தமாயிருக்கிறுர்கள் என்கிறுன். 'அவர்களை யுணவு சித்தமாக்கக் கட்டளையிடும்' என்பது நாங்கள் சாப்பிடப் பரிமாறச் செய்யும் என்று அருத்தம். அவன் சமையல் ஆய்விட்டது என்கிறுன்.

மேசைமேல் துணிபோட்டு அதன்மேல் வைத்துச் சாப்பிடுகிறது ஐரோப்பியர் வழக்கம். அதற்கு மேசையை 'மூடு' என்று சொல்லுகிறது. அவன் உயர்ந்தோர் முன் தாழ்ந்தோர் தலையை மூடாமலிருக்க வேண்டியதைக் குறித்துப் பேசுகிறுன்.

126 : 65 தோலொத்து — தோலினுல் செய்த ஊது கருவி.

131 : 179 பிதகோராசு ஒருகிரேக்க தத்துவசாஸ்திரி. இவர் கொள்கை ஜன்மாந்தரம் உண்டு என்பது.

137 : 313 டானியல். கிறிஸ்தவக் கிரந்தத்தில்ஞானமும் புத்திக் கூர்மையுமுடைய ஒரு வாலிபர்,

,, 328 னிதயங்—னிதயங்

141 : 415 பராப்பஸ். இவன் ஒரு திருடன், கொலைக்காரன் கிறிஸ்துவிலும் இவனை யூதர் மேலாக மதித்தனர். கிறிஸ்தவன் ஒருவன் தன்மகளைக் கலியாணஞ் செய்வதிலும் இத்துன்மார்க்கன்

பக்கம். வரி. குறிப்புரை.

மரபில் ஒருவன் அவளைக் கலியாணஞ்செய்வது தனக்குப் பிரியம் என்கிறான்.

146 : 548-553 கிறிஸ்தவர்களுள் ஞானஸ்நானம் பெறுவது வழக்கம். இது கிறிஸ்தவனாகிறதற்காகச் செய்யப்படும் சடங்கு. இதில் ஞானஸ்நானம்பெறுபவனுக்கு இருவர் ஞானத்தந்தையராகக்குறிக்கப்படுவர். இவ்விடத்தில் கிராஷியானோ சொல்வதின் அருத்தமாவது நான் உன்னுடைய வழக்கைத் தீர்க்கும் நியாயாதிபதியாக இருப்பின் 10 பேர்களை ஜூரிகளாக வைத்துக்கொண்டு உனக்குத் தூக்குத்தண்டனை விதிப்பேன்.

153 : 8 கிரேசிட் என்பவள் ஒருபெண். அவள் கிரேக்கரின் கூடாரங்களுள் இருக்க டிராய்லஸ் என்பவன் மதில்மேலேறி அவள் வெளியில் வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தான் என்பது. இதுவும் பின்வருவனவும் காதலரை நோக்கி காதலிகளும் காதலிகளை நோக்கிக் காதலரும் சந்திரிகையில் செய்தவை.

„ 12 திஸ்பி என்பவளும் பிரமஸ் என்பவனும் ஒருவர் மீது ஒருவர் ஆசைப்பட்டார்கள். அவர்கள் கலியாணஞ் செய்வதை அவர்களின் பெற்றோர் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால் இரகசியமாக ஓரிடத்தில் ஒருவரையொருவர் சந்திக்க ஏற்பாடு செய்துகொண்டார்கள். அவ்விடத்திற்கு திஸ்பி முதலில்வர அவ்விடத்திலிருந்த ஒரு சிங்கத்தின் நிழலை நிலவு வெளிச்சத்தில் கண்டு ஓட்டம்பிடித்தாள் ஓடும்பொழுது மேலாடை கீழேவிழுந்துவிட்டது. அப்பொழுதுதான் ஒரு எருதை அச்சிங்கம் கொன்றிருந்ததால் அவ்வுதிரம் இத்துணி

பக்கம். வரி. குறிப்புரை.

யில் பட்டது. பிரமஸ் அவ்விடம் வந்து இரத்தம் தோய்ந்த திஸ்பியின் மேலாடையைப்பார்த்து அவள் கொல்லப்பட்டாளாக நினைத்துத் தான் இறந்து விடுகிறான். திஸ்பி திரும்பிவந்து பிரமஸ் இறந்து கிடப்பதைக்கண்டு தன்னைக் குத்திக் கொள்ளுகிறாள். இது ஒரு கதை.

153 : 15 டீடோ என்பவள் ஈனியஸ் என்பவனைக் காமுற்றாள். அவன் அவளை விட்டு விட்டான். இவ்விதம் திரஸ்கரிக்கப்பட்ட காதலுக்கு வில்லோக்கிளை ஓரடையாளம். 'வில்லோ ஒரு மரம்.

154 : 20 மேடியா என்பவள் தன் மாமனாராகிய ஈஸன் என்ற கிழவனை மந்திரஞ் செய்து வாலிபனாக்கினாள்.

,, 37 'இரவோ' — இரவில் நடந்த செய்கைகளைச் சொல்லுவேன.

155 : 48 சிலுவை—இயேசுக்கிறிஸ்துவைக் கொன்றதைக் குறிப்பது. அவ்வடையாளத்தைக் 'கிறிஸ்தவர் கொண்டாடுவார்கள்—இங்கே அச்சிலுவைக ளிருக்குமிடங்கள்.

,, 58 சொலா—ஏர்விதக் கூச்சல்.

156 : 94 டயானா—சந்திரன்.

157 : 111 ஆர்வியஸ்—கிரேக்க தேசத்துப் புராண வித்வானும் கவியும்.

பக்கம். வரி. குறிப்புரை.

158 : 123 எரிபஸ்—நரகம்; இருள் மயம்.

159 : 152 எண்டிமியன் என்பவன் ஒரு இடைப்பையன். அவனுடைய அழகிற்காகச் சந்திரன் (டயா ஹ) அவனை லட்மஸ் மலையின் சிகரத்தில் தூங்கச்செய்து பின் அவனை ஒவ்வொரு இரவும் முத்தமிட்டதாகக் கதை.

,, 152-154 சந்திரன் அஸ்தமித்து விட்டது அல்லது அஸ்தமிக்கப்போகிறது என்பது பொருள்.

160 : 179-181 பூமியுருண்டையாய்ச் சூரியனைச் சுற்றிவருவதால் சூரியனுக்கு நேரேயிருக்கிற பூமியின் பக்கம் வெளிச்சமுடையதாக இருக்கையில் பூமியின் மற்றொரு பாகம் சூரியனுக்குச் சமீபத்தில் இல்லாததால் இருட்டாக விருக்கும். இவ்விடத்தில் பசானியோ தன் மனைவியைப் பார்த்து அவ்விதம் இருட்டாக இருக்கிற இடத்திற்கு நீபோனால் அங்கும் சூரியனுடைய வெளிச்சமிருப்பது போல் பிரகாசமாக விருக்குமென்று புகழ்ந்து கூறுகிறான்.

182 நகை—இன்பம்.

,, 183 நகை—சிரிப்பு.

,, 184 அத்தகை—நகைக்காளாகும்.

166 : 324 ஆர்கஸ்—நூறு கண்களையுடைய ஒரு பௌராணிக பிராணி.

---

